ஞானச் சித்தர்

# குணங்குடியார்

## வாழ்வும் வாக்கும்




ஜெகாதா





அழகு பதிப்பகம்
15/21, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம், சென்னை-600 049.
தொலைபேசி: 26502086

GNANA SIDDHAR KUNANGUDIYAR VAZHVUM VAAKKUM

Jegatha



முதல் பதிப்பு : 2005

விலை : ரூ.65.00

மொத்தப் பக்கங்கள் : 216

வெளியிட்டோர் : அழகு பதிப்பகம்
15/21, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு,
இராஜாஜி நகர் விரிவு,
வில்லிவாக்கம்,
சென்னை-600 049.
தொலைபேசி: 26502086

ஒளி அச்சு மற்றும் முன் அட்டை வடிவமைப்பு : சு. அசோக்குமார்,
Digital Designer
சென்னை-600 080.
செல்: 94440 09048

அச்சிட்டோர் : சென்னை ஆர்ட் பிரிண்டர்ஸ்,
சென்னை-600 021.
தொலைபேசி: 55692807

## இறைநேசம் தேடும் வாசக அன்பர்களுக்கு...

அறிவு தேடி ஓடுபவனிடம் தான் கேள்வி பிறக்கிறது. நினைவைப் பூட்டுவது எல்லா வகையான ஞானத்துக்கும் திறவுகோலாகும்.

இதயம் திறக்கவும் எதையும் துறக்கவும் ஒரு துணிவு வேண்டும். பேரின்ப வேட்டைக்கு ஆசை வெறி பிடித்த மனத்தை துணையாகக் கொள்ளலாமோ?

அகந்தை எனும் பாறையை உடைத்தெறிந்து மாயை எனும் மலைப் பாம்பை வெட்டித் தள்ளுவதற்குத் தவக்கனலை மூட்டி இறைக் காதலில் மூழ்கியவர் குணங்குடி மஸ்தான் சாகிபு.

இறை ஜோதியைக் காணில் வேறென்ன இன்பம், அதுவே பேரின்பம்!

உலக வாழ்வில் முழுத்துறவியான ஞானச் சித்தர் குணங்குடியார் தெய்வக் காதலியைக் கனவில் கண்டு, மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறையில் இருவரும் கலந்திருப்பதாகக் கவிதை பாடுகிறார்.

நான் எனும் உணர்வு தோன்றாத ஞானி அவர். குணங்குடியாரின் பாடல் பலவற்றிலும் புலனின்பங்களை எதிர்த் தெழுப்பும் போர் முழக்கம் கேட்கிறது.

குணங்குடியாரின் படைப்புகள் தமிழ்ச் சித்தர்களின் வரிசையில் வைத்துப் போற்றத்தக்க பெருமையைப் பெற்றுள்ளன.

நாகம் தோலுரித்தாற்போல் அகப்பற்றும் புறப்பற்றும் முற்றும் துறந்த ஞானச் சித்தர் குணங்குடியாரின் வாழ்வும் வாக்கும் தரணியில் யாவர்க்கும் தரைபுரண்டோடி. தாகம் தீர்க்கும் பெருநதியைப் போன்றது.

இறைநேசமும் ஞானவேட்கையும் மிகுந்த வாசக அன்பர்களுக்கு ஞானச் சித்தர் குணங்குடியாரின் செய்திகள் நல்வழிகாட்டலாய் அமையும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. இந்நூலை அழகுற வெளிக் கொணர்ந்துள்ள அழகு பதிப்பகத்தார் என்றென்றும் மகிழ்ச்சிக்கும் நன்றிக்கும் உரியவர்கள் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்றும் அன்புடன்
ஜெகாதா

ஜெகாதா
1/533B6 வசந்த நகர்
வெளிப்பட்டணம்
இராமநாதபுரம் 623504
04567 - 226499.
செல்: 94430 04683

# பொருளடக்கம்

பக்கம்

# ஞானச்சித்தர்
# குணங்குடியார்
## வாழ்வும் வாக்கும்

### 1. இஸ்லாமிய சூபித்துவம் தந்த தமிழ் ஞானச்சித்தர்

சமயங்கள் பொதுவாக இறை நம்பிக்கை கொண்டவை என்றாலும், இறைவனை மூலமாகக் கொண்டே சமயங்கள் எழுந்தன என்றுகூட வாதிட்டாலும், நுட்புலமாக உற்று நோக்கினால் அதன் அடிப்படைக் கொள்கைகளில் நாம் வேற்றுமை காண்பது அரிது!

தமிழ் நாட்டுச் சித்தர்களெனப் போற்றப்படும் ஞானிகள் அனைவரும் அவர்கள் எச்சமயத்தைச் சேர்ந்தவர்களானாலும் ஒரே முறையில் அவர்கள் தங்கள் கருத்துக்களை எடுத்து வைத்திருப்பதுவே அதற்குச் சான்றாகும்.

இஸ்லாமிய சூபி கவிஞர்களுள் பெரிதும் தமிழிலக்கியப் பரப்பில் அறிமுகமான பெருமை குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களைச் சாரும்.

மஸ்தான் சாகிபு சூபி இலக்கியங்கள் அழியாத பேழையாக தமிழிலக்கிய வரலாற்றில் இடம் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை.

இவரது படைப்புகள் தமிழ்ச் சித்தர்களின் வரிசையில் வைத்துப் போற்றத்தக்க பெருமையைப் பெற்றுள்ளன.

சித்தர்கள் பரிபாஷையைத் தமது பாடல்களில் பயன்படுத்துவது போன்று ஆன்மிகத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களும் அத்தகைய உத்தியைக் கையாள்வது வழக்கம். குணங்குடி மஸ்தானும் தமது பாடல்களில் இத்தகைய உத்திகளைப் பெருமளவில் கையாண்டுள்ளார்.

சூபித்துவம் என்பது வாழ்க்கையின் அகப்புறத் தூய்மையாகும். 'தூய்மையின் மேல் கம்பளி அணிபவர்; ஆசைகளுக்கு அச்சமூட்டுபவர்; உலகைத் துறந்து நபிகளின் வழியில் நடப்பவர்' என்று சூபியை வர்ணிக்கிறார் அபுஅலித்பாரி.

திருமறையும் நபிகள் நாயக வழி முறையில் சூபித்துவத்துக்கு மூல ஊற்றுக்களாக உள்ளன.

இறைக் காதலில் போதை மிகுந்தவரை மஸ்தான் என்று அழைப்பது மரபு. 'மஸ்த்' எனும் பாரசீகச் சொல்லுக்கு போதை, மயக்கம் என்று பொருள். 'சாகிபு' எனும் அரபுச் சொல்லுக்கு தோழர் என்பது பொருள்.

இறைக்காதலில் போதை மிகுந்து சிறந்தாலும் சித்திகள் பல செய்தாலும் சுல்தான் அப்துல் காதிர் எனும் இயற்பெயர் மறைந்து மஸ்தான் சாகிபு என்று இந்த ஞானச் சித்தர் அழைக்கப்படுகிறார்.

'சூபி' என்ற சொல்லுக்கு உலகிலிருந்து விலகிக் கொள்வது ஆன்மாவை விலக்கிக் கொள்வது, வீடு முதலியவற்றை விட்டு நீங்குவது, புலனின்பம் துறப்பது, ஒழுக்கத்தையும் மனத்தையும் தூய்மைப்படுத்துவது,

நெஞ்சை விரிவுபடுத்துவது என்று விரிவாகப் பொருள் கொள்ளலாம்.

மத அடிப்படையில் மக்கள் வேறுபடுதலை குணங்குடி மஸ்தான் சாகிபு தமது பாடல்களில் கண்டித்துள்ளார்.

எங்கும் அருள் நெறிப் பரப்பும் அன்பு மதமே தமக்கு வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார். சூபிகள் அருள் மிகுந்த இறைவனை, பாவங்களை மன்னிக்கும் பண்பாளனாகக் கொள்வர். மன்னிக்கும் இறைப்பண்பை மஸ்தான் பல இடங்களில் பாடியுள்ளார்.

'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்' எனும் பொருள் கொண்ட 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிற்றஹீம்' என்னும் தனது முதல் கீர்த்தனையில் குணங்குடி மஸ்தான் பாடியுள்ளார்.

ஆன்மாவை விளக்கமாக இறை மறையோ இறைத் தூதரோ விளக்கவில்லை. சூபிக்கள் ஆன்மா குறித்து விளக்க முயன்றுள்ளனர். ஆன்மாவின் இறைச்செயல்பற்றி மஸ்தான் சாகிபு பாடும்போது, 'உயிருக்குள் உயிராய்', 'உள்ளுள் உயிராய்' என்று குறிப்பிடுகிறார்.

உடல் நிரந்தரமற்ற தென்பதையும் இறைவன் கொடுத்த உயிர் நிலையானது என்பதையும் இவர் புலப்படுத்துகிறார்.

உடலை இயக்க வல்லதாக உயிர் இருப்பினும் அந்த உயிரை இயக்க வல்லதாக இறைவன் இருக்கிறான் என்கிறார்.

மனிதனுக்கு அடிப்படைத் தேவையான ஆத்ம ஞானத்தை விளக்கும் 'சூபித்துவம்' பற்றி தமது பாடல்கள் அனைத்திலும் மஸ்தான் சாகிபு கருக்கொண்டிருக்கிறார்.

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் தனிப்பெரும் பிரிவாகத் தோன்றி வளர்வதற்கு குணங்குடி மஸ்தான் சாகிபுவின் பங்களிப்பு எவராலும் மறுக்கப்படுவதற்கில்லை.

ஆத்ம ஞானத்திற்கான ஞானிகளின் வழிமுறைகள் வேறுபட்டிருப்பினும் உலகனைத்தும் உள்ள ஆத்மஞானி களிடத்தில் இறையனுபவ நிலையைப் பெறுவதில் பொதுமைத் தன்மை இருப்பதை நன்கு உணர முடிகிறது.

ஞானம் என்பது எல்லாவகையான அறிவின் உச்ச நிலையை சுட்டிக்காட்டுகிறது. மெய்ஞானம் என்பது உயரிய விழுமிய ஆன்மிகத்துடன் தொடர்பு கொண்டது.

தெய்வீகக் காதலும் தெய்வீக பக்தியும் சூபித்துவத்தின் அடிப்படை. ஒரு சூபி பார்க்குமிடமெல்லாம் அல்லாஹ்வின் நினைவைத் தவிர வேறொன்றையும் காண்பதில்லை. இத்தகு மெய்ஞானமடைந்த நிலையில் அல்லாஹ்வுக்கு மிகவும் நெருக்கமானவராக ஒரு சூபி தம்மைத்தாமே உயர்த்திக் கொள்கிறார். இதுவே சூபித்துவக் கோட்பாட்டின் உச்சபட்ச உன்னத பரிபக்குவ நிலையாகக் கருதப்படுகிறது.

ஆன்மா என்பது இறைவனிடமிருந்து தோற்றம் பெற்றதாகும். இந்நிலையில் ஆன்மாவிற்கு உலகம் அந்நியமாக இருக்கிறது. எங்கிருந்து வந்ததோ அங்கே திரும்பச் செல்ல வேண்டும் எனும் தாகத்தோடு என்றும் இருப்பது என்று மஸ்தான் சாகிபு குறிப்பிடுகின்றார்.

'அந்நியம தான பிரபஞ்சம்' என்று அதன் பொருட்டே பாடுகின்றார் இவர். ஆன்மாவின் உயர்ச்சிக்கு முதல் நிலையாகத் தன்னையறிதல் வேண்டும்.

இவ்வுடலை வாகனமாக்கி இயங்கும் ஆன்மா அந்நியமாக இருப்பதால் அது பொருந்தும் இடமான

இறைவனை நாடுகிறது. ஆன்மா இறைவனை நாடுகிறது என்பதை அடையாளம் கண்டு கொள்வதற்கு குருவருள் வேண்டும்.

'ஆதியின் மேலாசை அடர்ந்தெரித்த அக்கினியின்
சோதியினால் வெந்து சுகம் பெறுவதெக்காலம்'

என்று இறைக்காதல் வெறிபுலப்பட்ட மஸ்தான் சாகிபு பாடும்போது மெய்யுணர்வின் உச்ச நிலையான காதல் தவிப்பும் ஏகத்துவ உணர்வும் ஒருங்கே வெளிப்படுகின்றது.

சூபி என்பவருக்கு வாழ்க்கையின் முடிவும் குறிக்கோளும் அல்லாஹ் மாத்திரமே. சூபிக்கு உடமை ஏதும் இல்லை. அவரை உடையவரும் ஒருவரும் இல்லை.

சூபித்துவக் கருத்துக்கள் இஸ்லாத்துடன் தொடர்புடையனவாய் அமைந்தமையால் இஸ்லாம் உலகில் பரவத் தொடங்கியதும் சூபிக் கருத்துக்களும் பரவலாகப் பின்பற்றப் படலாயின.

இஸ்லாம் இந்திய மண்ணில் காலூன்றத் தொடங்கிய சில ஆண்டுகளிலேயே சூபித்துவமும் காலூன்றியது. இந்தியாவிலும் பல சூபித்துவ ஞானிகள் உருவாகினர். தமிழ்நாட்டிலும் சூபித்துவ பெருங்கொடையாக குணங்குடி மஸ்தான் சாகிபு தோன்றி மெய்ஞ்ஞான இலக்கியத்துக்கு தனது பெரும் பங்களிப்பைச் செய்துள்ளார். தொட்ட இடமெல்லாம் சுவைத்து இன்புறும் பாக்கள் நிறைந்த மெய்ஞ்ஞானம் பரிபூரணக் களஞ்சியமாக குணங்குடி மஸ்தான் சாகிபு சூபித்துவ வழி நின்று பாடல்களைப்பாடி பெருந் தொண்டாற்றிய ஞானச் சித்தர் என்பது எள்ளளவும் ஐயமில்லை.

## 2. குணங்குடி மஸ்தான் வாழ்க்கைப் பதிவுகள் ஒரு பார்வை

இறைவனை நாயகியாகவே பாவனை செய்து பாக்களைப் பாடிய ஞானச் சித்தர் குணங்குடி மஸ்தான் சாகிபு ஹிஜிரி 1207-ல் (கிபி 1792ல்) நயினார் முஹம்மது சாகிபுக்கும் பாத்திமா என்னும் பெண்மணிக்கும் மூத்த மகனாகப் பிறந்தார்.

இவர் பிறந்த ஊரின் பெயர் குணங்குடி. இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்தில் தொண்டி எனும் கடற்கரைப் பட்டணத்திற்கு பதினாறு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

இவரது பிறப்பால் பெயர் பெற்ற பாடல் ஸ்தலமாக 'போவோம் குணங்குடிக்கு எல்லோரும்', 'மேலைக் குணங்குடி வாய்ந்திடச் செய்யுமே', 'அருள் ஓங்கும் குணங்குடி வாய்க்கும்' போன்ற பாடல் வரிகள் மூலம் சிறப்பாக நினைவு கூறப்படுகிறது.

இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் சுல்தான் அப்துல் காதிர் என்பதாகும். இவருடைய தந்தையார் 'நற்குணங்குடி கொள்நயினார் முகம்மது' எனப் போற்றப்படுகின்றார்.

மஸ்தான் சாகிபு இளமையிலேயே குர்-ஆன் ஓதி இஸ்லாமிய சமய சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து பட்டம் பெற்றார்.

இவரது பாட்டனார் இஸ்லாமிய ஞானமும் யோக நிட்டையும் நிறைந்த இறைநேசச் செல்வராக விளங்கி யுள்ளார்.

பதினேழு வயதான மஸ்தான் சாகிபுவின் பெற்றோர் தம் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பினர்.

இவரது தாய் மாமன் கட்டை சாகிபு என்ற முகம்மது இபுராகீம் என்பவர் தன்னுடைய மகள் மைமூன் என்பவரை இவருக்கு மணம் செய்து வைக்க முயன்றார்.

ஆனால் ஞானவெளியில் பறக்கத் துடித்த மஸ்தான் சாகிபுவின் மனமோ இல்லறத்தில் நாட்டம் கொள்ள வில்லை. சிற்றின்பத்திற்கு இடமான மனைவி பேரின்பக் கடலான பரம்பொருளை அடைவதற்குத் தடையாக இருப்பாள் என்று கருதினார். இறையருளை அடைவதற் குரிய மெய்யறிவு பற்றிய உயர்கல்வியினைப் பெற விழைந்தார்.

கீழக்கரையில் 'தைக்கா சாகிபு' என்று அழைக்கப்பட்ட செய்கப்துல் காதிர் லெப்பை ஆலிம் என்ற நல்லாசிரியரிடம் மாணாக்கராக இருந்து சமய ஞானமும் தவம் பற்றிய வழிமுறைகளையும் கற்றுத் தெளிந்தார் குணங்குடியார்.

புலனடக்கம் போற்றும் மஸ்தான் சாகிபு சோற்றுக் கற்றாழையை உண்டு ஓதி வந்தார். இதனையறிந்த ஆசிரியர் ஒரு செல்வர் வீட்டில் ஒரு சமயம் கோழி சமைத்து தாம்மட்டும் உண்டுவிட்டு மஸ்தான் சாகிபுக்கு வெறும் சோறு படைத்தார்.

மஸ்தான் சாகிபு நடந்ததை அவர்களிடம் கூறிவிட்டு இனிமேல் உண்மையை மறைக்க வேண்டாம் என்றும் தனக்கு வெறுஞ்சோறு போதும் என்றும் சொல்லி மகிழ்வுடன் உண்டார்.

'வாய்மூடியவர் நிம்மதி அடைந்தார்' எனும் நபி மொழியை ஒரு சமயம் ஆசிரியர் விளக்கிக் கூறவந்தபோது

குணங்குடியாரின் மனதில் மிகப்பெரும் மாற்றம் உருவாகியது.

'பேசாத மௌனம்' தரும் பேரின்பம் பற்றி குணங்குடியார் உணர்ந்தபோது அது அவரது வாழ்வில் பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியது.

'இதயந் திறக்கவும் எதையுந் துறக்குமோர் ஏகாந்தம் அருள்புரியவும்' என்று பின்னால் மஸ்தான் சாகிபு பாடுவதற்கு ஏதுவாயிற்று அது.

தைக்கா சாகிபு ஆசிரியரிடம் நல்ல நூல்கள் பலவற்றைக் கற்றுணர்ந்து தவயோக வழிமுறைகளை அறிந்த குணங்குடியார் கி.பி. 1813 (ஹிஜ்ரி 1228)ம் நூற்றாண்டில் பற்றனைத்தையும் ஒழித்து முற்றும் துறந்தார்.

இறைவனை அடையும் பயணமாகிய சூபி நெறியில் சாதகன் தன்னை வழி நடத்துவதற்குரிய தக்க ஞானாசியரைத் தேடிப் பயணப்பட்டார் குணங்குடியார்.

குணங்குடியார் திருச்சிராப்பள்ளி சென்றார். அங்கே ஆலிமாகவும் சூபி ஞானியாகவும் காதிரிய்யாத் தரீக்காவின் கலீபா்வாகவும் விளங்கிய ஷாம் சாகிபை அணுகித் தீட்சை பெற்றார்.

பகற்பொழுதெல்லாம் நோன்பும் இரவெல்லாம் தொழுகையுமாய் அவரது நாட்கள் கழிந்தன. இவ்வாறு மூன்று மாதகாலம் மௌலவிஷாம் சாகிபிடம் இறைவனிடம் மனதை ஈடுபடுத்தும் பயிற்சியினைப் பெற்று வந்தார்.

திருச்சி நகரத் சந்தடியிலிருந்து ஒதுங்கி வாழ நினைத்த குணங்குடியார் திருப்பரங்குன்றம் அடைந்து அங்குள்ள

மலைக் குகையில் நாற்பது நாட்கள் 'கல் வத்து' எனும் யோக நிட்டையில் இருந்தார்.

அங்கிருந்து அறந்தாங்கிக்குப் பக்கத்திலுள்ள கலகம் எனும் சிற்றூருக்குச் சென்று ஆறுமாதங்கள் தங்கியிருந்தார். அதன் பின்னர் தொண்டியிலுள்ள தாய்மாமன் கட்டை சாகிபு அடங்கியுள்ள வாழை தோப்பில் நான்கு மாதங்கள் தங்கி நிட்டை புரிந்தார்.

அக்காலக் கட்டத்தில் குணங்குடியாரின் சொந்த பந்தங்கள் பெண்டு பிள்ளைகள் அங்கு வந்திருந்து அவரது மனதை அலைபாயச் செய்ததால் அங்கிருந்து வெளியேறினார் அவர்.

சதுரகிரி, புறாமலை, நாகமலை, யானை மலை ஆகிய மலைகளிலும் கொடிய மிருகங்கள் உலாவும் அடர்ந்த காடுகளிலும் ஆற்றங்கரைகளிலும் அலைந்து திரிந்தபடி சருகும் கிழங்கும் தழையும், குழையும், கனியும் காயும் தின்று யோக நிட்டை புரிந்தார் குணங்குடியார்.

குணங்குடியார் இவ்வாறு ஏழு ஆண்டுகள் அலைந்து திரிந்து அதன்பின் நாகூர் ஆண்டவர் சமாதி சென்று பாடித் துதித்தார்.

அவருடைய பித்த நடையையும் ஆங்காங்கே அவர் செய்து வந்த சில சித்துக்களையும் கண்ட மக்கள் அவரை மஸ்தான் என்று அழைத்தனர்.

குப்பைமேடுகள் எல்லாம் அவரது குடியிருப்புகளாகின. காரைக்கால் சென்ற அவர் தூய்மையற்ற இடத்தில் தங்கியிருப்பதைக் கூறி சில முசுலீம்கள் குற்றம் சாட்டினர்.

அவ்வாறு ஏளனம் செய்தவரிடம் தண்ணீர் கொண்டு வரச் செய்து துப்புரவுச் செய்து தக்பீர் கட்டி நின்ற

நிலையிலேயே மூன்று நாட்கள் மெய்மறந்து தொழுது கொண்டிருந்தார் குணங்குடியார். இதனைக் கண்டு பரிகாசம் செய்தவர்கள் வியந்து பணிந்து போயினர்.

காட்டிலுள்ள ஒரு மரக்கிளையின் நடுவில் காலைத் தொங்கப் போட்டு தலைகீழாகத் தொங்கியவாறு மஸ்தான் தொழுது கொண்டிருந்தார். இதனைப் பார்க்கவும் மக்கள் பெருங்கூட்டம் கூடியதும் அங்கிருந்து சென்னை மாநகரம் சென்றார் குணங்குடியார்.

சென்னையில் இராயபுரத்தில் பாவா லெப்பை என்பவருக்குச் சொந்தமான முட்புதர்களும் மூங்கிற்காடும், சப்பாத்திக்கள்ளியும் மண்டிக் கிடந்த இடத்தில் குணங்குடியார் தங்கியிருந்தார். அவர் ஆழ்ந்த நிட்டை புரிய ஆரம்பித்ததும் அங்கிருந்த நச்சுப்பூச்சிகள் யாவும் அகன்றன.

மூன்றாண்டுகள் நிஷ்டையில் இருந்தபின் ஞான நெறி திகழ வெளி வந்தார்.

குணங்குடியாரின் மகிமை அறிந்து அவருக்கு அந்த இடத்திலேயே தைக்கா (ஆசிரமம்) அமைத்துக் கொடுத்தார்.

இங்கே வாழ்ந்து வந்த கால கட்டத்தில் குணங்குடியார் சில நாட்கள் வெளிவருவார். சில நாள் மறைந்து அடங்கி யோகம் புரிவார். மௌனியாக இருந்தபடி ஏதேனும் உணர்த்த வேண்டி இருப்பின் எழுதிக் காட்டியும் வருவார்.

குணங்குடியார் அவ்விடத்தில் அவ்வாறு ஒன்றரை ஆண்டுகாலம் யோக நிட்டை செய்து வந்தார்.

தாம் சார்ந்திருந்த காதிரிய்ய நெறி மரபுப்படி மெய்ஞ்ஞானி அப்துல் காதிர் ஜுலானி பேரில் பாத்திஹா செய்து வந்தார் குணங்குடியார். இக்காலங்களில் அவர் தாம்

இயற்றிய கீர்த்தனங்களைப் பாடிக் கொண்டு ஊர்வலம் செல்வதுண்டாம்.

அங்கப்பன் நாயக்கன் தெருவிலுள்ள மன்சூர் பள்ளி வாசலுக்கு வந்து பிரார்த்தனை செய்துவிட்டு ஆசிரமம் திரும்புவார் குணங்குடியார்.

இவர் வாழ்ந்த பகுதியை தொண்டியார் பேட்டை என்றழைத்தனர். இதுவே தற்போது தண்டையார் பேட்டை என்று வழங்கப்பட்டுவருகின்றது.

தொண்டியார்பேட்டையில் மஸ்தான் சாகிபு பல்வேறு அற்புதங்கள் நிகழ்த்தினார். கப்பல் மீராப்பிள்ளை என்னும் செல்வர் அழைப்பை ஏற்று இவர் விருந்துக்குச் சென்றார்.

இவரது பரதேசிக் கோலம் கண்ட காவலாளி அந்த செல்வந்தர் வீட்டுக்குள் அனுமதிக்க மறுத்துவிட்டான்.

ஆனால் குணங்குடியாரோ எவரும் அறியாமல் உள்ளே சென்று விருந்தினருக்குப் படைத்த அனைத்து உணவையும் உண்டு இன்னும் பசிக்கு உணவு கேட்டு அங்கிருந்தோரை வியப்பிலாழ்த்தினார்.

இந்தச் செய்திகளைக் கேட்டறிந்த ஆற்காடு நவாபு மஸ்தான் சாகிபுவைக் காண விரும்பினார். நவாபின் விருப்பத்தை உணர்ந்த மஸ்தான் சாகிபு காவலை மீறி நவாபு முன்பாக கம்பளிப் போர்வையுடன் காட்சி தந்தார்.

அவரைப் பற்றி நினைத்த மாத்திரத்தில் தன் முன் தோன்றியருளிய மஸ்தான் சாகிபுவின் அருளாற்றலை வியந்து பணிந்தார் நவாபு.

தமது ஞான தேசிகர் தவம் செய்ய கட்டிடம் ஒன்று நவாப் கட்டிக் கொடுத்தார். அதன்பின் குணங்குடியாரின் புகழ் பரவியது.

அவர்மீது பொறாமை கொண்ட சிலர் அவரிடம் சில பெண்களை அனுப்பி அவரது தூய்மைக்குப் பங்கம் விளைவிக்க முயன்றனர். ஆனால் அந்தப் பெண்கள் குணங்குடியாரின் அருள்மொழியால் தெளிவு பெற்று நேர்வழியில் நடந்தனர்.

குணங்குடியார் எப்போதும் தொழுதும் நோன்பு நோற்றும் இறை உணர்விலே மூழ்கி இருந்தார்.

மஸ்தான் சாகிபுவின் தவச்சாலை துயரில் மூழ்கிய மக்களின் ஆறுதல் கூடாரமாக விளங்கியது. எப்போதும் சாரை சாரையாக மக்கள் கூட்டம் அங்கே நிரம்பி வழிந்தது.

குணங்குடியாரின் தவச்சாலைக்கு வருபவர்கள் சாதி சமய வேறுபாடின்றி அருளும் பொருளும் பெற்று வந்தனர்.

சில நாட்கள் கற்கண்டும் பாலும் மட்டும் அருந்தியும் சில நாள் அதுவுமில்லாமலும் சில பகல் தெரியும்படி தோன்றியும், சில பகல் தெரியாமல் உலாவியும், ஒருவரும் காணாமல் ஒதுங்கி மறைந்தும் ஏகாந்த தியானத்திலிருந்தும், தூங்காது தூங்கி அத்துவித சுகத்தில் திளைத்தார் குணங்குடியார்.

சென்னையில் இவ்வாறு பன்னிரெண்டு ஆண்டுகள் உள்ளம் சிதையாது பேரின்பப் பெருவெள்ளப் பெருக்கில் மூழ்கித் திளைத்த குணங்குடியார் தமது நாற்பத்து ஏழாவது வயது நிரம்பியபோது அந்த ஞானச் சித்தர் கி.பி. 1838ம் ஆண்டு ஹிஜ்ரி 1254 ஜமாதியுல் அவ்வல் மாதம் 14-ம் தேதி திங்கட்கிழமை வைகறைப் போதில் இவ்வுலக வாழ்வை முடித்து பரிபூரணம் அடைந்தார்.

குணங்குடியார் தவம் செய்து வந்த இடத்திலேயே அவரது உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

## 3. குணங்குடியார் மீது புகழ்ந்து பாடப்பெற்றவை

மாதவ மெய்ஞ்ஞானியாகி குணங்குடி மஸ்தான் சாகிபு அருள் வேண்டி அவரிடம் வந்த சீடர் பலருண்டு.

மிகப்பெரிய · செல்வந்தர்களும் புலவர்களும் குணங்குடியார் மீது மாளாத பற்றுக் கொண்டிருந்தனர். ஆற்காடு நவாப் குணங்குடியாரின் அற்புதச் சித்தியறிந்து அவரிடம் தீட்சைப் பெற்றார்.

பாவா லெப்பை, முனியப்ப பிள்ளை, கேசவப் பிள்ளை, காதர் மஸ்தான், அவரது மனைவி குப்பம்மாள் முதலிய செல்வந்தர்கள் அவர் மீது மிகுந்த குருபக்தியுடையோராக இருந்திருக்கின்றனர்.

அறிவிற்சிறந்த புலவர்கள் மகாவித்வான் திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர், சிவயோகி ஐயாசாமி முதலியார், வேங்கடராயக் கவிராயர், கோவளம் அருணாசலம் முதலியாரின் மகன் சபாபதி முதலியார், புலவர் நாயகம் என்னும் செய்யது அப்துல் காதிர் நயினார் லெப்பை, ஆலீம் புலவர், சீயமங்கலம் அருணாசல முதலியார், முகம்மது உசேன் புலவர் ஆகியோர் குணங்குடி மஸ்தானைத் துதித்துப் பாடியுள்ளனர்.

மகா வித்வான் திருத்தணிகை சரவணப் பெருமாளையரவர்கள் குணங்குடி மஸ்தான் சாகிபு மீது அற்புதமான நான்மணி மாலை பாடியுள்ளார்.

மகாவித்வான் சரவணப் பெருமாள் ஐயர் 'துகளற வோங்கி துறவினர்க்கரசே' என்றும், 'ஒப்பில் பெருந்தவத்தில் ஓங்கும் குணங்குடியோன்' என்றும், 'பரமயோகியும் பற்றொன்றில்லானும் கருணைக் கடலுமாகிய என்

குருவாகிய குணங்குடியானைப் போற்றினார்க்கு மனப் பிணியில்லை' என்றும் மனமுருகப் பாடிக் கொண்டாடு கின்றார்.

## இலாஹி

## நான்மணிமாலை

*குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் மீது மகாவித்வான*
*திருத்தணிகை சரவணப்பெருமாள் பாடியது*

### காப்பு

*நேரிசை வெண்பா*

என்சீர்க் குணங்குடியா னென்னுங் குருமணிமேல்
வண்சீர்த் தமிழ்நான் மணிமாலை – பண்சீர்கொள்
கற்பனைசேர் பொற்பினவில் கைக்குப் பலவகையாங்
கற்பனைதீர் சிற்பரன்றாள் காப்பு.

### நூல்

*நேரிசை வெண்பா*

பொன்னாதி யாம்பொய்ப் பொருளினுறு புன்சுகத்தை
மின்னாமென் றெள்ளா விரகிலிகேள் – இன்னே
குணங்குடியா னஞ்செய் குறிவாளி நல்க
வணங்குடியா னஞ்செய் வழுத்து. 1

*கட்டளைக் கலித்துறை*

வழுத்துந் தொழும்புடை யன்பமைந் தோர்தமை மாநிலருள்
பழுத்துங் குணங்குடி யான்கரை காண்டகு பண்புடைத்தாய்
முழுத்தும் பவக்கட லைக்கடப் பித்திசை முற்றுறவே
யழுத்தும் கரைபெற வில்லாத வானந்த மாங்கடலே 2

*அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்*

கடல்சூழ் புவியி லுளத்திருளைக்
கருணை யொளியி னாற்களைந்து
விடல்சூழ் பவரிற் குணங்குடியான்
மிக்கோ னெனற்கோர் தடையுளதோ
மிடல்சூழ் புறத்தின் விழிமறைத்து
மேவு மிருளை விரிகதிரால்
அடல்சூழ் பொருள்கள் பலவுறினும்
அலரி யுயர்வாய்த் தோன்றுறுமே 3

*நேரிசை யாசிரியப்பா*

தோன்றுபல் பாதகத் தொகுதியா மைந்தரை
ஈன்று வளர்க்குமா வென்னுமிக் கலிதனிற்
காட்சியிற் புலப்படாக் கடவுளுண் டெனலும்
மாட்சியி னவனையா மருவலுண் டெனலும்
உடல்மீ தன்றிவே றுயிருள தெனலுந்
துயிலுண வொழித்துத் தொடர்புல னடக்கிப்
பயிலு மனோலயம் பண்ணலுண் டெனலுங்
கண்டவர் யாரிவை கட்டுரை யாமெனக்
கொண்டரு நூலையுங் குருவையும் பழித்துத்
தவத்தொழில் சிறிதுந் தழுவாது கைவிட்டு
அவத்தொழில் முழுவது மஞ்சாது புரியுங்
கொடியவர் கெட்டுளங் குலைந்துடல் விதிர்ப்ப
ஒடிவரு பத்தியி னுற்றவர் தமக்கெலாங்
கடவுளை யவனடி காண்டகு திறத்தினைச்
சடமுறு முயிரவன் றன்னின்வே றன்மையை
வியத்தகு மைம்புலன் வென்றுமன டைக்குறு
நயத்தகு மியோகமெய்ஞ் ஞானநல் லியல்பினை
யையந் திரிபற வருளினா லுள்ளங்
கையுறு நெல்லிக் கனியென வுணர்த்தும்

இணங்குமெய்ப் புகழொடும் இசைந்தான்
குணங்குடி யானெனக் குலவு மாதவனே. 4

### நேரிசை வெண்பா

மாதவஞ்சேர் மேலோர் வழுத்துங் குணங்குடியான்
தீதவஞ்சேர் நம்அவித்தை தீர்க்குமெனக் – காதல்
விரைந்துபுகழ்ந் தோரிகழ்ந்தோர் மேவுவர்மெய்ப் போதம்
வரைந்து பிழைக்கும் வழி. 5

### கட்டளைக் கலித்துறை

வழிசேர் குணங்குடி யானெனு மாரியன் மல்கருள்கூர்
விழிசேர் திருமுகத் திங்கள்கண் டார்க்கன்றி மேவலுண்டோ
பழிசேர் மனவிந்து காந்த முருகுறும் பண்பினொடு
மொழிசேரஞ் ஞான மெனுமிருள் நீங்கு முறைமையுமே 6

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

முறைமுறைவந் தரசரெல்லாம் வணங்கச் சீர்பால்
முடிபுனைந்து படவிமுழு தாளும் பேறு
அலறைதருமோர் வீட்டினுக்கோ யவாவுள் மேவி
அரைக்கருங்கோ சிகமொழித்துக் கந்தை சூழ்ந்து
பொறையுறுநின் திருவருள் பெற் றைய யேற்றுன்
புண்ணியரா லொருபொருளென் றெண்ணற் காமோ
குறைவறுநற் புகழ்பரம யோகி யென்னுங்
குணங்குடியா னேவிளங்கக் கூறு வாயே 7

### நேரிசை யாசிரியப்பா

வாயினாற் பலநூல் வகைதெரிந் துரைத்துங்
காயமேல் வெண்பொடி கவினுறப் பூசியுஞ்
செய்யகல் லாடையைத் திகழ்ந்திட வுடுத்துந்
துய்ய சடைமுடி துதைதர முடித்துந்

தண்டுக மண்டலஞ் சால்புறத் தாங்கியு
மண்டல மிசைவிரி மான்றோலி னிருந்தும்
படர்புலச் சூறையிற் படுசிறு துரும்பென
இடர்கெழு மனத்தரா யிருக்கின் றனர்பலர்
நெளிதிரைக் கடல்சூழ் நெடும்பெரும் புவிமிசை
யளிவளர் குணங்குடி யானெனு மமல
சாற்று மச்சாதனந் தானொன் றிலாமலும்
போற்று முனதருள் பொருந்திய வொருசிலர்
ஒருதம தியல்புணர்ந் திருவினை யகற்றி
மூவா சைத்திற மேவாது விடுத்து
நாற்கதி நணுகுறா மேற்கதி விரும்பி
ஐம்பொறிக் கெதிர்வற வெம்புல னடக்கி
அறுசம யங்களி னெறிநிலை தேறி
எழுபிறப் பிகந்ததென் விழுமிய செருக்கிற்
பத்தியாற் படரெலா மொருவி
நித்தியா நந்த நிலயரா யினரே 8

## நேரிசை வெண்பா

ஆயுங்கா லன்பி னழியாத் துணையாகுங்
காயுங்கா லன்படர்ந்து காதவுடன் – மாயுங்கால்
நீதிக்கும் போதயனை நேராங் குணங்குடியான்
பாதிக்கும் போதப் பொருள். 9

## கட்டளைக் கலித்துறை

பொருட்செல்வம் புல்லிய தென்றே விடுத்திந்தப் பூதலத்தின்
அருட்செல்வ மெய்துங் குணங்குடி யானரு ளாதரித்தோர்
தெருட்செல்வ நன்கெய்தி யைம்புலன் மாளச் செகுத்தினியாம்
இருட்செல்வ மல்ல மெனவே மகிழ்வுற் றிருப்பார்களே. 10

### *எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

கள்ளுண்டுங் கொலைபுரிந்துங் கபடஞ் செய்துங்
கணிகையர்தம் புணர்ப்பினுறு காம நோயால்
எள்ளுண்டுந் திரிகொடும்பா தகத்தோர் தாமும்
இணையில்குணங் குடியானே யிறைவா வுன்றன்
விள்ளுண்ட கமலவடி படுந்தூ ளொன்று
மேற்படப்பெற் றிடினவர்வெவ் வினைக ளெல்லாந்
தள்ளுண்டு சிறுசிலையொன் றெடுத்து வீசத்
தருநிறைபுட் குழாமெனவே பறந்து போமே. 11

### *நேரிசை யாசிரியப்பா*

மேதகு நிலையினை மேவிவாழ் வித்தக
வோதக விருள்தனை யொழிக்குமா மணியே
அன்பினர் மகிழ்கொள வருள்பொழி முகிலே
இன்பநன் குதவுறு மினியதெள் ளமுதே
துகளற வோங்கிய துறவினர்க் கரசே
திகழறந் தாங்குபு சேர்குணங் குடியாய்
நின்னை வணங்கினோர் நெஞ்சா லயந்தொறு
முன்னை யிருத்திவே றுறைகின் றனையால்
ஒருவனோ பலரோ வொருநீ
தெரிதரப் புகல்கநின் றிருவுள மகிழ்ந்தே. 12

### *நேரிசை வெண்பா*

தேவருக்கும் எய்தரிய சிற்சுகத்தைத் தற்புகழ்ந்தோர்
யாவருக்கும் பாரினொழி யாதெளிதின் – ஈவனயந்(து)
ஒப்பில் பெருந்தவத்தி னோங்கு குணங்குடியான்
செப்பும் வினையனைத்துந் தீர்த்து. 13

### *கட்டளைக் கலித்துறை*

துதியும் பழியு மமுதமும் புற்கையுந் துப்புமப்பு
நீதியுஞ் சிலையுங் கலவையுஞ் சேறு நிகருறவே

வதியுந் திறத்திற் குணங்குடி யானருள் வாய்த்தவன்பாற்
பதியுங் கருத்துடை யார்கள் கருத்துடைப் பார்கள்மெய்யே. 14

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மெய்யுறுசீர்க் குணங்குடியா னெனும்பவனோ
பாரினில்இவ் விரிநீர் வைப்பின்
நய்யுறுபித் தொடுதா மல்கியைய
மேலிடினு நாடி நோக்கி
உய்யுறுநன் னிலைபெறவோர் மாத்திரைதன்
னுளமிரங்கி யுரைத்தல் செய்யும்
பொய்யுறுமிப் பவநோயை யொழித்திணையி
லாதசுகம் பொருத்து மாறே. 15

### நேரிசை யாசிரியப்பா

மாறுகொண் டென்மன மாகிய பரியை
வீறுகொண் டவாவெனும் வீரனிங் கொருவன்
அழுக்கா றெனுங்கல் லணைமிசை யார்த்தாங்கு
இழுக்கா றுடைசின மெனுங்கலி னஞ்சேர்த்து
அளியறு செருக்குமிக் காகிமே விவர்ந்து
வளியெனும் வாதுவன் வாய்ந்துடன் றொடர்தரப்
பெறியெனுங் கொடுவழி புகுந்திடச் செய்தலும்
நெறிபிறழ்ந் தப்பரி நீள்புலக் கான்புகுந்
தரிவையர் மயக்கெனு மளற்றினுள் வீழ்ந்துந்
தெரிபொன் னெனும்வனத் தீமிதித் தழுங்கியும்
பகர்மண் ணெனுங்கொடும் பாறைதாக் குற்று
மிகுபெருந் துன்பொடு மெலிந்துழல் கின்றதால்
இன்குணங் குடியா னெனுந்தவர்க் கரசே
நன்குமற் றதனைநீ நல்வழி திருப்பியே
அருளெனும் வாளினவ் வீரனைத் துமித்துக்
கருதுமக் கல்லணை யாதிகள் களைந்தொழித்

தென்வச மாக்குவை யெனின்யா
னின்வச மாகுவ னினதியல் புகழ்ந்தே. 16

### நேரிசை வெண்பா

புகழ்ந்து குணங்குடியான் பொங்கிசையை நெஞ்சந்
திகழ்ந்துபுல வீர்பாடல் செய்மின்—இகழ்ந்து
மலத்திருகை மாற்றிநிலை மாறாவின் பெய்தி
நலத்திருக்கை நல்கு நயந்து 17

### கட்டளைக் கலித்துறை

நயமேவு கஞ்ச முகமுங் கருணை நயனமுஞ்சீர்ப்
பயமேவு செம்பொ னுறழ்மேனி யும்மெழிற் பாதுகைசேர்
சயமேவு தாளுந் தலைவிரி கோலமுஞ் சார்ந்தன்பரி
தயமேவு மென்றுங் குணங்குடி யானெனுஞ் சற்குருவே 18

### அறுசீர் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

குருவா யடுத்தோர்க் கருள்சுருக்குங்
கோதில் குணஞ்சேர் குணங்குடியான்
உருவா யருவா யுபயமுமா
யொன்றாய்ப் பலவா யறிஞர்விழை
திருவாய் விளங்கும் பரநிலையைத்
தெரிக்கு மெனின்மற் றவன்பெருமை
யொருவா யுடையோ னும்புகழ்வே
ணோரா யிரம்வா யுறினொருங்கே. 19

### நேரிசை யாசிரியப்பா

ஒருங்கிய மனத்தொடு மொருகாசு மிலனாய்க்
கருங்கடற் புவிமிசைக் காதல் மீதூர
வழுத்தி யன்புடை வந்திரக் கின்றவ
ணெழிற்குணங் குடியா னெனுமருட் செல்வ

தன்னையு மிழப்ப தல்லா
லென்னை யவன்பெற லியம்பருள் சுரந்தே. 20

## நேரிசை வெண்பா

சுரக்குமணற் கேணியினீர் தோண்டுந் தொறுமைந்
தரக்குங் குணங்குடியா னன்பர்க்—கிரக்கமொடு
மானந்தத் தேறல் வரப்புகல்வ தால்தோறு
மானந்தத் தேறல்சுரப் பாம். 21

## கட்டளைக் கலித்துறை

ஆந்துணை நாடிற் குணங்குடி யானென் றறிந்தவன்பாற்
போந்துணை யோடன்பு செய்தவர் செய்தவர் பூதலத்திற்
சாந்துணை யுங்கை வருடிச்செவ் வாய்ச்சியர் தாட்கமலப்
பூந்துணை யூட லொருத்தாங்கு புல்லினர் புல்லினரே. 22

## ஆசிரிய விருத்தம்

புல்லியு மல்லி சேர்ந்து பொலிவுறு மணத்த தாகுந்
தொல்லியல் வழுவா வண்மை தொடர்குணங் குடியா னென்னு
நல்லியல் ஞான மூர்த்தி நாமமுற் றிடுத லாலே
சொல்லிய வெனது சொல்லுந் தோன்றுறுஞ் சிறப்பி னுற்றே 23

## நேரிசை யாசிரியப்பா

உற்றுளங் கெழுமிய நற்றிற வன்பொடுங்
குணங்குடி யானருட் கிணங்கினோ ரியார்க்கும்
பகைமையுங் கேண்மையும் புகலிலை யெனலென்
னெடுங்கா லந்தமை நீங்காது பழகிய
கொடுங்கேண் மாயையைக் கொல்பெரும் பகைவராய்க்
கதுவிய கேண்மையிற் கலப்பர்
புதிதென வெய்திய போதந் தனக்கே 24

### *நேரிசை வெண்பா*

தனக்குத்தா னேநிகராந் தத்வத் துவனாம்
உனக்குத்தா னன்றியெவவர்க் குண்டு—நினைக்குங்காற்
கூறுமளிசேர் குணங்குடியா னேவிமலா
தேறுதவ யோகமுயல் சீர். 25

### *கட்டளைக் கலித்துறை*

சீரை விரும்பினர்க் கின்றாமு லோபமெய் சேருநசை
போரை விரும்பினர்க் கின்றா மனநிலை பூவையர்தம்
ஏரை விரும்பினர்க் கின்றாங் குணங்குடி யானிடஞ்செய்
நாரை விரும்பினர்க் கின்றா முலகர் நவிலுவரே. 26

### *அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

நவிலுமிள மையுமதனை யுறுமுட்லு
மதனையுள நயந்து காக்கக்
குவிபொருளும் புனற்குமிழி போலநிலை
யல்லவெனுங் குணத்தை யோர்ந்து
புவிபுகழு மெய்ஞ்ஞானக் குணங்குடியான்
றிருவருளைப் பொருந்தற் கெண்ணார்
தவலறுசீ ரகண்டபரி பூரணமாஞ்
சிற்பரன்றாள் சார்த லுண்டே 27

### *நேரிசை யாசிரியப்பா*

உண்டு முடுத்து முறுபொரு ளீட்டிய
மெண்டகு வாழ்நா ளியாவையுங் கழித்தே
யணங்குசெய் வினைமுய லசடருக் கறிவருங்
குணங்குடி யானருட் குரிசி லிசையிசை
நாவாய் நாவா யாகு
மோவாப் பவக்கட லொழிந்து கரைபெறற்கே. 28

## நேரிசை வெண்பா

பெறற்கரும்பே றொன்றுளதோ பேருலகில் யார்க்குந்
தெறற்கருமா யைக்கழிவு செய்யும்—விறற்கிசைந்த
மன்னருளங் கொண்டு மதிக்குங் குணங்குடியான்
தன்னருளங் குற்றார் தமக்கு. 29

## கட்டளைக் கலித்துறை

குவலைய மெங்கு மொருசாண் வயிற்றின் குழிநிறைப்பக்
கவலை யடைந்திரைக் கேயுழல் வீர்பயன் கண்டதுண்டோ
நுவலைய நீக்குங் குணங்குடி யானருள் நோக்கிவிழித்
திவலைய் றாவண்பிற் சேரினுண் டாங்கடை தீர்சிறப்பே. 30

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சிறக்கும் புகழு மடுத்தோங்குஞ் செறிதீ வினைக ளெலாம்விடுத்து
பறக்கு மவித்தை யிருணீங்கும் பக்தி யுளத்தின் மேன்மேலும்
பிறக்கும் மதீதப் பெருவாழ்வு பெருகு முலகிற் பேதநிலை
துறக்கு முறவோன் குணங்குடியான் சொல்லு நெறியைத்
துன்னினர்க்கே 31

## நேரிசை யாசிரியப்பா

துன்னுறு திரைக்கடல் சூழ்பெரும் புவிமிசை
பன்னுறு நிலைகெழு பலசம யங்களு
ளெச்சம யத்தவ ரெவ்வாறு கருதினு
மச்சம யத்தவர்க் கவ்வா றிருந்தருள்
பலவடி வங்களும் பலநா மங்களு
நலமுற மருவிய நாயக னாகியு
முருவும் பெயருமொன் றுறாதுவே றாகிச்
செருவளர் சமயா தீதமுற் றொளிருஞ்
சிற்பரம் பொருளிணைத் தெரிக்கு
நற்குணங் குடியா னெனுநா யகனே. 32

### *நேரிசை வெண்பா*

நாயகனார் நல்வரவை நாடுங் குலமகள்போற்
றாயகமாந் தற்பரனைத் தாங்காண—நேயமுளாங்
கொண்டோர்க் கலது குணங்குடியான் கண்ணருட்பே
றுண்டோவிப் பூதலித்தி னுள் 33

### *கட்டளைக் கலித்துறை*

உள்ளினுங் கண்மு னெழுதினுங் காதி னொருவர்சொலக்
கொள்ளினு நாவினிற் கூறினு மின்பங் கொழிக்குமுன்பேர்
கள்ளினு நெஞ்சை யழிக்கின்ற காமக் கரிசிலரைத்
தள்ளினுஞ் சூழுங் குணங்குடி யானெனுந் தற்பரனே. 34

### *கலி விருத்தம்*

பரம யோகியைப் பற்றொன்றி லான்றனைக்
கரவி லாத கருணைக் கடலினைக்
குரவ னாகுங் குணங்குடி யான்றனைப்
பரவி னார்க்குப் பவப்பிணி யில்லையே. 35

### *நிலைமண்டில வாசிரியப்பா*

இல்லையோ வுளதோ இடையென மருண்டு
முல்லையி னரும்பே முறவலென் றுரைத்துங்
கொங்கையைச் செம்பொனிற் குடமென வியந்துஞ்
செங்கையைக் காந்தட் செழுமல ரென்றும்
விழியைக் கூர்நெடு வேற்படை யென்று
மொழியை நறுஞ்சுவை முதிரமிழ் தென்று
மிதழினைக் கொவ்வையி னெழிற்கனி யென்று
நுதலினைப் பிள்ளைப் பிறையென நுவன்றும்
வனிதையர் முயக்கிடை மயங்கிவீழ்ந் தழுந்துந்
துனியுறு வோர்மனச் சோர்வினை யொழித்திட

மறைபுகன் ஞான வளமினி தருளுங்
குறைவரு நற்குணங் குடிகொண் டிருத்தலா
லுன்பெயர்க் காரணத் துறுபொரு ளுணர்ந்தனங்
கொன்பெறு புகழ்வளர் குணங்குடி யானே. 36

## நேரிசை வெண்பா

யானென தென்னுஞ் செருக்கற் றியாவுமொரு
தானெனவே கொள்ளுந் தகையாகு—நானிலத்திற்
கூருங் கருணைக் குணங்குடியான் சந்நிதியி
னேருங் கருத்தோர் நிலை. 37

## கட்டளைக் கலித்துறை

நிலையுறு சத்துச்சித் தாநந்த மாக நிறைபொருளைக்
கலையுறு மாட்சியிற் றானுற்றி யாரையுங் காட்டவல்லோன்
புலையுறு மியாக்கை வருந்துற நோக்கும் புனிதர்புகழ்
தலையுறு சீர்கொள் குணங்குடி யானெனுஞ் சற்குணனே. 38

## கலிவிருத்தம்

குணங்குடி யானருள் கூடி னலத்தி
னிணங்கிய சிந்தைய ரேத மகற்றி
யணங்கறு பின்பி னமர்ந்துல கத்தோர்
வணங்கி வழுத்துறு மாண்பொடு வாழ்வார். 39

## நிலைமண்டில வாசிரியப்பா

வார்தருங் கூந்தலார் வரிவிழிக் கணையு
மேர்தரு மதனவே ளெறிமலர்க் கணையு
மூறு செயப்பெறா தொளிர்திரு மேனியாய்
கூறுபல் புகழ்வளர் குணங்குடி யானே
இயலுறு மன்புகொண் டெய்தினோ ரியார்க்கும்
யாவரு மதிநிலை யருள்செய நின்று

மண்ணுல கந்தனில் வழங்குகின் றணைநீ
விண்ணுல கந்தனில் விளங்குபொன் னெனவே. 40



குணங்குடியாரின் சீடர் சிவயோகி ஐயாசுவாமி முதலியார் 'பூரண மௌன தேசிகனே' என்றும் 'முனிவர் களுள் இறையே ஈசனே, உயிர்க்குயிராந்துணையே' என்றும் பலவாறு போற்றுகின்றார்.

## தோத்திரப்பா

*குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் மீது அவருடைய மாணாக்கராகிய சிவயோகி ஐயாசுவாமி முதலியாரவர்கள் பாடியது.*

*எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

தண்ணுத கத்தின் குணமழ லவிக்குந்
தன்மையா யிருந்துமோர் கடத்தி
னெண்ணிய போதவ் வழலினாற் கொதித்து
நலிவுறு நியாயம்போ லுடலில்
புண்ணிய வான்மா பொருந்தியிந் தியத்தாற்
புன்மையாய் விளங்குவ தல்லா
லெண்ணிய பந்த மாதிய வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 1

மதிதன துருவிற் களங்கமில் லாமல்
வான்மிசை வயங்குறப் புவியின்
விதமுறு சாயை யாற்களங் குளதாய்
விளங்குறுந் தகைமைபோ லான்மா
சதிசெயு மனதால் விகற்பசங் கற்பத்
தன்மைகொண் டியங்குவ தல்லா
லிதமகி தத்துட் சார்வன வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 2

மன்னிய படிக நிட்களங் கமதாய்
வயங்கினுஞ் சகசமாய்த் தோன்றுந்
தன்னிழற் சாயை யாற்கறுப் புளதாய்த்
தயங்குறுந் தன்மைபோ லான்மா
துன்னுமா ணவத்தி னாலபி மானச்
சுழலினின் றியங்குவ தல்லா
லின்னல்செய் துவித பேதம துளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 3

மாசிலா தொளிரும் பெருவெளி யாய
வானிடை நீனிற மதுதா
னேகறு மித்தியா ரோபமாய்த் தோன்றி
யிலகுறு முறைமைபோ லான்மா
வாசுறு மவித்தியா மலசகி தத்தா
லவத்தையிற் றியங்குவ தல்லா
லீசனாய்ச் சீவ னாயிரண் டுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே 4

வானிடை யொளியைப் பரப்புமோர் பரிதி
மன்னிய சலத்தினுட் டோன்றி
லானதி னுருவ மச்சல மசையி
னசைவுறுஞ் செய்கைபோ லான்மா
கானலை நிகர்த்த புனலிடை யந்தக்
கரணமோ டிலங்குவ தல்லா
லீனமாந் தனுவா தியபல வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே 5

பகரரும் புனறன் னிறம்வெளுப் புடைய
பான்மையோ டிருக்கினும் பார்க்கிற்
சகசமாய்க் கரிய நிறமுற விளங்குந்
தன்மைபோ னித்திய வான்மா

தகையுறு மாயா மயக்கொடு தியங்கித்
        தனைமறந் துறங்குவ தல்லா
லிகமுறு மமதை யகந்தைக ளுளவோ
        வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 6

அழிவுறும் பிருதி வேகமா யிருந்து
        மசலமே முதலிய பலநல்
லெழிலுறு முருக்க டோன்றிநின் றிலங்கு
        மியற்கைபோ னித்திய வான்மா
வொழியுறு நானா விதமுறு நாம
        ரூபமோ டுறைகுவ தல்லா
விழிவுறுஞ் சிருட்டி யாதிய வுளவோ
        வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 7

வெள்ளைவா கனத்தின் விளங்குவெண் மதிதன்
        மேற்பரந் தோடுதன் முகிலென்
றுள்ளுறத் தெளியா தொளிர்மதி யோடு
        தெனச்சொலு முவமைபோ லான்மா
கள்ளவஞ் ஞான மாதிய வவத்தை
        களுக்குள்ளாய்க் கலங்குவ தல்லா
லெள்ளுறுங் கொடிய சஞ்சல முளவோ
        வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 8

எங்கணு மாகா யம்விபு வாகி
        யிருந்துமண் ணாதிய பலவின்
சங்கமாய் மறைபட் டதினதி னுருவாய்த்
        தடித்தொளிர் தன்மைபோ லான்மா
பொங்கிய தாதான் மியத்திரை யதனுட்
        பொருந்திநின் றிலங்குவ தல்லா
லிங்குள தங்கே யிலையென லாமோ
        வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 9

சுடரில கியசெந் தீப்புகை யின்றிச்
　　சொலும்பிர காசமோ டிருந்து
மடருறும் விறகாற் புகையுள தாகி
　　யவிர்தரும் பான்மைபோ லான்மா
மடமையஞ் ஞான விருத்திபே தத்தான்
　　மாசடைந் திலங்குவ தல்லா
லிடர்பகை யுறவா தியதுய ருளவோ
　　வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 10

நிந்தைசெய் மாயை யெனுங்கரு வியினா
　　னிகழ்தரும் ப்ரபஞ்சதே காதி
நந்துற நானா விதமுறு ரூப
　　நண்ணிய நாமமா திகளை
முந்துறக் கான னீரெனச் சிருட்டி
　　முட்டிய தொழிற்பரப் பியது
னிந்திர சால மல்லவோ வுளவோ
　　வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 11

என்னகத் திருக்கு மெனக்குணீ யுனக்கு
　　ளிருந்ததும் யென்னை மறந்தே
யென்னகத் திருக்கு மெனையன்றித் தேடி
　　யெங்கெங்கு மோடியா னிளைத்தே
னென்னகத் திருக்கு மெனையன்றி யாவு
　　மிலையிலை யிலையென வறிந்தே
னென்னகத் திருந்து மெனக்கொளித் ததுவென்
　　னியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 12

மாசிலா மணியே முனிவர்க ளிறையே
　　வள்ளலாய் வந்தகண் மணியே
தேசிக னாகத் திரண்டுரு வெடுத்த
　　சித்தனே யொளிர்சிந்தா மணியே

ஈசனே தேசோ மானதந்தாட் கொண்ட
வென்னுயிர்க் குயிரதாந் துணையே
போசனே வாழி குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 13

இகபர மிரண்டி னுயிரினுக் குயிரா
யியங்கிய வாசியா மலரை
முகர்ந்தக மகிழ்ந்து நாதகீ தங்கள்
முழங்கிய பேரின்ப வீட்டிற்
சுகமுறச் சும்மா விருக்கவா வெனவென்
றுயர்பவக் கடல்கடப் பித்தாய்
புகழ்பிர காசக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 14

பெருகுமட் டாங்க யோகமெய்ஞ் ஞானப்
பேரின்பக் கடலமு தூட்டிக்
குருமணி யணிந்த மார்பினி லணைத்துக்
கொண்டுபின் முத்திதந் துவப்பாய்
மருவியென் றனக்கு ளிருந்தெனக் களித்த
வாசியாய் வந்திரு கலையின்
புரிமயச் சுடராங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 15

மூலத்து ளெழுந்த நாடிமூன் றுட்னே
முயங்கிய நாதவா யுவினுட்
சீலமா முக்கண் குவித்தகக் கண்ணைத்
திறந்தொளிர் வாசியை நோக்கி
மேலுமே ணடனச் சிலம்பொலி கான
விளக்கியெற் கின்னமு தளித்தாய்
போலுறா தடருங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 16

கதிரில கியதூண் டாமணி விளக்கின்
    கதிர்தரு மண்டப மதனுட்
டுதியுற விருத்தி யின்னமு தளித்துத்
    துன்னுமேழ் பவத்தொடர் பகற்றித்
ததும்புறா தென்னைத் தயவுதந் தாண்டாய்
    சச்சிதா நந்ததற் பரமாம்
பொதுமையா மின்பக் குணங்குடி வாழும்
    பூரண மௌனதே சிகனே. 17

குறிகுணா தீத வகண்டிதா காரங்
    கொண்டுளங் கனிந்தமு தொழுகிச்
செறிமணி நாத விளக்கினால் விளக்குந்
    திகழ்சுழி முனையெனு மனைநின்
னெறிநிலை நிறுத்தி யென்னையாட் கொண்டாய்
    நித்தனே நின்மலா னந்தப்
பொறிபொறித் துயருங் குணங்குடி வாழும்
    பூரண மௌனதே சிகனே. 18

நண்ணிய சுவாச மெனும்பொரு ளதனை
    நாளுக்கு நாட்குறைந் திடவென்
றெண்ணியே கொள்ளைக் களவுசெய் கள்வ
    ரென்னுநால் வரையுமே பிடித்துத்
திண்ணுறும் வாசி நூல்விலங் களித்துச்
    சிக்கெனச் சிறையினி லடைத்தாய்
புண்ணிய னென்னுங் குணங்குடி வாழும்
    பூரண மௌனதே சிகனே. 19

உடலுயிர்க் குயிரா யுறைந்ததே பொருளென்
    றுரையுவ மையுமிலா திறையைத்
திடமுறக் கரத லாமல கம்போற்
    றெளிவறத் தெளிந்தெனுட் காட்டிச்

சடமநித் தியம்பொய் பொய்யெனத் தேறுந்
தரமளித் தாயிரு வினையைப்
பொடிப்பொடி யாக்குங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 20

சுத்தவட் டாங்க யோகமே காட்டிச்
சுடரினைத் துலங்கிடக் கூட்டிச்
சித்தசாஞ் சல்ய மின்றியுண் ணாட்டித்
திகழ்தரத் தெளித்தரு ளூட்டி
வத்துதா னென்னு நிலையினிற் பூட்டி
வருமம தைகளற வோட்டும்
புத்திதந் தாண்டாய் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 21

எந்தனா லறியப் படும்பொரு ளியாவு
மெனக்கநித் தியமென வி[illegible]சத்து
மந்திர வைம்பத் தோரெழுத் ததனின்
மருவியா னினைவையு மறக்கத்
தந்திர மாக வோர்மொழி மொழிந்தாய்
தற்பரா நந்தமெய் யோகம்
புந்தியி னொளிருங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 22

பிறவிலா முகந்தர்ப் பணத்திரு மையினைப்
பெற்றுமோர் முகமெனு மதுபோற்
குறியிலாப் பரமே சீவனாய் விளங்கு
கொள்கையீ திரண்டல வெனவென்
னறிவினை விளக்கி யகண்டமாய் விளங்கு
மந்நெறி நெறியென நிறுத்தாய்
பொறுமைசே ரின்பக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 23

சணங்குடி நேய தந்தைதன் தாயார்
தன்மக்க ளொடுமனை வியினாற்
பணங்கொடு தேடும் பவக்கட னீந்திப்
பரவெளி யெனுமுப்பாழ் கடந்து
பிணங்கிடா திணங்கும் பின்னொடு முன்னிற்
பேரின்ப விட்டினைக் காட்டுங்
குணங்குடி வாழு மௌனதே சிகவெங்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வோம். 24

## கீர்த்தனம்

*இராகம்- சௌராஷ்டிரம்-ஆதிதாளம்*

*பல்லவி*

அவனன்றி யோரணுவு மசையாதென்ப
தறியாயோ நெஞ்சமே

*அனுபல்லவி*

தவனின் றொளிருமறந் தங்கி வளருமோன
தற்பர நித்யசிற் போதன் – மகி
ழற்புத மானவி நோதன் – என்று
செப்புங்குணங்குடி நாதன் (அவ)

*சரணங்கள்*

1. ஈயெறும் பாதி தொடாம லெந்நேரமு
மேதுக்கிவ் வாக்கையை நாடி—யதில்
நேயம தாகவே நீயபி மானித்து
நின்றனை யேநிதந் தேடி—சுடுந்
தீயஞ்சும் வெஞ்சொல் லெனும்பொய் யுரைத்துத்
தியக்குறும் புன்னிதிக் கோடி—சற்றுந்

தூயதென் றன்றிப் புவிமிசை நின்றுமூ
வாசையிற் றோய்ந்துமெய் வாடி—யுழல்
மாயமொழிந்திடக் கூடி—யரு
ளீயுங் குணங்குடி நாதன் (அவ)

2. நன்மைவந் துற்றாலுந் தின்மைவந் துற்றாலு
நானென்று நின்றுகொள் ளாமல்—நாளும்
புன்மை நிறைந்திடும் வாரியில் மூழ்கிப்
புதைந்தனை யேனோதள் ளாமல்—புகல்
இம்மை மறுமை யிரண்டற வொன்றுள
தென்றதை யின்றேவிள் ளாமல்—இகழ்
மன்னுந் தொழிற்செய நேர்ந்தனையோ கெடு
வாழ்விதென் றெண்ணியெள் ளாமல்—நின்ற
தன்னைக் கடிந்துகிள் ளாமல்—நின்ற
தென்னோ குணங்குடி நாதன் (அவ)

3. பொறியும் புலனைந்து பூதமும் பேதமும்
புகல்கர ணங்கடந் தோனே—மலஞ்
செறியுஞ் சஞ்சல மென்னும் பொருளும் வினையிரண்டுஞ்
செய்யுந் தொழிலுமிடந் தோனே—நல்ல
நெறியும் பலசமயக் குறியு நாதாந்தத்துன்
னினையு நனவும் படர்ந் தோனே—யோகத்
தறியுங் குறியுந்துன் னிறையும் பரவெளியென்
றடருங் கடலில்நடந் தோனே—விட்டுப்
பிரியாதவருள் தொடர்ந் தோனே—எனக்
கறிவாங் குணங்குடி நாதன் (அவ)



வேங்கடராயப் பிள்ளைக் கவிராயர், 'தாயாகவும் தந்தையாகவும் குருவினோடு தெய்வமாகவும், எங்கும் குணங்குடியாய் நிறைந்து காப்பாற்றும் பரம் பொருளாகவும்' குணங்குடியாரைப் போற்றித்துதிக்கின்றார்.

## தோத்திரப்பா

### *மஸ்தான்சாகிபு அவர்கள் மீது வேங்கடராயப்பிள்ளைக் கவிராயரவர்கள் பாடியது*

### *அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

எல்லா மறிந்து மனமிலையோ
விரக்க மிலையோ வுன்னஞ்சங்
கல்லா வுரைக்க வாயிலையோ
காண வருத்தங் கண்ணிலையோ
பொல்லா ரெனினு மடிமையென்று
புகுந்த வடியார் தமைக்காக்க
வல்லா யலவோ குணங்குடியாய்
வாழு மமுதே மகதேவே. 1

மாவே தனையி லடியார்கள்
வருந்தப் பார்த்து மனமிரங்காக்
கோவே நினக்கு மெவர்கள்குணங்
குடியா னெனவும் பெயர்கொடுத்தார்
பூவே மணமே யுன்னாமம்
பொருந்தும் வகைநீ புரியாயே
னீவே றெனவு முலகமெலா
நிந்தை கூறு மிதுநிசமே. 2

வேத னிலையோ அரியிலையோ
வேணி யரனு மிலையோவோர்
நாத னிலையோ பலகோடி
நாமம் படைத்த தேவர்களும்
போது விலையோ முறையிடிற்கேட்
போரு மிலையோ பொருளிலையோ
நீத மிலையோ குணங் குடியாய்
நீயு மிலையோ புகலாயோ. 3

தருண மறிந்துங் காவாய்நீ
    தரணி மிசைநின் னடியார்க்குக்
கருணை புரியுங் குணங்குடியாங்
    கடவு ளெஂப தழகேயோ
பெருகு மிலவு காத்தகிளி
    பெறும்பே றலதென் பயன்கொளுவா
ரருமை யொடுநின் பதம்பரவி
    யழுது கனியுந் தொண்டர்களே. 4

ஏச மனமும் வரவிலையே
    யீயார் புகழ்பே சாதுஂபுகழ்
பேச மனமும் வரவிலையே
    பெருகு பசிக்கு மோய்விலையே
வாச மிலகு குணங்குடியாய்
    வருத்து மிவையெல் லாமறக்கப்
பாச நமனும் வரவிலையே
    பாவி யடியேன் படுவதென்னே. 5

கல்லா ருறவும் பெரும்பசியுங்
    கழிந்து போகும் வகையுரைத்து
நல்லா ருறவு நிஂபதமு
    நாயே னடையும் படிபுரிவா
யெல்லா ராலு மறியவொண்ணா
    விறைவா விந்த வேழையொடு
மல்லா டுவதென் குணங்குடியாய்
    வாழு மமுதே மகதேவே. 6

அடியே னிந்நா ளுரைத்தவண்ண
    மாக விதையு மெண்ணியிருந்
திடிலார் கதிசொல் குணங்குடியா
    யெல்லாங் கடவு ளறியாதோ

கொடியா ரிடத்திற் சென்றுமனங்
        கூசிக் கைகா லலைந்தலைந்து
மடியாப் பிணம்போன் மடிவதற்கோ
        வகுத்தா னெனைநான் முகத்தோனே. 7

செய்யும் வகையுந் தெரியவிலை
        தேவர் மனமுந் தெரியவிலை
வையு மடையர் தமையடுத்து
        வாழ்த்தித் துதித்துப் பற்காட்டிக்
கையு மேற்க மனமுமிலை
        கருத்து நிலையா நிற்கவிலை
பெய்யுங் கருணைக் குணங்குடியாய்
        பேதை யேற்கோர் வழியருளே. 8

சொந்த மிலையோ பன்னாளுந்
        தொழுத திலையோ அடிமையெனும்
பந்த மிலையோ பிள்ளைகளைப்
        படைத்த திலையோ வருந்துமவர்
சிந்தை யறியுஞ் செயலிலையோ
        தேவர் வாழுங் குணங்குடியாய்
முந்த வினைக ளைத்தடுக்க
        முதல்வா வேண்டுந் தருணமிதே. 9

பெரியோ ரெவரும் புகழ்ந்தேத்தும்
        பெரிய வுனையிப் பேதையனாந்
தெரியா வறிஞ னேதேதோ
        திகைத்துக் கவியாற் சொன்னவெலாஞ்
சரியா யுரைக்குந் துதியெனவே
        தங்கு முனது மனங்கொண்டு
பரிவா யருளக் குணங்குடியாய்
        பல்கா லுன்னைப் பணிவேனே. 10

நீயே யீன்ற தாய்தந்தை
நீயே குருவி னொடுதெய்வம்
நீயே யடியார்க் குதவுபொருள்
நீயே சமய மறியும்வஸ்து
நீயே ஞான நெறிவிளக்கம்
நீயே விளங்கும் குணக்குன்றம்
நீயெ யெங்குங் குணங்குடியாய்
நிறைந்திவ் வடியைக் காப்பதுவே. 11

◆ ◆ ◆

கோவளம் அருணாசலம் முதலியாரின் மகன் சபாபதி முதலியார், 'அடியவர் விரும்பும் பொருளையெல்லாம் தரும் 'தேவதருவாகவும்', 'பேரின்பப் பரமானந்தச் செல்வமாகவும்', 'தவப் பேறாகவும்' போற்றுகின்றார்.

## பஞ்சரத்னம்

*குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் மீது*
*கோவளம் அருணாசல முதலியாரவர்கள் குமாரர்*
*சபாபதி முதலியார் பாடியது*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

ஏர்பூத்த நயமுகமு மருள்பூத்த விருவிழியு
மெழிற்செவ் வாயும்
தார்பூத்த மணிமார்பு மடியாரைப் பரிந்தணைத்துத்
தாங்குங் கையும்
நீர்பூத்த மலர்த்தாளுங் கண்டெளியேன் தொழுவதென்றோ
நிகழ்த்தல் வேண்டுஞ்
சீர்பூத்த சென்னையில்வாழ் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 1
வையமதி லெனக்கெனவந் திடும்பாழாங் கொடியவிருள்
மாயை நீங்கத்

துய்யநின தருள்நோக்கே விளக்கெனவந் தடுத்தினியுன்
துணைத்தாள் நல்காய்
மெய்யடியா ருளத்தின்முளைத் திடுகரும்பே மதுரமெல்லாம்
விளைந்த தேனே
செய்யமணிச் செழுஞ்சுடரே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 2

பாவநெறிக் குடன்படுத்து மடமாதர் மயக்கில்விழும்
பதக னேனை
வாவெனநின் திருநோக்கா லழைத்திடுத லெந்நாளோ
வழுத்தல் வேண்டும்
ஆவலுறும் பழவடியா ருன்னுகின்ற பொருளனைத்து
மளிக்க நாளுந்
தேவதரு வாய்விளங்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 3

பருதிதேர்ப் பாகனைவந் திருளணுகு மோநினது
பதுமத் தாளைக்
கருதுமடி யவர்கள்குழாத் திருக்குமெனை யஞ்ஞானங்
கலப்ப துண்டோ
சுருதிகளு முணர்வரியு பரம்பொருளே யேழுவகைத்
தோற்றத் திற்குந்
திருதியாய் நின்றளிக்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 4

தொல்வினையாந் திரையெறியும் பவக்கடலிற் சுழலுகின்ற
துரும்ப னேற்குக்
கல்வியினைத் தந்தரிய ஞானவழி காட்டலுன்றன்
கடமை யையா
பல்வளஞ்சேர் சென்னைநக ருறைவாழ்வே பேரின்பப்
பரமா நந்தச்
செல்வமே தவப்பேறே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 5



புலவர் நாயகம் காயற் பட்டினம் செய்கு அப்துல் காதர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் 'வேதாகுணங்குடியின் நாதா அருந்தவ வினோதா' என்றும், 'அற்புதங்கள் நிகழ்த்தியுள்ள நபியே' என்றும், 'பித்தன் மஸ்தான் என புவி பயிற்சி கொளும் மாநாதரே' என்றும் போற்றுகின்றார்.

## ஒருபாவொருபஃது

*மஸ்தான் சாகிபு அவர்கள் மீது காயற்பட்டணம் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் பாடியது*

*பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

அருவுருவ முருவுருவ மிருவுருவ முடனமைய
மடலுலவை யெரிய ழலுமேல்
அறைபுனலும் விரிமணலு மறைவெளியு மெனவிவைகள்
அணுவினணு வினும ளவிலா
மருவுருவ மலைகடலு மெறும்புடவி படர்ககனு
மதியினொடு கதிர்ப ரிதியும்
மணியினிதி யுலகுமெரி நாகுமவண் முயலமரர்
வகையுமிவை நனிபல னுறூஉம்
ஒருவுருவ மனுவுமெதிர் பகையுருவ கணமுமமை
ஒருவனருள் பெருகு நபிகள்
உரையொழுகி வருமுதிய வறிஞரினு முயர்பதவி
யொலிகளென நிலைமை புரிவீர்
வெருவுருவ முளமுடைய நுமத்டியர் துயரகல
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 1

காணாத நீர்கான லானாகு மாறாய
காலோக மாமா யையும்

காயாது பூவாது தானேக மாயோடு
காலேற வாவா னதும்
நாணாது கோணாது நானேய லாதேதெ
ணாவாணு வாகா ரமும்
நாடாத பாலோடி யூடாடு தீவேக
நாயோடு பேயா னதும்
தோணாது பாழாக மேலேகு மான்மாசொ
ரூபாகி சாலோ கமெய்
சூழாத சாமீப சாரூப மாய்வாழி
தூய்தான மேல்வாழ் குவீர்
வீணான வீணாள ராகாம னேராக
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
விணோதா புரந்த ருள்கவே. 2

துதிமொழிக ளோயாது மனவுறுதி சாயாது
தொழுகைநிலை மாயா துசீர்
தொடர்நியம மாடாது விரதமுறை கோடாது
சுருதிநயம் வாடா துமேல்
குதிகொள்வினை காணாது கசடுபல பூணாது
கொடுமைவலி வேணா துவீன்
குலவுநடை பாவாது பலபொருளின் மேவாது
கொலைகளவு தாவா துநேர்
அதிககுண மாயோக தவமுயலு மேலோர்க
ளருமையோடு மாறா துநும்
அடியிணைக ளேகூடி யினியபல பேறான
தணிபவர்க ளேகோ டியே
விதிமறையி னாலாளு மொருவனரு டானான
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
விணோதா புரந்த ருள்கவே. 3

மனுநீதி யுணராத பெருமூடர் முதியோர்கள்
மரியாதை தெரியா தவர்
மதிவேறு மொழிவேறு பொருள்வேறு படுவார்கள்
மலிகோர நிறைநா வினர்
சினமூறு மனமாய மறியார்கள் குறியாத
சிறியோர்கள் வெறியாள் பவர்
திருமாது பகையாளர் மலர்மாது வசையாளர்
திறமாது மறமாள் பவர்
துனிசேரு நடையாளர் பெரியோர்க ளடையாளர்
துயர்வாழு மிடையா ளர்கள்
தொழுதாலு மகலாத கெடுபாவ முடையார்கள்
சுகமேது பெறுவார் களோ
வினவாத வினையாவு மொருபோது மணுகாமல்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 4

பேராத வன்புடைய தாய்தந்தை தந்துணைவர்
பேராசை தந்த மனையார்
பேறான மைந்தர்புடை சூழ்சால் பெருங்கிளைஞர்
பேரா நிறைந்த வுறவார்
ஆரா ரிருந்திடினு மாராரு வந்திடினும்
ஆதார மொன்று மிலையால்
ஆகாத வன்செயலி னாலே யெதிர்ந்தவினை
யாடாத கன்றொ ழியமேற்
சாராது வெம்பவ மெலாமோட வெங்கணிலை
தாழாதி கம்ப ரமுநீர்
தாமாக நின்றருளி னாள்வீர்க ளென்றுமது
சார்பா யடைந்த வெளியேம்
வேராதி கொண்டமண மார்பா விரிந்தமலர்
விழிகருணை யானோக் கியே

வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 5

சுற்றிப் பிடித்தகொடி யொத்துப் பெருத்துபல
சுற்றத்தார் மற்று ளர்களும்
துக்கச் சகித்துடை யுடுக்கத் தரிக்கநகை
சுட்டுத் தடுத்தி டுதலால்
பற்றித் தொடர்தொடுமு னெய்த்துப் பசப்புமெழில்
பச்சைக் கிளிக்கு தலையார்
பட்சத் திடத்துயிர்த் திகைப்பச் செறுத்தறிவு
பட்டுப் புறப்ப டுதலால்
எற்றித் தவத்தினைமு றித்துக் கருத்தினை
யெடுத்துக் குலப்ப கையைமேல்
எட்டிப் பிடிக்கமதி யற்றுப் பவத்தொழி
லிழைத்துப் பிழைத்து ழல்வரே
வெற்றிக் குணக்குரிசி லெத்திக்கு மெய்ப்பநிறை
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 6

முன்பொன்றி நின்றுறுதி யின்சிந்தை விந்தையின்
மொழிந்தண்டு கின்ற முதியோர்
முங்கும் பெருந்துறையி ருந்தங் கெழும்புகழ்
முகந்திங் கிதம்பொ ழியவே
அன்பொன்று கின்றபல ஸன்றன் றுவந்துமகிழ்
வங்கம் பெருந்த கையுளார்
அந்தந்த மன்பதைக ளும்பந்த முங்குளிர்
அகங்கொண்டு வந்து தொழவே
என்பொன்று மின்பநிலை கண்கண் டிழிந்தகுண
மெங்குங் கடிந்த ரசர்கள்
எம்பந்த மெம்பொருள்கள் நுந்தஞ்ச மென்றடியி
னென்றுஞ் சரண்பு குதவே

மின்பொன் றுலங்குண நன்கின் றருங்குரிசில்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 7

பாற்றேட்டைத் தேத்திரளை மாச்சோற்றைத் தீங்கனிகள்
பாற்சோற்றைத் தேட்ட மதுபோல்
பார்த்தூட்டற் கேய்ப்பவறி வாற்றேக்கித் தேற்றநெறி
பாற்சேர்த்துக் காத்திடு தலால்
காற்றோட்டக் கேத்திரமெய் மேற்போக்குக் கீழ்க்கழிவு
காற்பாச்சற் பூட்டி நடுவிற்
காப்பாக்கக் கோட்டைவெளி கூத்தாட்டுக் கோட்பைநனி
காப்பாற்றிக் காட்டு தலினால்
தோற்றாட்சிக் காக்கியது பார்ப்போர்க்குப் பார்க்கரிய
தோப்பாய்க்கத் தாத்த கையதாய்த்
தூர்த்தாக்கிற் பூத்தநனி காய்த்தாக்கத் தாற்குலவு
சூழ்ப்பேட்டைப் போக்கி டுதலால்
வேற்றாட்டத் தோற்றரவு சீத்தோட்டிப் போற்றிசெய
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 8

வையமொரு கையினுற மெய்யியல்கள் பொய்யினுற
மையல்வலை பெய்யு மடவார்
வள்ளியிடை விள்ளுமுரை வெள்ளைவிழி துள்ளவரு
வள்ளமுறு கள்ளை விடலால்
பையமதி தொய்யவறி வுய்யவுணர் வையவெறி
பையிலிடு கைய தனினால்
பள்ளமிகு வெள்ளமிசை தள்ளவிழு முள்ளழிகொள்
பள்ளையர் தமுள்ள நிலையாத்
துய்யமகள் செய்யமகள் மெய்யின்மகள் கையின்மகள்
தொய்யிலணி வைய மகளும்

துள்ளிமல ரள்ளியெதிர் கொள்ளுமது பள்ளியிடை
துள்ளலிசை தெள்ளி யுறலால்
வெய்யவினை நையவருள் செய்யுமென தையநிறை
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 9

கன்னுமதி யுன்னினைவி னன்னுமன வெண்ணமத்து
கன்னுடுயி லொன்னு பொழுதம்
கன்னல்மொழி யன்னநடை மின்னினிடை பொன்னனையர்
கன்னிநல மன்னு பொழுதும்
ஒன்னிதிக ளுன்னுதொழில் பண்ணுபொழு தன்னமுத
லுன்னலொடு தின்னு பொழுதும்
உம்மையல திம்மையுள தெம்முவையும் வெம்மையற
வும்மருவல் பம்மு பொழுதும்
தன்மையொடு மென்மையொடு பெண்மையொடு முண்மையழி
தன்மையொடு திண்மை கொளலால்
தன்மகிமை யின்மைபெற வன்மையற நின்மையொடு
தன்மைபுரி சொன்மை யருள்வீர்
விண்ணுலகு மண்ணுலகு மென்னவரு மண்ணல்நிறை
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 10

வண்டனைச் சண்டனைக் கொடியனைக் கடியனை
வாதாடு மொழிகே டனை
வஞ்சனைப் புஞ்சனைக் கோபியைப் பாபியை
மாபாத கத்தொ ழிலனை
மிண்டனைக் கண்டனைக் கதியனைக் கொதியனை
வீணான வீணா ளனை
வெஞ்சனைக் கொஞ்சனைக் கொலையனைப் புலையனை
வேகா வருங்கன் ணனை

அண்டனைக் கண்டனைத் தண்டனைத் தொண்டனை
யாகாத புன்செ யலனை
ஆதியி னிடத்திரந் தன்பினொடு மெண்பிழை
யகன்றொழிய வருள்பு ரிகுவீர்
விண்டலமு மண்டலமு மெண்டிசையு மண்டுபுகழ்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. 11

*இதுவும் அப்புலவர் பாடிய*

## தோத்திரப்பா

ஆதியொரு வன்கருணை யக்கட லிடைப்படிந்
தாவியுட லின்செ யலெலா
மமையுமறை போனிறீஇ யெழுவகைத் தோற்றத்தி
னாடுமொழு பண்பி னியல்பே
நீதியொடு மொருமைப்ப டக்கண்டு முருவங்க
ணிலைபேறு தலைமா றிடா
நீடொளிவி னுதயநில னென்றுகொண் டும்பொருளை
நிச்சயித் தொன்று படவே
சோதியுள நினைவினா லைம்பூத வியல்பையுஞ்
சோரவிட் டும்பெறு குணந்
தோன்றலான் முழுமையு மாய்ந்துசுய வஸ்துவாய்
தூய்மைபெற நின்ற வொலியே
போதிய குணங்குடிக் குரிமைபூண் டுயர்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 1

குவியுமுய ரறிவினாற் பலவாக நினைவினைக்
கும்பித்து வாயு வுடனே

குறிபெற நிறுத்தியுள் ளெழுநாத விசையினிற்
சஃர்ந்துடலி னியல்பொ ழித்துச்
செவியொலி யொதுக்கிவிழி தெரியா தடக்கிவரு
தேகபரி சந்த கைத்துத்
தேற்றாது வாசனைக ளோர்சுவையு மேற்றாது
சிந்தையா நந்த முறவே
கவினிரவு பகலற்று நிற்குநிலை நின்றுயிர்
கலந்திடத் தபசு செய்தீர்
காளையம் பருவத்தி னுலகந் துறந்தவெகு
காரணம் விளைத்த வொலியே
புவிபுகழு நற்குணங் குடிகொண்ட பின் சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 2

கருதரிய வஸ்துவாய் நின்றவொரு வன்கருணை
கனிதர வெழுந்த கடலிற்
கதிர்பல விரித்தமுத் தாகிவரு நபிநாதர்
கதிபெற வளித்த நெறியிற்
பெரிதுதவு முறையெலாங் கண்டுகண் டுலகநனி
பிரசித்தி நிற்க வகையாய்ப்
பிரிவிலா தறிவொடு புகட்டுவித் திருமையது
பேற்றினை யெடுத்த ருள்செயு
மரியமன நிறையன்பு மாதரவு மோர்மையுமெய்
யணியுமுறு தித்த குதிய
மவரவர்க டஞ்சிந்தை தன்னிலே தோற்றவெளி
யாகுநடை கொண்ட முகிலே
பொருவரிய நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 3

வன்மைதரு மொழிவிட்டு மனவாஞ்சை மதிவிட்டும்
வார்மையொடு சீர்மை விட்டு
மருவுசுவை யினைவிட்டு நல்லுடைக டொடர்விட்டு
மணமோங்கு பொருள்கள் விட்டும்
பன்மைதரு தொழில்விட்டு நன்மைகொளு முறைவிட்டும்
படருரிமை பாசம் விட்டும்
பற்றுடைய வினைவிட்டும் வித்தைகொளு முறைவிட்டும்
பண்ணிசையி னினைவும் விட்டு
மின்மையடு குணம்விட்டு மன்னெறிகள் மதம்விட்டு
மிருமைதரு வகைகள் விட்டு
மேற்குமுட லினைவிட்டு நோக்குவன பலவிட்டு
மேகநிலை விட்டி டாமற்
புன்மையடர் நற்குணங் குடிவிட்டி டாச்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யார்வுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 4

எங்கினு மிருந்துவரு வார்மனமு மேந்துத
லெடுத்துவரு வார்க டொழிலு
மிகலுள மதித்துவரு வார்குணமு நன்மையி
னியைந்துவரு வார்க ணெறியு
மங்கமணி கோலமிக வேய்ந்துவரு வார்நிலையு
மண்டிவரு வார்க ணடையு
மறிவின்முறை கொண்டுவரு வார்திறமு மற்றுலக
மகலவரு வார்கள் விதமு
மிங்கித முடன்றெரிந் தந்தந்த நிலைகளுக்
கிசைகின்ற துறைக ணோக்கி
யின்பத்தி னார்வமொடு கண்டித்து மேலேறி
யியல்போடு நிற்கு மறிவே
புங்கநிலை பொங்குநற் குடிகுணங் கொடுசென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்

போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 5

சொல்லினா லறிவுமது பொருளினா ஷயமுமதி
தொடர்பினா லுயர்ஞா னமுந்
துதியினா லொருமையெழு நினைவினா லிறுதியுந்
துறிவினா ஷனிவாழ்க் கையு
மல்லினாற் றனிமையும் பகலினாற் கவலலும்
மருளினா லிகப ரமுமே
யன்பினாற் பேறுமடு துன்பினாற் சுகமுமற்
றாவியால் யோக நிலையு
மல்லினாற் கொண்டோங்கு மாதவர்க் கொருமா
மணிச்சுட ரெனத் திகழவே
மகிமையொடு செய்தவப் புஞ்சமே யஞ்சுமன
மருளற்ற தெளிவ ருளுவீர்
புல்லினாற் பெருகுசுக நற்குணங் குடிசென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 6

கோவைதரு சொற்றொடரி னாற்கவிதை யுஞ்சீர்மை
கொண்டிடுமு ஷாஜாத் துநாட்
கொளுவார மோதிடுது வாவுமிறை யோனருள்
குலாவுதிக் றும்ப லபலத்
தேவுக ளொடுங்கிவந் தடிதொழச் செயுமறைத்
திருவாக்கி யத்தி சுமுமே
சேருமடி யார்க்காக வற்பினாற் செய்துமித்
தேசத்த ருந்த மிழினாற்
பாவகை யனந்தமு மியற்றிவளர் நல்வழி
பயிற்றிமுறை யாலுல கெலாம்

பட்டீர்த்தி யறிவினொடு துறவுமா யொன்றுபோற்
பரிவுற் றெழுந்த வொலியே
பூவுலகி லுயர்குணங் குடிபெற்ற பின்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 7

எந்தெந்த திசைதோறு முறுஞான யோகிக
ளியைந்தபடி பணிந்து நெறியி
னியல்நடை யொழுகுமதன் வகையுமிக விவரமா
யெப்போது முற்ற றிந்து
சந்தந்த ருஞ்சிந்தை யானந்த வாரியற்
றாழ்ந்துவந் தினிது போற்றுந்
தக்கவர் செறிந்தவனு மந்தக்கு டிக்குள்வளர்
தருசெய்கு சாகிப் பேரா
வந்தந்த சமயமுற் றினுமுள்ள சூட்சிக
ளனைத்துமொரு மதிம திக்க
வறிவா ளொதுக்கிவிட் டொருசார மும்பற்றி
யடராது கண்டித்து மேற்
பொந்தென்று நற்குணங் குடிகொண்ட பின்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 8

மகிழோங்க வுள்ளமறி வுகளோங்க நன்னிலையின்
வழியோங்க மொழியு மோங்க
மறையோங்க வுண்மையது துறையோங்க மாதவமெய்
வகையோங்க மிகையு மோங்க
இதழோங்கு தீவினையி னிகழோங்கு முலகநடை
யெதிரோங்கி டாம லுடலி

னியல்போங்கு மைம்பொறிக ளயர்போங்க விட்டுறுதி
யிகமோங்க மகமோங் குவீர்
அகமோங்கு பாவிமன முகிழோங்கு பன்னினைவி
ண்டலோங்க விடமா றினின்
றகமோங்க வெந்துயரி னகையோங்கி டக்குழறி
யழுதேங்கன் முறையா குமோ
புகழோங்கு நற்குணங் குடியோங்க வுஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 9

நலனார்ந்த முகிலினிறை கடலினுங் காட்டினுயிர்
நனிதுன்று கிரிக டமினும்
நாள்செய்கதிர் மதியினுந் தாரகை கணத்தினும்
நகுமணிகொள் பொற்ப தியினும்
வலனார்ந்த மற்றுள்ள செல்வத்தி னும்பேற்றின்
வகையினும் பலபே தமாய்
வழிகின்ற வோரெளியை வெளிகின்ற வறிவது
வரம்பினாற் றடைப டுத்திப்
பலனார்ந்த செய்குசுல்த் தானப்துல் காதிர்லெப்
பையாலீ மென்ற புகழைப்
பல்லோர்க ளும்பித்தன் மஸ்தா னெனப்புவி
பயிற்சிகொளு மாநா தரே
புலனார்ந்த நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 10

*அப்புலவரே பாடிய*

## வாயுறை வாழ்த்து

*நேரிசை யாசிரியப்பா*

கார்நனி விசும்புங் கதிரு மதியு
நீர்நனி கடலு நிலனு மலையு
மைம்பெரும் பூதமு மவற்றா னோங்குந்
தம்பெருங் குணமுந் தழூஉஞ்சார மசரமுஞ்
சென்ற வாணையிற் சிதையா நிலையிலு
நின்ற முறையே நிகழ்தலி னாலு
மேறுமா றாகா வேறுவே றாக
மாறுகூ றாகா மன்னுரை யாலுஞ்
சாதியுந் தொழிலுந் தக்கன பண்பும்
பேதியா தியங்கும் பெறுமுறை யாலுங்
கோன்மையிற் பாகங் கொள்ளுங் கூட்டின்
பான்மையொன் றில்லா வல்லபத் தாலே
யொன்றே யனைத்தையு முடையவுண் மைப்பொரு
ளென்றே மறைவிலா தியங்கு கின்றதை
விடுபடு திரைகளால் விளங்கா தாய்ந்துங்
கதிபடு மனத்தாற் கலங்கு மக்கா
ளோர்வழி முயல்வா னிலைத்த சிந்தையி
னோர்வழி முயல்வா னுணரு மக்காள்
பதையா திருக்கும் பண்புடைச் சான்றீ
ரிதையா சனஞ்சீத் திலங்கிய சான்றீர்
நற்கருத் துடையீர் நனியறி வுடையீ
ரெற்கருத் தியம்புவ னினிதிற் கேண்மின்
பதியிற் சிறந்த பதியா மதுரைப்
பதியிற் பிரபல மநேகம் படைத்தவ
ரருங்கலைக் கடலை யகமெனுங் கலத்தா
லொருங்களந் தறியா வுயர்கரை கண்டவ

ராலயக் கபாடத் தலைதா டிறக்க
மேலவர் துதிதரப் பாடிய வென்றிய
ரலைவா யுஃமருண் டரித்த வரியினை
யுலைவாய்ப் பெய்யா தொருபுறம் பெய்யுந்
தங்கையைக் கண்டு தகாதென யாழொடு
சங்கித முயற்சியைத் தகர்த்துவிட் டெறிந்தவ
ருயர்நபி நயினா ரோதிய வொசிய்யத்
தியறர வெவர்க்கு மியற்றமிழ் செய்தவர்
நுவலரு மின்னா நூறுத் தீனென்
றெவரு மேத்து மிருந்தவ மேலவர்
பயனார் மரபிற் பலன்கொள வந்த
நயினார் முகமது சாகிபு நாத
ரருளிய சுல்த்தான் அகமது சாகிபு
தருசேய் செய்கு மீறான் சாகிபு
செய்ந் தவமு நேர்மையுந் திரண்டு
வையம் விளங்க வருமொரு மாதவ
ரில்லறந் துறவற மிருகை யொழுங்கு
நல்லற மாக நடக்கு நடக்கையர்
மலையும் வனமு மறைபடு தலமும்
நிலையு முணர்வா னிட்டை யோகம்
வணக்கங் காட்சி வகைபல கொண்டு
முணக்கு முடலோ டொருமுகந் தொடர்ந்து
மிருபத் தைந்தாண் டிதுசஞ் சாரந்
தருபத் தியினாற் தந்நிலை விளங்குங்
காரண வொலியாய்க் கமல கொண்டானிற்
பூரண மடைந்த புண்ணிய மூர்த்தி
நன்றிசால் செய்கு நயினார் முகம்மது
வென்றிசா லரும்பயன் விளங்க வந்த
நற்குணங் குடிகொ ணயினார் முகம்மது
இக்குணங் குடியி லிருந்தவக் குன்றாய்

நலம்பெற வுதித்த நன்மக வானோர்
தவம்பெறு முறைமையைச் சாற்றக் கேண்மின்
சிறுபரு வத்தே தெளிதரு வேதத்
துருபய னெல்லா மோதி யுணர்ந்து
மரபி னிலக்கணத் தாவன வெவையு
மறுவறத் தேறு மதியின ராகி
யொப்பில் குணத்தி னோங்கிய சுல்த்தான்
அப்துல் காதிரி லெப்பை யாலீம்
எனப்பெயர் விளக்க மெழுந்து வருகையில்
வனப்புறூஉம் வாலை வயதுபதி னேழிற்
றந்தைதா டொழுது தருங்கரம் பற்றி
முந்த வுபதேச மொழிநலம் பெற்றுத்
தன்னிலை திரியாத் தவத்திய லெடுத்து
மன்னிலை கொள்ளும் மனத்தி னானே
தவத்தின தியல்புந் தாபத ரியல்பு
நலத்துறை யுணர்த்து நன்னூற் பலவுங்
கைதருங் கீழக் கரைதனில் வாழுஞ்
செய்கு அப்துல் காதிரி லெப்பை
யாலீ மிடத்தி லருளினோ டோதிச்
சாலவுந் தேறித் தாபத முறைகொண்
டருணபி கிசுறத் தாயிரத் திருநூற்
றிருபதோ டிருநான் காண்டினி லுலக
முற்றுந் துறந்து முறைபல கடிந்து
பற்றற் றெவையும் பயன்பட வொழுகித்
தேங்கமழ் சோலைத் திரிசிர புரத்தி
லோங்கிய வறிவா னுயர்ந்த ஆலீம்
தன்னிலை யுணருந் தன்மையுங் குணமு
முன்னிலை யியல்பு முழுதும் பதிந்து
பூமியி லெவர்க்கும் பொருளா மௌலவி
சாஹும் சாகிபு தம்மைத் தொடர்ந்து

மாட்சிமை தருநெறி வகைநலந் துலங்கத்
தீட்சை பெற்றுச் சிறந்தன பெற்றுத்
தனிநிலை யொருமையைத் தாங்கி யிருவினைத்
துனியினை யொருவி மும்மலந் தொலைத்து
நாற்குணந் தெரிவுற் றைம்புல னடக்கி
யேற்கு முட்பகை யாறையு மெறிந்து
பாதக மேழையும் பசையறப் பறிந்து
மேதகு தவத்துறுப் பெட்டையு மேவி
யிரத மொன்பதி னெடுப்பன வெடுத்து
விரதம் பத்தென விளங்கிய துறவே
பொருளாகக் கொண்டு பொருந்திய வருகையில்
இருளாப் பகலா விதுவே நோக்கமாய்ப்
பகலெலா நோன்பு மிரவெலாந் தொழுகையு
மகலா நன்முறை யாகவுஞ் சிலநா
ணீர்நசையூணசை நீங்கியு மாக்கைக்
கோர்நகை யுங்கொடா தோர்ப்புந் தாங்கி
வாய்வா ளாமையா வருநாட் கிடையினிற்
போயொதுக் கொருங்கு புகுந்தொழிந் திருப்பச்
சிந்தையிற் றுணிந்து சிக்கந்த ரடங்கிய
மந்திர மருங்கின் மண்டல மொன்று
மறந்தாங்கி யூர்ப்புறத் தடுக்கல கந்து,
திறந்தாங்கி யோரறு திங்களுந் தொண்டியின்
மாதுல ரடங்கிய வாழைத் தோப்பினு
மேதமொன் றணுகா தீரிரு திங்களு
மரைக்கா ணாழியி னமிழ்தா னோன்பா
யுரைக்காது கல்வத்தி யோகத் திருந்தன
ருள்ளிருந் தொருங்கு காணுங் காட்சியும்
வெள்ளிடை விரிந்து பரந்த காட்சியும்
தள்ளா தேகமாத் தன்னை யமிழ்த்தலின்
விள்ளா துணர்வினா மெய்ம்மை விநோதமே

காணுங் கருத்தரா மௌனகண் டிதரா
நாணும் பித்தர்போல் நன்னடை கொண்டு
கிளர்ந்தெழு சதுர கிரியினும் புறாக்கி
வளர்ந்த மலையினு நாக மலையினும்
யானை மலையினு மிருங்குகை செறிந்த
வேனை மலையினு மிருளடை வனத்தும்
பல்விலங் காடிய பனைமரப் பொதும்பு
நல்விலங் காடிய பொழிநதிக் கரையினு
மறிமட மசுதூ ப்ாகத் திரித்துஞ்
செறிமட யோகியர் சேகர நீத்துஞ்
சருகுங் கிழங்குந் தழையுங் குழையுங்
கருகுங் கனியுங் காயும் புசித்து
மாசன விகற்பத் தாகிய யோகமும்
போசன மறியாப் பொழுதொடு நேமமு
மேலாங் காலுங் கீழாந் தலையும்
பாலா முடலுமாப் பல்பட வணங்கியு
மொருபக லன்றிப் பல்பகல் விரதமும்
பலவிர வன்றி யோரிரா வொழிபு
முடையா னுடையதோர் சம்மதத் துணிவி
னடையா னன்றித் தன்னடை யின்றியு
மறையாக் கருத்துங் குறையா வறிவி
னிறையான் மாய்ந்த காய நிலையைக்
குணங்குடி மஸ்தா னெக்குறி யிட்டும்
பிணங்கா திணங்கா தொருபெயர் தரித்து
மிப்பெய ராற்பல புதுமை யியற்றியு
மப்பெய ரான்மனத் தெருணிலை யமைத்து
மளவிலாக் காரண மவரவர் காணக்
களவிலா மெய்ந்நிலைப் பயனது கனிந்து
மிவ்வண மேழாண் டாகவித் திசைதிரிந்
தவ்வண நிலையான் வடதிசைக் கடைந்து

கண்டா ரெவருங் களிகூர்ந் துள்ளத்
தொண்டாய்த் தொழுதிடத் தோற்றமா தவராய்ப்
பன்னா டவரும் பலன்பெறத் தரிசனந்
தன்னா லுயர்தவந் தாங்குறு வினராய்
மன்னுணர் வினுஞ்சில வதியுணர் வினுஞ்சில
தன்னுணர் வினுஞ்சில நடைபயில் சையராய்
நேர்மையி லுள்ள நேர்ந்தவ ரெவர்க்கு
மோர்மை புரிய முயர்தே சிகராய்ப்
பொன்னைமா நிதியைப் போற்றலிற் போற்றுஞ்
சென்னை மாநகரஞ் சிறப்பொடு புகுந்தார்
முன்னைய நினைவினும் புறவுணர் முளைத்துந்
தன்னைய முறைபோற் றடைபடா துலவியுஞ்
சிலபகல் வெளிப்படத் திரிந்து மறைபடச்
சிலபக லடங்கியு மௌனமாய்த் திரிந்துஞ்
சுட்டிக் காட்டியு மெண்ணிற் றொகுத்து
மெட்டிக் காட்டியு மெழுதிக் காட்டியு
மியல்பின் வேண்டுவ வெவையும் விளக்கியும்
பயிலுஞ் சிலநாள் பலன்பெற யாருமே
பாவா லெப்பை யெனும்பிர பலவான்
காவாந் தோட்டத்திற் கதிநலம் பெறுவான்
மக்க ளுவந்து மனப்பொருந் தங்கொண்
டெக்காலும் புகழ்பெற வினிதி னல்கிய
தலத்தினைத் தைக்கா வாகத் தகைத்து
நலத்தொடு கல்வத்து நாடிப் புகுந்தா
ரயண மொருமூன்று மதனுட் டனித்துப்
பயனுறு மியோகப் பண்பி னிருந்தா
ரரவ முதலா வூர்வன வடைபட்
டுரைக ளுணரா துணர்வினி னின்ற
நிலையே புதுமை நிரம்ப விளக்கக்
கலையே கலையாகக் கண்ணொடு வெளிவந்

தூங்கு முரீதி னுயர்வழி யவரது
தாங்குங் காதி ரிய்யாத் தன்னை
யாக்கிய முகியித்தீ னாண்டவர் பேர்க்கொரு
தேக்கரும் பாத்திகாச் சிறப்பிற் செய்தார்
நாடின பேர்க்கரு ணயன நோட்டங்
கூடின பேர்க்குள கருணை நல்கியு
நினைத்த காரியம் நிறைவேறப் படுத்தியுந்
தனைத்தொடர் பவர்க்கா வனமுறை தொகுத்துஞ்
சிலபக லியாருந் தெரியா விருந்துஞ்
சிலபக லறிந்துந் தெரியா திருந்தும்
பின்னர் தம்மிடம் பிடித்தநோன் புடனே
நன்னர் பயப்ப நடந்தடைந் தனராற்
கண்டகன் டிதமாய் நாளினைக் கணித்துங்
கொண்டகன் டிதமெய் யோகங் கொண்டுந்
துண்டிடு கண்டுந் தூய்பாற் சிறிதுங்
கொண்ட பொழுதுங் கொள்ளாது மிகுதியு
மொருவர்க்குங் காணா வொதுக்கமும் பதுக்கமு
மிருவர்க்கே காணு மேகமு மாகத்
தூங்காது தூங்கிச் சுகத்தொடு தன்னிலை
நீங்கா திருந்த நிலைமையென் சொல்வேன்
பதையா திம்முறை பன்னிரண் டாண்டுஞ்
சிதையா திருந்த செய்கையென் சொல்வே
னரிதரி தம்ம வகமொரு நிலைபட
வரிதரி தம்ம வருமையென் சொல்வேன்
பேரின்ப வெள்ளப் பெருக்கி லழுந்தியு
மாரின்ப மீறிய தன்றென் றாதியிற்
றொடருயிர் காந்தத் தொடரய மென்னப்
படர்தரு மாசைப் பற்றங் கிழுப்பத்
தழல்படு கரிய தழலா யினும்பெயர்
கழல்பட லிலையாற் சுழன்றா லன்றி

யொன்றா காவென் றுரைக்கு முறைபோல
வென்றாள் கடத்தை விடுத்து நீங்கி
யிருவகை யிறப்பு மிறந்துப்பு மப்பு
மொருவகை சுடரு மொளியும் போலக்
காரண மெவையுங் கலவா தகன்ற
பூரணத் தொடுபரி பூரண மடைந்தா
ரேற்படு குறைமுடி வெய்த மாவயது
நாற்பது மேழு நிறைய நடந்ததே
யித்தகை தவத்தி னேறிய தாபதர்
பத்தியிற் பயின்று பல்பல முயற்சி
கொண்டு வருநாட் டன்னிற் குமிழி
மண்டுமா நந்த வெள்ள மல்கிப்
பொங்கி வழிந்து புறம்பொழி வதுபோ
லிங்கித நாவி னெழுந்தசில் கவிக
ணயம்பெறு மவற்றை நால்வரு முணர்ந்து
பயன்பெற வச்சிற் பதிப்பிக்க நாடி
கண்ணோட்ட மிட்டரு டருகெனக் கனிந்து
வெண்ணோட்ட நன்மையே யியைந்த கருத்தின
ரவர்களுக் குரிய வன்புறு பத்தரி
லெவர்களு மதிப்ப விளங்கு நேர்மைய
ரிருபோது மவர்பெய ரேத்தி யேத்தி
யொருபோது மறவா வுறுதிச் சிந்தையர்
மருவளர் பூவன மல்க மல்கிய
திருவளர் செழுந்தடச் சீய மங்கலப்
பதிவளர் செல்வப் பதியரு ணாசல
முதலியா ரினிய முயன்று கேட்ப
வுலக முற்றுந் துறந்த வுள்ளமு
முலக மணுவுந் துறவா வுள்ளமு
மொருவகை யானு மொன்றா ததுபோ
லிருவகைப் பட்ட விதய னாயினும்

வரத்தின ரருணலம் வருவழி யென்றே
திரத்தினி னோர்ந்து ளுவந்து துணிந்தனன்
சொல்லு மதுவே பொருளு மதுவே
புல்லுந் தொகையும் புணர்ப்பு மதுவே
யன்றி யொன்று மமைத்தே னல்ல
னன்றி யொன்று நடைகொ ளடியி
னின்ற திடரிணைப் பெயர்த்தலும் நிரைபடச்
சென்ற வெழுத்தினைச் சேர்த்தலும் வழுவா
வழிபோன் மாறி நிறுத்தலும் வழக்க
மொழிபோற் பதித்தலு முற்றப் படுத்தலுங்
குறிப்பிற் றுறையுங் கோத்த வதிகாரமும்
பெறப்படச் செய்தலும் பின்முன் கவிகளை
மாலை புணர்க்க மாட்டலுங் குறைந்த
காலை நிலைக்கக் கட்டலும் வெறாத
பாலும் பழமுந் தேனும் பருகுதல்
போலுஞ் சேரப் பொருத்தலுந் திருத்தலும்
பாப்போர் பார்க்கப் பயன்படு முறையுஞ்
சேர்ப்போ ருள்ளஞ் சிறக்கு முறையுங்
கொண்டொழு கினனாற் களிகூர்ந் துயர்ந்தோர்
கண்டொழு குவதே கடனா மன்னே
குணங்குடி யார்சொற் குணங்குடித் திடுமுன்
மணங்குடி திருமனை வாழிவாழ்ந் திடுக
வறந்தாங்கி யார்சொ லறந்தாங் கிடுமின்
சிறந்தாங் குயர்பதம் வாழிசேர்ந் திடுக
வொருமைப் படுத்த லுண்டா முண்டா
மிருமைப் படுத்த லின்றா மின்றாம்
பொய்மைத் தொடர்வினை போகும் போகு
மெய்மைத் தொடர்வினை மேவும் மேவும்
புறத்து வையாளி போடும் போடு
மறத்திரை யுள்ளு மாடும் மாடும்

விண்ணு மண்ணும் விரியும் விரியுஞ்
சென்ணந் திண்ணந் திரியுந் திரியுந்
துவித மலவத் துவித மென்றே
யெவிதத் தானு மிதயஞ் தெளியுமே
தொட்டுந் தொடாதுஞ் சொற்றவை யுணர்ந்தாற்
கிட்டு மொருமை கிருபையி னறிக
வென்னிய லுணர்வா னிதய முளதே
லந்நிலை யுரைப்ப னருளீர் கேண்மி
னரும்பதி காய லறிவா ளரினுயர்
பெரும்பதி மானாப் பிள்ளையி லப்பை
யாலீ முதலிய வருண்மணி பலகலை
நூலி னணிமுறை நோற்றனுப வித்த
வேதாந் தக்கடன் மெய்ஞ்ஞா னப்பொரு
ளாதாந் தச்சுடர் நலம்மிகப் பொதிந்த
சித்த ராகு மன்றியுஞ் சீவன்
முத்தர் கபீபு முகம்மதி லப்பை
செய்தவத் துதித்த செல்வன் குணங்குடி
மெய்தவத் தினர்க்கு வித்தையிற் றோழன்
பயன்பெறு புராணமும் பலபிர பந்தமு
நயன்பெறப் புனையு நாவல னெவர்க்கு
முண்மைப் பொருள்வழி யோம்புந் தேசிகன்
வண்மைக் கரத்துடை வள்ள விறசூல்
செப்பிய வழிபுனை செய்கு
அப்துல் காதிரி லெப்பையா லிமே.

நேரிசை வெண்பா

பெரியோர் கருத்தைப் பெயர்த்தறிய லாக
உரியோர் எவைக்கும் உரியோர்–பெரியோர்க்குச்
சொல்லும் பொருளுந் தொடராது இரண்டாகும்
புல்லும் பொழுதிற் பொருள்.

## 4. குணங்குடியாரின் சித்த நெறி

ஒப்பில் ஏழுகோடி யுகமிருந்தேன் என்றும் ஊனமில் ஒன்பது கோடி யுகத்தினுள் ஞானப் பாலூட்டி நாதனை அர்ச்சித்து நானும் இருந்தேன் என்று கூறும் சித்த ஞானிகளுக்கு அழிவில்லை.

கற்பம் உண்ணாமல் காயசித்தி பெறாமல் ஞானப் படிகளில் ஏறிச் செல்லவே முடியாது. கற்பத்தையும், காயசித்தியினையும் உணர்ந்து கொள்வதற்குத் திருவருளாகிய குருவருள் தேவை.

உயிர் மெய்ஞ்ஞானம் அடைவதற்கு உடல் வேண்டும். உடலைக் காக்க வேண்டுமானால் அதன் இயல்பு தத்துவம் அறிய வேண்டும். சித்தர்கள் உடலை ஓம்புவதும் காப்பதும் முக்கியம் என்று கருதினர். உடல் அழியாமல் காக்கும் நெறியினை தமிழ்ச் சித்தர்கள் கண்டுணர்ந்து உலகுக்கு அறிவுறுத்தினர்.

பஞ்ச பூதத்தின் தன்மை ஆறாதாரம் பற்றிய விளக்கம், தச வாயுக்கள் மூன்றின் குணங்கள், துரிய நிலை, வாசியோகம், குருபதம போன்றவைகளை சித்தர்கள் தம் பாடலில் சிறப்பாகக் கொண்டு விளக்கியுள்ளனர்.

தன்னையறிந்து அர்ச்சிக்க உடல் தத்துவம் உணர்ந்து அதனை நிலை நிறுத்தக் கூடிய தெளிவும் வன்மையும் பெற்றிருக்க வேண்டும் எனும் சித்த நெறியினை குணங்குடியாரும் போற்றிப் பாதுகாத்து வந்துள்ளார்.

சித்தநெறியில் காயசித்திக்கே முதலிடம் கொடுத்தனர். 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்'. பிறகு அதோடு எல்லாம் முடிந்து போகும். உயிரைக் காப்பாற்றிக்

கொண்டுதான் ஆன்ம விடுதலை என்ற குறிக்கோளை நோக்கி முன்னேற வேண்டும்.

ஞானத்தைப் பற்றிப் பாடும்போது சித்தர்கள் மெய் மறந்து அருவிபோல் கொட்டத் தொடங்கிவிடுவார்கள். குணங்குடியார் பாடல் களஞ்சியம் அதனையே நிரூபிக்கிறது.

மனிதர் கண்களுக்குப் புலப்படாமல் பல சமயங்களில் மறைந்து உலாவுதல், கட்டுக்காவல் மீறி மாயமாக வந்து நிற்றல், பல விருந்தினர்களுக்கான உணவை ஒரே ஆளே உண்டு அதிசயிக்கச் செய்தல், மரக்கிளையில் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு இருத்தல், பல நாட்கள் உண்ணா நிலையிலிருப்பது, குப்பை மேடுகளில் வசித்தல் இப்படிப் பல்வேறு சித்த அற்புதங்கள் குணங்குடி மஸ்தான் சாகிபை ஞானச்சித்தர் என்று அடையாளம் காட்டியது.

மனித சமுதாயத்திற்கு நாம் ஆற்றுகின்ற தொண்டானது இறைவனுக்குச் செய்கின்ற தொண்டாகவே அமைகிறது என்ற சித்த தத்துவத்தை உணர்ந்து கடைப்பிடித்தவர் குணங்குடியார். சித்தமார்க்கத்தில் குரு அல்லது ஆசான் முக்கியமான ஸ்தானமாகக் கருதப்படுகிறார். குருவை இறைவனாகப் பார்க்க வேண்டும்.

'மறை சொலும் பொருள் மனித வேடமாய் வந்தது' என்பர். வேதங்கள் சிறப்பித்துப் பாடுகின்ற இறைவனே குருவின் வடிவாய் வந்து தோன்றியிருக்கிறான் என்பார்கள். கிரியை, சரியை, யோகம், ஞானம் எனும் நான்கு வழிபாட்டு முறைகள் சித்தர்களின் சித்தாந்தமாக மேலோங்கி நிற்கின்றது. ஞானச் சித்தர் குணங்குடியார் இந்நிலை யாவும் அறிந்துள்ளார் என்பதை அவரது பாடல்கள் தெரிவிக்கின்றது.

சட்டைமுனிச் சித்தர் பற்றியும் நவநாத சித்தர்கள் பற்றியும் அட்டமா சித்தி பற்றியும் இவரது பாடல்

குறிப்புகள் தெரிவிக்கின்றது. சித்தர்களுக்குரிய சமாதியோகம் எனும் கல்வத்தில் மஸ்தான் சாகிபு தலைசிறந்து விளங்கியுள்ளார்.

இராயபுரத்தில் மூன்று ஆண்டுகள் இந்த ஞானச்சித்தர் கல்வத்து எனும் சமாதி நிலையில் இருந்தார். இறுதி ஏழாண்டுகள் 'அமறுன் இஃலாஸ்' என்னும் நிர்விகற்ப சமாதியில் அமர்ந்தார். பூரணத்துடன் பரிபூரணமாகக் கலந்தார்.

ஒருசமயம் கீழக்கரையில் திறந்த வெளியில் தைக்கா சாகிபு பாடஞ் சொல்லி வந்தபோது மழை பெய்ய, எல்லோரும் நனைந்து ஓடினர். ஆனால் மஸ்தான் சாகிபு மட்டும் மழையில் நனையாது நின்றார்.

குணங்குடியாரின் சிந்தனையனைத்தும் சித்த நெறியோடு இரண்டறக் கலந்திருந்தது. அண்ட பகிரண்டங்களெல்லாம் மாயையிலிருந்து தோன்றும் காரியங்களே. ஆராய்ந்து பார்ப்பின் தெய்வ அருளின்றி வேறில்லை என்பது விளங்கும். தான் எனும் செருக்கு அகன்ற ஞானச் சித்தர் குணங்குடியார் எல்லாவற்றையும் இறைவனாகவே பார்த்தார் என்பது முக்காலும் உண்மை.

## 5. ஞானச் சித்தர் குணங்குடியாரின் இறைப் பாடற்களஞ்சியம்

**ஞா**னச் சித்தர் குணங்குடியாரின் பாடல்கள் அனைத்தும் இறையனுபவத்தை வேதாந்த சித்தாந்த சமரச நெறியில் உணர்த்தும் கலைக் களஞ்சியமாகத் திகழ்கிறது.

உயிர்கள் யாவும் கர்ம பலனை எப்படி அடைகின்றன என்பதை இவரது பாடல்கள் ஆராய்கின்றன. இவர்

ஐம்பூதங்களையும் கடவுளாகக் காணுகின்றார். மெய்மறந்து இறைவனை இரட்சகனாக விளித்து ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார்.

சூபிஞானக் களஞ்சியமாக மஸ்தான் சாகிபு பாடல் திரட்டு விளங்குகிறது. குணங்குடியாரின் ஒட்டு மொத்த பாடல் திரட்டும் பதினெட்டு தலைப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இவரது பாடல்களில் முதற்பகுதியில் இஸ்லாமிய ஞானவழியை விளக்குவதற்கு இன்றியமையாத அரபிமொழி சொல்லாட்சி காணப்படுகிறது. கீழக்கரை தைக்கா சாகிபுவிடம் குணங்குடியார் ஆரம்பத்தில் பயின்ற கல்வி அவருக்கு அரபிமொழித் தேர்ச்சியைக் கற்றுக் கொடுத்துள்ளது. தைக்கா சாகிபுவிடம் கல்வி கற்றவர்களில் பலர் அரபியிலும் தமிழிலும் புகழ்பெற்ற புலவர்களாக விளங்கியுள்ளனர். மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அரபு மொழிப் புலமைப் பெற்று விளங்கினார். செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் தமிழ்ப் பெரும் புலவராகத் திகழ்ந்தார். அது போலவே தைக்கா சாகிபுவிடம் பயின்ற குணங்குடி மஸ்தான் சாகிபு அரபியிலும் தமிழிலும் அரிய பாடல்கள் இயற்றும் புலமை பெற்று சிறந்த ஞானியாக விளங்கினார்.

குணங்குடியாரின் பாடல்களில் அரபிமொழி சொல்லாட்சியும் சூபித்துவ வழியில் தமிழ் நாட்டுச் சூழலுக் கேற்ப விளக்கும் சித்தர் மொழி நடை, ஆன்ம அனுபவத்தை உணர்வுப் பூர்வமாக வெளியிடும் வழக்குச் சொற்களும் மிகுந்து பதினெட்டுப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அற்புதமான களஞ்சியமாகத் திகழ்கிறது.

## குணங்குடியாரின் பாடற்களஞ்சியம்

1. ஆனந்தப் பத்து
2. முகியித்தீன் சதகம்
3. முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்
4. அகத்தீசன் சதகம்
5. மகமூது நபியாண்டவர் துதி
6. தவமே பெற வேண்டுமெனல்
7. குறையிரங்கி யுரைத்தல்
8. தவராஜ மகிமை சாற்றல்
9. வானருள் பெற்றோர்
10. ஆனந்தக் களிப்பு
11. நிராமயக் கண்ணி
12. பராபரக் கண்ணி
13. றகுமான் கண்ணி
14. எக்காலக் கண்ணி
15. கண்மணி மாலைக் கண்ணி
16. மனோன்மணிக் கண்ணி
17. நந்தீஸ்வரக்கண்ணி
18. கீர்த்தனைகள்

### ஆனந்தப் பத்து

முகப்பில் குருவ ணக்கம் அமைந்துள்ளது. ஆனந்தமாகிய பேரின்ப அனுபோக நிலையில் குருபரனை ஒரு பரனாகக் கொண்டாடித் துதித்துப் பாடியது. இதில் ஞானகுருவின் தவப்பெருமையும், அருள் புரியும் எளிமையும், சீடரின் சிறுமையும் அருள்பெற விழையும் தவிப்பும் புலப்படுத்தப் படும் பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன.

வஸ்துதயத்தினா நந்தம், வஸ்துயநிலத்திலா னா நந்தம், விளையாட்டினா நந்தம், தன்னியலினா நந்தம், மகிமையினா நந்தம், வலிமையினா நந்தம், இரக்கத்தினா நந்தம், பெருமை யினா னந்தம், தன்னிலையினா நந்தம், கா ரணத்தினா நந்தம் எனும் பத்து தலைப்புகளில் இந்த ஆனந்தப்பத்து அமைந்துள்ளது.

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மானிர் ரஹீம்*

## ஆநந்தப் பத்து

*பிசுமில்லாகி அலாநியத்து சுல்த்தான் அப்துல்காதிர் முகியித்தீன்*

## குருவணக்கம்

*எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

இணங்குமெய்ஞ் ஞானப் பேரின்பக் கடலின்
இன்னமு தெடுத்தெமக் களிப்போன்
பிணங்கிய கோச பாசமா மாயைப்
பின்னலைப் பேர்த்தெறிந் திடுவோன்
வணங்கிய தவத்தினோர்க்கருள் புரிய
வள்ளலாய் வந்தமா தவத்தோன்
குணங்குடி வாழு முகியித்தீ னாமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்.

## வஸ்துதயத்தினாநந்தம்

*ஆசிரிய விருத்தம்*

மகுலியத் தானதாத் துல்கிபுரி யாவில்
மறைந்தகன் சுல்ம குபியாம்
மஸ்கூத்து அன்குல்க தீமுல் அமாவான
மவுஜூ தெனுஞ்சி ருபுலே

அகதியத் துகதாதி வாகிதிய் யத்தான
ஆலம்அறு வாகா னதில்
ஆலம்மி சாலாகி ஆலம்அசி சாமான
ஆலம்இன் சானா ணபின்
பகுதியத் தில்லா ஜலாலொடு ஜமாலும்
பதீகுல்க மாலு மாகி
பகுதுகபுல் அற்றலா கூத்துஜப றூத்தில்
பகாவான குவியத் தினால்
நகுசியத் தற்றுமுன் தாள்நிழல் பெற்றடிமை
நானினைவு மற்றுய் வனோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 1

## வஸ்துதய நிலத்தினாநந்தம்

பறுதானி யத்திலோ சுபுகானி யத்தெனப்
பகர்பரா பரம தனிலோ
பற்பல விதங்கொண்ட அஇயானி யத்திலோ
பரிபூர ணந்தன் னிலோ
அரிதான தாத்திலோ அலிபெனுஞ் சுகவாரி
யாகும்நுக் தாவ தனிலோ
அகுலல் உலாவான ஆலமலக் கூத்திலோ
ஆலம்அசு பல்தன் னிலோ
குறிகுணா தீதஅட் டாங்கயோ கத்திலோ
கோடானு கோடி மறையால்
கூறரிய சிவராச யோகத்தி லோவருட்
குறையாப் பெருங் கடலிலோ
நரலைநிக ரருளாள னேநீ யிருப்பதிந்
நாயினேற் கருள்செய் குவாய்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 2

## விளையாட்டினாநந்தம்

அண்டகோடி களுமோர் பந்தெனக் கைக்குள்
அடக்கிவிளை யாட வல்லீர்
அகிலமோ ரேழினையும் ஆடுங் கறங்குபோல்
ஆட்டிவிளை யாட வல்லீர்
மண்டலத் தண்டரை யழைத்தரு கிருத்தியே
வைத்துவிளை யாட வல்லீர்
மண்ணகமும் விண்ணகமும் அணுவைத் தொளைத்ததின்
மாட்டிவிளை யாட வல்லீர்
கண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்
கலக்கிவிளை யாட வல்லீர்
கருத்தரிய சித்தெலாம் வல்லநீ ரடிமையென்
கண்முன்வரு சித்தில் லையோ
நண்டளந் திடுநாழி யாவனோ தேவரீர்
நல்லடிக் காளா கியும்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 3

## தன்னியலினாநந்தம்

ஐயோ எனைப்போலு மாப்பெரும் பாவியிவ்
அகிலத்தி லெங்கு மிலையே
அநியாய மநியாய மென்பெரும் பாதகமது
ஆர்பா லெடுத்தோ துவேன்
மையான கண்ணியர் வலைக்குள் ளகப்பட்ட
மாபாவி தீபா வியான்
மகுரூபு சுபுகானி யானவுமை நாடாத
மடமைகுடி கொண்ட பாவி
பொய்யான வாழ்வுதனை மெய்யாக நம்பியும்
பொன்னடி மறந்த பாவி

பொல்லார்கள் நேசமே யல்லாது நல்லோர்
புறக்கணித் திட்ட பாவி
நையுமோர் பொய்யுலக னாகியே யுமதடிமை
நாயினுங் கடையா வனோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 4

## மகிமையினாநந்தம்

மாதவர்க் கரசான மன்னர்க்கு மன்னாக
வந்தமக ராஜ னியே
மண்டிசையும் விண்டிசையும் எண்டிசையு நின்றசையும்
வாசனாம் போஜ னியே
ஆதிநீ மகுசூக்கு றகுமானு நீயெனக்கு
ஆளமகு பூபு நீயே
அக்கா னியத்திலே சொக்கும்இறு சாதுதந்து
அருள்செய்ய வந்த நீயே
வேதநீ வேதவே தாந்தநீ யெனையாளும்
வித்தகன் தானு நீயே
மெய்ஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ
விரிகதிர்ச் சுடரு நீயே
நாதனீ நவநாத சித்தனீ முத்தனீ
நாதாந்த மூர்த்தி நீயே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 5

## வலிமையினாநந்தம்

மன்னிய தவத்தினர்க்கு அருள்தந்த குருவுநீ
மாதா பிதாவு நீயே
மட்டறு பவக்கடல் தொலைக்குமொரு கவிழா
மரக்கலமு நீயல் லவோ

அந்நியம தானபிர பஞ்சமாம் பெருநெருப்பு
அடக்கும் பெரும்பா லமாய்
அன்புட னெனைப்பெற்ற ஒப்பனே அருள்தந்த
ஆண்டவனு நீயல் லவோ
என்னையுனை யன்றியினி யாள்வரெவ ரையனே
யெந்தையே யெம்பி ரானே
இகபர மிரண்டினுஞ் சுகதுக்க மற்றியான்
ஈடேற வருள்பு ரியவே
நன்னிலைய மகாவென் முன்னிலையில் வந்துமெந்
நாளும்ரட் சித்தருள் வையே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 6

## இரக்கத்தினாநந்தம்

கல்லு மொருபோதிற் கரைந்துருகு மென்மனக்
கல்கரைவ திலையை யனே
கவலைகளை யிவளவென் றென்னாணை யென்னாற்
கணித்துமுடி கூடு திலையே
அல்லுபக லாகவென் னவகீர்த்தி யவகீர்த்தி
யம்மம்ம என்சொல் லுகேன்
ஆனாலும் ஆர்க்காக அடிமைகொண்டாயிந்த
அடியனே னுய்யும் வண்ணஞ்
சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுண்டியான்
சும்மா விருக்க வருள்வாய்
சுத்தபரி பூரணச் சுகவாரி தன்னிலோர்
சொட்டா கினுந்தொட் டபேர்
நல்லவர்கள் நல்லவர்கள் நல்லவர்க ளென்றைக்கு
நானுநல் லவனா வனோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 7

## பெருமையினாநந்தம்

சொல்லான் முழக்கமிட் டோலமிடு வேதமுஞ்
சொன்னதுட னின்ன மின்னஞ்
சுருதிமுத லாகம புராணகலை யோதிய
சுலோகங்க ளென்சொல் லுகேன்
பல்லா யிரங்கோடி யண்டபகி ரண்டமுன்
பாதபங் கயமல் லவோ
பரிபூர ணானந்த மேயுனது முடியெனப்
பகர்வதும் பொய்யா குமோ
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தல்லாது
மற்றவர் தமக்கு முளதோ
வானவர் தினந்தினம் வந்துன் பதம்பணியும்
மகிமைசொல வாயு முண்டோ
நல்லோர் தமக்கலா தெல்லார் தமக்குமுனை
நவிலுதற் கெளிதா குமோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 8

## தன்னிலையினாந்தம்

நித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை
நிலையமென் றிடுவ தல்லால்
நிலையாத காயமென் றெண்ணவோர் கனவினும்
நிசமாக யான றிகிலேன்
எத்தனை விதங்கள்தான் கற்கினுங் கேட்கினும்
என்மன திணங்கு திலையே
ஏதென் றெடுத்துரைப் பேனெமக் கிறைவனே
யெங்கோ னெனும் பிரானே
மற்றவர்க ளெத்தனை யிருக்கினும் என்கொடிய
வல்வினை யகற்ற வசமோ

மலையிலக் கெனநம்பி னேனம்பி னேனென்று
வந்தெனுட் குடிகொள் வையே
நற்றவமு முத்தியுஞ் சித்தம்வைத் தருள்செய
நாட்செல்லு மோவ றிகிலேன்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 9

## காணத்தனாநந்தம்

கடலிற் கவிழ்ந்ததோர் கப்பல்ஆ லாத்துடன்
கடுகிவர வேய ழைத்தீர்
கம்பமுட னோடியே வந்ததோர் கப்பலைக்
கடிபூனை யாக்கி வைத்தீர்
குடிகொண்டு கர்ப்பவறை யுள்ளிருக் கையிலுமைக்
கொலைசெய்ய வந்த முனியைக்
குதிகொண்டு வெளிசென்று இருதுண்டு கண்டுபின்
கூர்கர்ப்ப வறைபு குந்தீர்
பிடியிற் பிடித்துண்ட பிள்ளைசந் நியாசிகுடர்
பீறிவர வேய ழைத்தீர்
பிரியம்வைத் தெனையாள என்னிடத் திந்தவிரு
பேரையுந் தூது விட்டீர்
நடனமிடு பாதார விந்தமென் சென்னியுற
நாட்செல்லு மோசெல் லுமோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 10

## 6. முகியித்தீன் சதகம்

பக்தியைப் பாடு பொருளாகக் கொண்டது சதகம். சதகம் என்பது 100 பாடல்கள் கொண்ட பிரபந்த வகையாகும்.

முகியித்தீன் சதகம் பக்தி இலக்கிய மரபினைச் சார்ந்தது.

முதல் பத்தின் தொடக்கத்தில் இறைவனின் தூதராகிய நபிகள் நாயகத்தைப் பின் தொடர்ந்து வந்து தனக்கு அருளும் பொருட்டு முன்னிலைக் குருவாகிய முகியித்தீன் ஆண்டகையை வர வேண்டுமெனக் குறையிரந்து பாடியதாகும். அடுத்து இருபத்துகளிலும் பரம்பொருள் பண்புகள் குறித்து பாராட்டப் படுகின்றன.

நான்காம் பத்தில் காட்சிப் பொருளாகிய மெய்ப்பொருளும் காண்போனாகிய சாதகனும் வேறு வேறாகாமல் தந்தருள்க என்று வேண்டுகிறார். ஐந்தாம் பத்து பரம்பொருளுடன் ஒன்றாகும் சமாதியோகத்தைப் பொருந்துவதற்கு அருள்புரியும்படி இரந்து கேட்கிறார்.

ஆறாம் பத்தில் காந்தமும் இரும்பும் இணைவது போலக் கலந்து மாயையில் மாய்ந்த மனத்தை மாயாதபடி காத்தருள்க என்கிறார் குணங்குடியார்.

ஏழாம் பத்தில் மெய்ப்பொருளுக்கு வேறான 'நான்' எனும் மயக்கத்திலிருந்து நீக்கி ஆட்கொள்ள வேண்டுகிறார்.

எட்டாம் பத்தில் மாயை வினை என்னும் இடையூறு இரண்டினாலும் அஞ்சும் பாவியுள்ளத்திற்கு அருள்புரியும்படி வேண்டுகிறார்.

ஒன்பதாம் பத்தில் வேறு வேறாகத் தோன்றும் படைப்புகள் ஒன்றுதற்கு அருள்புரிய வேண்டுகிறார்.

பத்தாம்பத்தில் அளவிடற்கரிய காட்சிகளைக் கொண்டு உன் மகிமையை ஓதும் பலகோடி சீடர்களில் அடியேனையும் ஒருவனாகக் கொண்டு அருள்க என இரந்து பாடுகிறார்.

முகியித்தீன் சதகத்தின் குருவணக்கம் மட்டும் இங்கே தரப்பட்டுள்ளது.

# முகியித்தீன் சதகம்

*ஏகவறிவாகிய வள்ளல் இறைசூலைத் தொடர்ந்து அவரருட்பெறுவான் பொருட்டாக முன்னிலைக் குருவாகிய முகியித்தீன் ஆண்டகையைத் தோத்திரஞ் செய்து குறையிரந்து வந்து பாடிய சதகம்.*

## குருவணக்கம்

*எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

உணர்ந்துதற் பரமா யுரைக்குஅகோ சரமா
யுயிர்க்குயி ரானசா கரமாய்
இணங்குசிற் பரமா யணுக்கள்தா வரமாய்
ஏகமா கியபர பரமாய்
வணங்குஇக பரமாய்க் கிளைத்தநூ றுமுகம்
மதுகிளை விளக்கொளி கொழிக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னாமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 1

வணங்குவார்க் கிணங்கு பெரிய பேரின்ப
வாரியிற் படிந்துவாய் மடுத்தே
உணர்ந்துணும் பொருட்டாய் வலியவந் தெனையாண்டு
உவந்துளங் களித்தக மகிழ்ந்தே
அணைந்தணைந் தெடுக்கும் கருணைகொப் புளிக்கும்
அலகிலா அருளடை கிடக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னாமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 2

அணைந்துயிர்க் குயிரா யலர்மட லவிழ்ந்த
அகண்டிதா காரமா மலரின்
மணங்கமழ் நயினார் முகம்மத ரென்னு
மௌனதே சிகருட னெனையுந்

துணிந்துமா மாயைத் துணியெலாங் கிழித்துத்
துறவறந் தாங்கியா ராக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னாமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 3

## 7. முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்

முகியித்தீன் சதகம் போன்று இதுவும் ஞானகுருவான முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானியைக் குருபரனாக முன்னிறுத்தி வழிகாட்டியருளும்படி வேண்டுவதாயுள்ளது.

ஆன்மப் பயணம் செல்ல உளத்தூய்மை வேண்டும்.

'உளத்தைக் கழுவித் தூய்மை செய்து நன்னெறியில் வைத்த போதும் புழுக்கை குணம் போகவில்லை' என்றும், 'குணங்குடி கொள்ளா வீணரை விட்டொழிய வேண்டும்' என்றும் ஞானகுருவை விரும்பிப் பாடுகிறார்.

இது கொச்சகக் கலிப்பாக்கள் நான்கு கொண்டதாகும்.

### முகியித்தீனாண்டவர் கொச்சகம்

அழுக்கைத் துடைத்தணைத் தணைத்துமடி மீதுவைத்தும்
புழுக்கைக் குணமெனக்குப் போவதிலை யாகையினால்
தழைக்குங் குணங்குடிக்கென் தந்தையே வந்திடுவேன்
பழிக்காமல் ஏழைமுகம் பாருமுகி யித்தீனே. 1

பட்டதுவுங் கெட்டதுவும் பாய்முடைந்து விற்றதுவும்
வெட்ட வெளியாய் விடிந்துமின்னம் பாருமையா
கொட்டமெல் லாம்விட்டுக் குணங்குடிகொள் ளாவீணர்
இட்டமென்னை விட்டொழிவ தில்லைமுகி யித்தீனே. 2

நாட்டுறவஞ் சாதிருந்து நம்பிகொலை செய்துமென்னை
ஓட்டாண்டி யாக்கியும்விட் டொழிவதில்லை பாருமையா

கூட்டாவென் கூடக் குணங்குடிக்கு வாரவரை
ஒட்டாமல் வீணரைவிட் டோட்டுமுகி யித்தீனே. 3

மேலாங் குணங்குடியின் மெய்ஞ்ஞான வீடுசென்று
நாலாம் படியேறி நானொளித்தி ருப்பன்ஐயா
வாலாய மாகஅங்கே மவுன மலரணைமேல்
மாலா யென்னயணைய வாரும்முகி யித்தீனே. 4

## 8. அகத்தீசன் சதகம்

சதகம் எனும் பிரபந்த வகையைச் சேர்ந்தது இப்பகுதி. பத்து பிரிவுகளில் நூறு பாடல்களைக் கொண்டுள்ளது.

அகத்தீசன் என்பது அகத்தில் இருக்கும் ஈசன் என விரிந்து பொதுவான் பொருளைத் தரும்.

அகத்தின் ஈசனாகிய குருபரனை நோக்கி மனம் அடங்கவும் பரம்பொருளின் நினைவு நிரம்பவும் அருள் வேண்டுவதாக இச்சதகம் அமைந்துள்ளது.

குருவருள் நிலை, தவநிலை, துறவுநிலை, நியமநிலை, வளிநிலை, தொகைநிலை, பொறை நிலை, காட்சி நிலை, தியான நிலை, சமாதி நிலை எனப் பத்து தலைப்புகளில் ஒவ்வொரு பத்துப் பாடல்களும் விளக்கப்பட்டுள்ளது.

தமிழ்ச்சித்தர் நிலைக்கேற்பவும் சூபிமரபிற்கேற்பவும் இப்பகுதிப் பாடல்களை அமைத்துப் பாடியுள்ளார் குணங்குடியார்.

இப்பகுதியில் யோக நெறியானது விளக்கப் பட்டுள்ளது. யோகம் எட்டு வகைப்படும். இயமம், நியமம், ஆசனம், வளி நிலை, தொகைநிலை, பொறை நிலை, சமாதி என்பனவற்றில் ஆசனம் பற்றி குணங்குடியார் கூறவில்லை.

இயமம் நியமம் ஆகிய இரண்டையும் நியமம் என்பதில் அடக்கியுள்ளார்.

- 'காகமாய் கதறிக் கதறியழும் தன்னையணைத்து அருள்புரியவும்', 'திக்கற்ற பாவியாகிய தன்னைப் பக்கத்தில் வைத்துப் பாதுகாக்கவும்', 'மவுனத் தொட்டிலில் படுக்க வைக்கவும்' குருவருள் நிலையில் பாடியுள்ளார்.

மனஅமைதி தந்து தவநிலைக்கு இன்றியமையாதவற்றை அளித்தும் கேடுபயக்கும் தீமை அகற்றிடவும், பாவத்தில் வீழாமல் பாதுகாக்கும்படியும் தவநிலைப் பாடல்களில் பாடியுள்ளார்.

காமக்குரோத மோகங்களைக் களைந்து களைதீரவும் நெஞ்சங்களிலெல்லாம் நீங்கவும், பெண் பேய் கொள்ளாமலிருக்கவும் துறவின் நிலையில் வேண்டுகிறார்.

பொய், கொலை, களவு, காமம், பொருளாசை ஆகிய ஐதும் நீக்குவன அடங்கிய இயமமும், மகிழ்தல், பெருந்தவம், தூய்மை, கற்றறிந்துணர்தல், வழிபடல் ஆகிய ஐந்தும் அடங்கிய நியமமும் நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலியன அடங்கிய ஆசனமும் ஆகிய மூன்றனும் சிறப்புற அமைதலுக்கு நியமநிலை பாடல் பகுதியில் வேண்டுகிறார்.

உள்ளும் புறமும் ஓடிக்கொண்டிருக்கும் வாசி எனப்படும் வாயுவைக் கட்டுப்படுத்துவது பிராணயாமத்தின் ஒரு பகுதியாகும். இரேசகம், பூரகம், கும்பகம் பற்றி நம் மூலக்கனல் பற்றியும் குண்டலி எழுந்து சோமவட்டம் தாக்கி மதியமிர்தம் பொழிவது பற்றியும் சித்தர் மொழியால் விளக்குகிறார். உடலை வயப்படுத்துவது குறித்தும் பிராணாயாமம் எனும் வளி நிலையில் பாடியுள்ளார் குணங்குடியார்.

அடங்காது பொருள்கள் மேல் செல்லும் பொறிகளைப் புலத்தில் வழுவாமல் ஒருவழிப்படுத்தும் தொகை நிலையினை அருள்க என்று தொகை நிலையில் வேண்டுகிறார் ஞானச் சித்தர்.

அட்டாங்க யோகத்தில் ஒன்றான மனதினை ஒரு வழி நிறுத்துவது பற்றி பொறை நிலையில் குணங்குடியார் விளக்கம் தருகிறார்.

ஒருமனப்பட்ட உயர் நிலையில் திவலையாகத் தோன்றும் பரவொளிக் காட்சியைத் தந்தருளும்படி காட்சிநிலை எனும் பதத்தில் பாடுகிறார் மஸ்தான் சாகிபு.

குண்டலினியை நினைத்து தியான நிலை கூறும் பத்தாக அடுத்த பகுதியான சித்தர் பரிபாஷையில் குறிப்பிட்டுள்ளார்.

அட்டாங்க யோகத்தின் இறுதிநிலையான சமாதி நிலையில் முழுவதற்பொருளை அறிந்து ஒன்றுவதாகிய சமாதியை அருளும்படி பாடுகின்றார்.

இங்கே அகத்தீசன் சதகத்தின் குரு வணக்கப் பாடல் மட்டும் தரப்பட்டுள்ளது.

## அகத்தீசன் சதகம்

"

அவற்றுள் முறைவழி அருந்தவம் யோகம்
எவற்றினு முந்தியது இயல்புடை ஆசான்
நன்னயக் கருணை நனிகூர் அன்பால்
இன்னய மந்திரம் இயைதல்ஆ தலினால்
திருவருள் பெறுவான் சிந்தித்தும் எம்மைக்
குருவருள் வேண்டிக் குரையிரந்து உயர்த்தது.

குருவணக்கம்

*எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

குணங்குடி யார்நற் குணங்குடி யோங்கக்
கொடுகொடென் றடிக்கடி குணங்கும்
குணங்குடி யார்துர்க் குணங்குடி போகக்
குணமெலாந் திரண்டருள் பரப்பிக்
குணங்குடி யேறிக் குறைவற நிறைந்து
குணக்கட லானமெய்ஞ் ஞானக்
குணங்குடி வாழும் அகத்தீச னாம்என்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்.

## 9. மகமூது நபியாண்டவரைச் சுகானுபவமுறத் துதித்தல்

**ம**கமூது நபியை முத்திப் பயிர் விளைக்கும் நல்ல சமுசாரியாக உருவகப் படுத்திப் பாடப்பட்டுள்ளது. ஞான வாழ்வை உழவுத் தொழிலாக உருவகித்து விளக்குவது மரபு வழியானது.

இஸ்லாமிய நெறியை முத்திப் பயிர் விளைக்கும் வேளாண்மையாகவும் முகம்மது நபியை வேளாண்மை செய்யும் சமுசாரியாகவும் உருவகித்துள்ளது இப்பாடல் களில் பொருத்தமாக உள்ளது.

சிற்றின்பத்தில் மூழ்காமல் இருப்பதற்கு அருளும் படியும் வேண்டுகிறார். ஆடவரைக் கவர்ந்து மயக்கும் பெண்களின் முடி, முகம், கண், இதழ், தனம், இடை, அல்குல் முதலிய உறுப்புகளை அருவருப்பும் வெறுப்பும் தோன்றும்படி உருவகப் படுத்துகின்றார் குணங்குடியார்.

## மகுழுதுநபி யாண்டவரைச் சுகானுபவமுறத் துதித்தல்

### *ஆசிரிய விருத்தம்*

வெட்ட வெட்டத் தளிர்கள் விட்டுப் படர்ந்தடரும்
 வீசுபா சாட வியெனும்
வினையென்ற பெருமர வனக்கான கக்காடு
 வெட்டநிர்த் தூளி பண்ணி
வெகுளிக ளெனும்பல பரட்டுமுட் காடெலாம்
 வேறொ டறப்பி டுங்கி
விரிகருணை வீரகண் டாமணி யணிந்துதுணி
 வீரவா யுதம ணிந்து
வெற்றிகொண் டெழுமகங் காரவேங் கைப்புலியை
 வேட்டையா டித்து ணித்து
வெட்கமொடு துக்கமும் வெருட்சியு மருட்சியும்
 வெருண்டோட வருவி கார
வெஞ்சின மெனுங்கொடிய துட்டமிரு கங்களும்
 வெட்டிவா ளெடுத்தெ டுத்து
வீறுவிட் டலறியொன் றோடொன்று சேராமல்
 வெருவியே கிடவ டித்து
வெல்லரிய மாமாயை யெனுமலைப் பாம்பினை
 விவேகமெனு மண்டாவினால்
வெட்டிப் பிளந்தபின் மின்னுகர ணத்தொடு
 மெய்த்தவக் கனலை மூட்டி
விண்டலமு மண்டலமு மொன்றாகி நின்றபெரு
 வெளிவாயு வதனை யூதி
மெய்யான வடவன லெனச்சுடப் பரந்தபுன்
 விளிமாயை யெனுமி ருளெலாம்
விரிகதிர் வரக்கண்ட பனியின்முக மென்னவழி
 விட்டுவெளி வாங்கி யேங்க

வெட்டியைக் கட்டிவழி வெட்டிப் பறிக்கின்ற
விளையறக் காடு வெட்டி
சுட்டபி ளகந்தைகுண மென்றகற் பாறையைச்
சுழியென்னு முளியி னாலே
சொச்சமற வெட்டிப் பிடுங்கியிடை பிங்கலைச்
சூட்சியென் னுஞ்ச கட்டில்
தூக்கிவைத் தேற்றியே தொந்தங்க ளென்னுமொரு
தோல்வடக் கயிறு கட்டித்
துட்டத் துடுக்கெனுங் காமாட்டி யாட்களுந்
தோல்வடந் தொட்டி ழுக்கத்
தூயமெய்ஞ் ஞானவை ராக்கியக் கசையினாற்
தொண்டுசெய் யென்ற டித்துத்
தூராத மிடியெனுந் தொல்லைப் பெருங்கேணி
தூர்க்கவத னால்நி ரப்பிச்
சொற்பிரண வச்சொரூப நிச்சயக கருமுகில்
சூழ்ந்துதங் காலூன் றியே
சுற்றிக் கவிந்துகொண் டானந்த மழைமாரி
சோராம லேபொ ழிந்து
சொல்லரிய நெஞ்சக மெனும்பூமி சுத்தவெளி
யாகவச் சுத்தி ருத்தித்
துய்யசதுர் வேதத்தை நால்வரப் பாக்கியே
துறவெனுங் கிடைம றித்துத்
சுருதிமுடி வென்னுமெய் யறிவுழவு தற்கான
சூத்திரமெ னுங் க லப்பை
துள்பவின் பங்களெ ன் பதிரண்டு மாடாய்ச்
சுருக்கிவார் பூட்டி யிதமாய்த்
துள்ளிக் குதித்தெடுத் தேறியே போகின்ற
துடியடக் கின்ற தடமாய்த்
தூலமொடு சூக்குமத் தாசையு நிராசையாய்த்
தொந்தநிர்த் தொந்த மாகிச்

சோதிமய மாமென்ற வித்தகப் பண்ணையாள்
தொட்டிதய மேழி யதனைச்
சொன்னபடி வந்திடக் கெளிகுண் டலியெனுஞ்
சுழிமுனைத் தாறெ டுத்துப்
பட்டும் படாதுவைத் திடைதரிசி லாதுழுது
பல்வருண பேத மென்னும்
பாவிகச் சாதிவரை கின்றகளி யளறது
பழுக்கஅழு கக்க லக்கிப்
பழக்கமெனும் அடைகலுங் கட்டியு மிதித்தபின்
பழகரிய சமர சமெனும்
படிகொண்ட மூலமுத லாதார மாறும்
பரப்பிப் பரம்ப டித்துப்
பகருமிரு கலைநோக்கு வருசுழியி லமைகின்ற
பலனெனுங் கைகு லுக்கிப்
பாரமல்லை யோடணு வகண்டமொடு கண்டம்
பரிட்சிக்கொ ணாதவி தையைப்
பட்டுமுந் தாதுபிந் தாமலே பரவியே
பருவமது செய்த பின்பு
பாசட ரெடுப்பரென் றெடுப்புநீ ரதனையும்
பார்த்துக் கழித்து விட்டுப்
பத்திவை ராக்கியக் கடன்மடை திறந்துகால்
பாய்ச்சியது பயிரா கவே
பரிபாக பக்குவக் காலமது பிசகாது
பார்த்துப் பதந் தன்னிலே
பற்றிப் படந்ததொண் ணூற்றாறு தத்துவம்
பலகளை யறப்பி டுங்கிப்
பரிபூர்ண மாகவே நாளுக்கு நாட்கதிர்ப்
பலகோ ளறப்ப றித்து
பாளையென் னும்பருவ முற்றியே முத்திப்
பலன்பெற்ற சமுசா ரிநீ

படைகொண்ட மும்மண்ட லத்தினு முன்மகிமை
பற்றிப் படர்ந்த குருவே
பாதபங் கயமதுக் காளடிமை யாகாது
பாவத் தழுந்து வேனோ
பாசவலை வீசியே மோசமது செய்கின்ற
பாவையர்க் காளா வனோ
கொட்டிய கருந்தேள் நிகர்த்த விழி மின்னார்
குவிந்த விரு பொற்கொங் கையுங்
கோசமொடு மும்மத மிறைக்கின்ற கர்விதக்
குஞ்சரக் கொம்பு தானோ
கொஞ்சுகிளி மொழியார்கள் நாவுநல் லரவினது
கொடியநச் சுப்பை யதோ
கூரிருட் கூந்தலென் சொல்லுகேன் கோடையிடி
குடிகொண்ட கருமே கமோ
கோதையிள மின்னார்கள் யோனிப் பெருங்கேணி
குறையாத யானை மடுவோ
கூறுமுகி லேழும் படர்ந்துவரு டிக்கினும்
குறையறாக் கெடுபள் ளமோ
கொத்துக் கடங்காத மதகரி தனக்குமது
கொப்ப மோ படுபள் ளமோ
குருவைத் தொழாமனுக் குப்பைக ளொதுங்குமோர்
குப்பைக் கிடங்கு தானோ
கொலைசெய்ஙம னாரிருக் கின்றபடு களமோ
கொடுஞ்சிங்க மிடிபொ தும்போ
குமுகுமென வதிரசத் தேனொழுகு கனியெனக்
கொண்டுநெஞ் சினைவாட் டுதே
கோடைப் பெண்ணிலத் தாசைதரு கின்றதே
கோதையர்கள் காத லாலே
கூளமத ரிப்பதே யல்லா திருந்துநான்
குளிர்காய நேர மிலையே

கூர்குணம் அகத்துநிற் கின்றபர வெளியெலாங்
குடிகொண் டிருந்த குருவே
கொடியகெடு மாயையைக் கூடா திருக்கின்ற
குறியருள்வ தென்று புகலாய்
கோடானு கோடிமறை யாலுமறி யாக்குணங்
குடிகொண்ட கருணை வடிவே
கூலாயி லாகயில் லல்லாகு வென்பதற்
குரியமகு மூது நபியே.

## 10. தவமே பெற வேண்டுமெனல்

இத்தலைப்பில் உள்ள பன்னிரண்டு கட்டளைக் கலித்துறைகளும் உலக இன்பங்களைத் துறந்து தவமியற்றல் வேண்டும் என்பதை விளக்குகின்றன.

ஓடியலைந்தும் உழன்றும் தேடிய செல்வமெல்லாம் செத்தபின் உதவாது, பெண்ணாசையினால் உண்டாகும் கன்மங்கள் பல. அலைந்து திரிந்து பாடுபட்டு உழைப்பது உரிய பயன்தராது. பரம்பொருளையடைய தவம் செய்ய வேண்டுமென்று உபதேசம் செய்கிறார் குணங்குடியார்.

*கட்டளைக் கலித்துறை*

ஓடி யலைந்துமிவ் வைய முற்று முழன்றுழன்றுந்
தேடி யெடுத்த திரவியம் யாவையுஞ் செத்தபின்பு
நாடி யெடுப்பது முண்டோ மறந்து நடக்குநெஞ்சே
வாடி யிறந்தறஞ் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே. 1

பெண்ணாசை யென்கின்ற பேய்பிடித் தாடிய பேதைநெஞ்சே
கண்ணா லதில்வருங் கன்மங்கள் யாவையுங் கண்டிலையோ
எண்ணதா பாவங்க ளெண்ணாமற் செய்யுமிப் பேருடம்பு
மண்ணாக நற்றவஞ் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே. 2

ஆடும் படுபொரு ளாட்சியென் றங்கிங்கு மாயலைந்து
பாடும் படுவதுன் பாரம தோசொல்லு பாழ்மனமே
கூடும் படுபயன் றேடுமப் பாலுள்ள கூட்டம்விட்டு
வாடும் படும்பெரு முண்மைக் குணங்குடி வாய்த்திடுமே. 3

ஆதி முகம்ம தருளா முகம்ம தருள்விரிந்த
சோதி முகம்மது தோற்ற முகம்மது தூயவுளத்
தோது முகம்மதுதென் றுண்மைகண் டாலிவ் வுலகினுக்கு
வாதி முகம்மதி னோடு குணங்குடி வாய்த்திடுமே. 4

எல்லாப் படைப்பும் படைத்து மிரணங்க ளீபவனே
அல்லா வொருவ னவனன்றி வேறில்லை யாகையினாற்
சொல்லாமற் சொல்லுஞ் சுருதி முடிவினிற் சொல்லிறந்த
வல்லான் குணங்குடி வாழ்ந்திருப் போமினி வாருமினே. 5

அய்யோ வுலகி லழியா வரம்பெற்றி யாரிருந்தார்
அய்யா வுனக்கந்த ஆதர வென்னதி லாசையென்னோ
பொய்யான வாழ்வும் புலையாட்டு நம்பும் புதரலர்க்கும்
ஒய்யார முள்ள குணங்குடி யார்க்கு முறவில்லையே. 6

உற்றா ருந்ததென்னப் பெற்றா ரிருந்தென் னுனக்குதவி
சற்றா யினுமில்லை சொன்னேன்சொன் னேனிது சத்தியமாய்ச்
செற்றாலும் வைத்தடி வாங்காம னிற்கிற் செயம்பெறலாங்
கற்றார் குணங்குடி கொண்டிடு வாய்மனக் கண்மணியே. 7

என்சா னுயரத் திருக்கும் பனையி னிறக்கியுண்ணும்
பஞ்சாக் கரமெனும் பாரிய கள்ளினைப் பாய்ந்தெடுத்துத்
தஞ்சாவூ ராளு மகராசன் பாதந் தனைப்பணிந்தால்
கெஞ்சாக் குணங்குடி கொள்வா யிதுபுத்தி கேள்நெஞ்சமே. 8

படிக்கும் படிக்கு நடக்கின்ற யோவிப் பழஞ்செருப்பால்
அடிக்கட்டு மோவுனக் கொத்தாசை யாரறை பாவிநெஞ்சே,
முடக்கிப் படுத்துக்கொள் முச்சந்திக் குப்பையின் மோடுகளில்
அடக்கிக் குணங்குடி கொள்வா யதுபர மானந்தமே. 9

ஆருக்கு வந்த விருந்தென்றி ராம லருமையுள்ள
பேருக்கு வந்த தெனவே நினைந்து பிரியமுற்றூர்
ஊருக் கமைந்ததோ ரன்னங்க ளுண்டுண்டொன் றும்முரையாப்
பாருக்குள் நல்ல குணங்குடி பேய்ப்பள்ளி கொண்டிடுமே. 10

மூலம் முகம்மது முப்பாழ் முகம்மது மோனமுள்ள
பாலம் முகம்மது பக்தியுள் ளோர்களும் பாய்ந்தெடுக்கும்
வேலும் முகம்மது வேதாந்த மூல விளக்குடைய
கோலும் முகம்மது குன்றாக் குணங்குடி கொண்டவர்க்கே. 11

நாளைக்கிருந்திட லாமென வெண்ணி நடுநெஞ்சமே
நாளைக் கிருப்பதை நம்புவ தோவில்லை நானிலத்தில்
நாளைக்கும் பின்னைக்கும் நாமிருப் போமென்னு நாட்டமற்றெவ்
வேள்ளைக்கு நல்ல குணங்குடி வாழ்ந்திரு வேளையிதே. 12

நாட்டமென் றேயிரு வுன்னிரு பாதத்தி னன்னிலையின்
ஓட்டமென் றேயிரு வொன்றான வக்கர மோதியதின்
ஆட்டமென் றேயிரு தோற்ற மெவையு மலிபுடைய
நீட்டமென் றேயிரு நெஞ்சே குணங்குடி நிச்சயமே. 13

நாடு நகருண்டு நல்லோர் களுமுண்டு நாதனுமுண்டு
ஓடு மெனக்குண்டென் றெண்ணியுன் கையி லுடல்பசித்தாற்
போடென்று கொண்ட கவளத்தை வாங்கிப் புசித்துக்கொண்டு
பாடுங் குணங்குடி வாழ்ந்திட லேபர மானந்தமே. 14

## 11. குறையிரங்கி உரைத்தல்

சூபிக்குரிய அறங்கள் யாவும் இப்பகுதியில் வலியுறுத்தப்படுகின்றன. இதன்கண் ஏழு நேரிசை வெண்பாக்கள் உள்ளன.

யோகநெறி நின்றார் நாசி நுனியில் குருபரனாகிய ஒளிநடமிடும். பாவையரின் சிற்றின்பத்திற்காகக் கரைவது கூடாது. பேரின்ப நுகர்வை நஞ்செனக் கருதுவது கூடாது.

வசதி மிகுந்திருப்பின் சிறிய துன்பமும் மிகுந்து காணப்படும். குறைந்தால் குறையும் அனைத்தையும் துறந்துவிட்டால் துன்ப உணர்வே தோன்றாது என்று போர்வையும் குளிரையும் கொண்டு துறவு பூணுவது பற்றி விளக்குகிறார் குணங்குடியார்.

## குறையிரங்கி யுரைத்தல்

*நேரிசை வெண்பா*

கள்ளினங்க ளுண்ணுங் கழுதைகா ளென்சொலினும்
எள்ளளவு மும்மிதயத் தெய்திலதே—உள்ளம்
இணங்கா மடமாந்த ரெக்கேடு தான்கெடினுங்
குணங்குடியார்க் குண்டோ குறை. 1

உற்றா ரழாம லுறன்முறையார் திட்டாமற்
பெற்றார் பிறந்தார் பிதற்றாமல் – எத்தாலும்
அங்கிங் கெனாதபடி யாரும் பெருவெளியில்
தங்கல் குணங்குடியே தான். 2

நாசி நுனியி னயனத் திடைவெளியிற்
றேசிகனா ராடுந் திருநடனம்—வாசிகொடுத்
தோரா யெழுவா யுணர்வா யருள்நெஞ்சே
பாராய் குணங்குடியின் பால். 3

பாலிடுக்குந் தோற்பையைப் பற்றியுளம் பாவையரின்
காலிடுக்குக் காகக் கரைவனோ—மேலெடுக்கும்
உன்னருளை யுங்காட்டி யோங்குங் குணங்குடியின்
தன்னருளை யுங்காட்டித் தா. 4

நஞ்சுண்ணு மாப்போலு நாத னருள்பெறவென்
னெஞ்சேநீ புண்ணாய் நினைப்பதேன்—அஞ்சாதே
என்றுமுத்த னம்முள்ளே யேகா திருப்பதால்

ஒன்று குணங்குடியி னுள். 5



நீண்டாண் பனைபோலு நெற்பதரைப் போலுமே
ஏன்றா னெனைப்படைத்தா யென்கோவே—தீண்டாத
கல்லா மிடாவதைநின் கைத்தடியான் மோதினால்
அல்லாற் குணங்குடியா கா. 6

மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்றுதுணி போர்த்துவரச் சற்றுகுளிர்—இற்றதுணி
இல்லைக் குளிருமிலை யில்லையிது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர். 7

## 12. தவராஜ மகிமை கற்றல்

**நா**கூரில் அடங்கியுள்ள மீரா சாகிபு மீது பாடப் பெற்றது. பதினான்கு சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாடல் ஒன்று கொண்டது. இதில் அரசர்களும் இறையருள் பெற்ற பெரியோர்களும் ஒலிமார்களும் மெய்ஞானிகளும் கோடிக்கணக்கில் வந்து பணிந்து முகம்மது நபியின் வழிவந்த தவ மன்னரே என்று போற்றுவர் என்று கூறுகிறார்.

### தவராஜ மகிமை சாற்றல்

நாகூர் மீராசாகிபு அவர்கள் மீது பாடியது

*இரட்டை ஆசிரிய விருத்தம்*

திக்குந் திகந்தமுங் கொண்டாடி யேவந்து
    தீன்கூறி நிற்பர் கோடி
சிங்காச னாதிபர்க ளடியேந்தி யேவந்து
    ஜெயஜெயா வென்பர் கோடி
அக்களருள் பெற்றபெரி யோர்களொலி மார்களிணி
    அணியாக நிற்பர் கோடி

அஞ்ஞான வேரறுத் திட்டமெய்ஞ் ஞானிகள்
அணைந்தருகு நிற்பர் கோடி
மக்கநக ராளும் முகம்மது றசூல்தந்த
மன்னரே யென்பர் கோடி
வசனித்து நிற்கவே கொலுவீற் றிருக்குமும்
மகிமைசொல வாயு முண்டோ
தக்கபெரி யோனருட் டங்கியே நிற்கின்ற
தவராஜ செம்மே ருவே
தயையைவைத் தென்னையாள் சற்குணங் குடிகொண்ட
சாகுல்க மீத ரசரே. 1

## 13. வானருள் பெற்றோர் மனநிலை உரைத்தல்

வேல் எறியினும், நெருப்பு மூண்டெரியினும், நச்சரவு நெளியினும் அஞ்சாமல் தவம் செய்து பேரின்பமுற்றார் நிலையினை இப்பகுதிப் பாடல்களில் குணங்குடியார் விளக்குகிறார்.

வானருள் பெற்றோர் மனநிலை யுரைத்தல்

*கலி விருத்தம்*

வஞ்ச வேல்கொடு மார்பி லெறியினும்
விஞ்ச வேதழல் மூட்டி யெரிக்கினும்
நஞ்சி னாரழ னாகம் நலியினும்
அஞ்சி டாதவ ரானந்த மாவரே. 1

## 14. ஆனந்தக் களிப்பு

இறைவனைத் தேடிப் பேரின்பத்தில் செருக்குற்று பக்தி பரவசத்தால் பாடுவது ஆனந்தக் களிப்பாகும். இதில் சிந்து வடிவில் அமைந்துள்ள முப்பத்தெட்டு பாடல்கள் உள்ளன. ஒரு பல்லவியும் உண்டு.

பெருஞ் செல்வத்தால் செருக்குற்றுக் கூத்தாடும் தீயவரைக் கூடாமல் இருக்கவும், சும்மா இருக்கும் திறன் பெறவும், உலக ஆசையை நீக்கவும், பேரின்ப வீட்டைத் தேடவும், இழிந்த உடல் வாழ்வை வீசி யெறியவும், காமக்குரோதங்களையும் கருவி கரணங்களையும் விட்டுக் கதி கிடைக்கும்படி நடக்கவும் தன்னையறிந்து தலைவனையறியவும் ஆழித்துரும்பென அலைந்து அஞ்ஞானத்தில் வீழ்ந்து கெடாமல் மதியமிர்தத்தை அருந்தவும், பாரினில் பலவிதமான வினைகளை நீக்கியும் இரக்கத் துணிந்து கொண்டேனே எனக்கிருக்கும் குறை முழுவதும் நிகழ்த்துக் கொண்டேனே என்று இப்பகுதியில் குணங்குடியார் ஆனந்தக்களிப் பெய்திப் பாடுகிறார்.

## ஆனந்தக் களிப்பு

இரக்கத் துணிந்துகொண் டேனே—எனக்
கிருக்குங் குறைமுழுதும் நிகழ்த்திக் கொண் டேனே (இர)

1. கொடிகட்டிக் கொண்டெழு கோடி—தனங்
குவித்தந்த மகிழ்ச்சியாற் கூத்துக ளாடி
கெடுபுத்தி யுடையோரைக் கூடி—தனங்
கெட்டலையாமலே கெதிபெற நாடி (இர)

2. சொற்கடங் காச்சுகற ஞானம்—தன்னிற்
சும்மா விருக்குஞ் சுகமதே மோனம்
எட்கிடை யாயினும் பானந்—தன்னை
எடுத்துண் டிருப்பதற் கிச்சித்தே யானும் (இர)

3. வஞ்சிய ராசையைத் தாட்டி—விட்டு
வழிபெற்றுக் களிப்புற்று வாசியைப் பூட்டி
துஞ்சாத வறிவினைச் சூட்டி—அற்பத்
தொல்லுல காசை துணித்துவிட் டோட்டி (இர)

4\. அஞ்சுதூ ணட்டிய மாடி–அது
அஞ்சோடு நாலோட்டை யடையாம லோடி
பிஞ்சழிந் திடுமென்று நாடி–யானும்
பேரின்ப வீட்டினைப் பிரியமாய்த் தேடி (இர)

5\. நற்பூச்சந் தனவத்தர் பூசி–மிக
நன்றாக வைத்தாலும் நாற்றமே வீசி
எப்போதுங் கொடுமைசெய் தோசி–என்றே
இவ்வுடல் வாழ்வுக ளியாவையும் வீச (இர)

6\. மாளிகை மேல்வீடு கட்டி–மனை
வாழ்வை நிலையென்று வாழ்கின்ற மட்டி
நாளையெமன் வந்த தட்டிக் கொண்டு
நடப்பானென் றறியானை யடுப்பதை–வெட்டி (இர)

7\. பட்டும் பணிகளும் பூண்டு–கொண்டு
பாழான் வாழ்வினைப் பலனென ஆண்டு
கெட்டவர் களைக்கண்டு மீண்டு–கதி
கிடைக்கும் படிக்கு நடப்பதற் கீண்டு (இர)

8\. காமக் குரோதங்க ளற்று–சூழுங்
கருவி கரணஞ் சகலமு மற்று
நேமநிட்டை களௌ்யு மற்று–நின்று
நிலையு மறந்து குருவடி பெற்று (இர)

9\. எத்தனை யெத்தனை காலம்–இந்த
என்பு தசையா லெடுக்கின்ற தூலம்
மெத்தென வாழுமிஞ் ஞானம்–அதை
மேவாது மேவாதெடுத் திந்தக் கோலம் (இர)

10\. என்னிலை தன்னை யறிந்தே–குரு
இருந்தாடுஞ் சூத்திரம் பொருந்திட மறிந்தே
அன்னிய நிலைகளைத் துறந்தே–குரு
அருளினா லநுதின மருளொலா மறிந்தே (இர)

11. ஆழித் துரும்பென அங்கும்—இங்கும்
அலைந்து திரிவதி லஞ்ஞானந் தங்கும்
பாழிற் கெடாதருள் பொங்கும்—பட
பார்த்துத் துணிந்து பரதேச மெங்கும் (இர)

12. காடுங்க ரையுஞ்சு ழன்று—ஒரு
காட்சியுங் காணோ மெனவேயு ழன்று
தேடும் பருவத்திற் சென்று—திக்குத்
திசையொன்றுந் தெரியாமற் றெளிதற்கு நின்று (இர)

13. ஆடிய கூத்தினைப் போற்றி—அருள்
ஆனந்தஞ் சேர்க்கும் அருளினாற் றோற்றி
ஓடிய காற்றினை யேற்றி—அதில்
உருகி யொழுகும மிர்தத்தைத் தேற்றி (இர)

14. நாலிரண் டரைமுழ மான—பிண
நாற்றச் சடலத்துள் நானென்று ஞானக்
கோலம் விளக்கிய மோன—அருள்
குருவடி திருவடி யுருவத்தை மான (இர)

15. எறியும் அகத்தைத்த டுத்தே—அதில்
இச்சித்துப் பட்சமிகவைத்த டுத்தே
அறிவைக்கொண் டறிவைத்தோ டுத்தே—அருள்
ஆனந்தஞ்சேர்க்கின்ற அருளினை யெடுத்தே (இர)

16. பாரினிற் பலவிதங் காட்டி—நல்ல
படிகத்தின் குணமெனப் பரவொளி சூட்டி
ஆரிய னருளினைக் கூட்டி—குரு
அருள்செய்த வுடனேயென் வினைகளை—யோட்டி (இர)

17. மண்டப வுள்ளறை விண்டு—வரும்
மாமண மூறிய தேமது வுண்டு
உண்டு களிப்போரைக் கண்டு—யானும்
உள்ளத் திருக்கினைத் தள்ளிக்கைக் கொண்டு (இர)

18. மாதவந் தன்னைப்பு ரிந்து—ரச
வாதங்கள் செய்கிறோமென்றுதி ரிந்து
சூதோடு வாதைப்பு ரிந்து—ரச
சூதரைச் சந்திய மாகப்பி ரிந்து (இர)

19. பொறிபுல னடங்கிய காலே—பரி
பூரணப் பொருள்வந்து வாய்க்குமப் பாலே
அறிஞரு மறியாது போலே—காணும்
ஆனந்த வெள்ளத்தி னாடின தாலே (இர)

20. நினைவுங் கனவு மறந்து—நின்ற
நிலையு மறந்தெழு கலையு மறந்து
இனமு மனமும் மறந்து—பின்னர்
இதனிடை தோற்றிய விதங்களு மறந்து (இர)

21. கற்பட்டுப் பாய்கின்ற தோயம்—போலக்
காட்டி மறைக்கும் பிரபஞ்ச மாயம்
அற்பர்க்குத் தெரியாது பாயம்—என்று
ஆலோ சனைசெய் தழியுமுன் காயம் (இர)

22. எனையானென் றறியாத பாடு—என்னை
இக்கோல மாக்கிய தேயதன் கேடு
தனையானு மெதிர்க்கையி னோடு—கொண்டு
சாபத் துடனடர்ந்து கோபத்தி னோடு (இர)

23. விண்ணுக்குள் வெளியிருள் மாற்றி—அதில்
வேதாந்த மூல விளக்கினை யேற்றிக்
கண்ணுக்குள் மணியாகத் தோற்றி—வருங்
காரணமான கடவுளைப் போற்றி (இர)

24. எல்லாரு மானிடர் தாமோ—இந்த
இழிவான பிரமைக ளெல்லார்க்கும் போமோ
கல்லெல்லா மாணிக்க மாமோ—என்று
கற்பித்த காரண குருவடி போற்றி (இர)

25. நாதமுங் கீதமுங் கேட்கும்—அந்த
நாயகன் சந்நிதி தன்னிடை சேர்க்கும்
மாதவ நின்னிலை யாக்கும்—நல்ல
மாசறு தேசிகன் பொற்பதம் போற்றி (இர)

26. கட்டுப் படுங்கன்மக் குட்டை—வருங்
காலத்தச் சன்கையால் வெட்டிடுங் கட்டை
துட்டத் தொழில் படைத்த மட்டை—இந்தத்
தூலமென் றெண்ணிக் குருவருள் போற்றி (இர)

27. போக்கு வரவற்ற போதம்—பஞ்ச
பூதாதி யாலடங் காதெழு நாதம்
வாக்கி லமையாத வேதம்—தன்னை
வடித்துப் புகட்டு மகத்துவைப் போற்றி (இர)

28. நரம்பு தசைதோ லெலும்பு—கொண்டு
நாட்டும் வினைகளுக் காட்டுத் துரும்பு
நிரம்புந் துயர்கொ ளுடம்பு—என்று
நில்லாதென் றெண்ணியில்லலல்லாவைப் போற்றி (இர)

29. ஆழித் திரளெனப் பொங்கும்—அருள்
ஆனந்தஞ் சேர்க்கு மறிவிற் கடங்கும்
நாளுக்கு நாளங்கு மிங்குஞ்—சற்றும்
நாதாந்த வேதாந்த நாதனைப் போற்றி (இர)

30. இன்றைக் கிருப்பதும் பொய்யே—இனி
என்றைக் கிருப்பது மெய்யென்ப தையே
என்று மிருப்பது மெய்யே—என
எண்ணி யெண்ணியரு ளுண்மையைப் போற்றி (இர)

31. பார்க்கப் பலவித மாயும்—ஆகப்
பல்லாயி ரங்கோடி யண்டம தாயும்
காக்கு நிலைக்குயி ராயும்—நின்ற
காரண பூரண நாதனைப் போற்றி (இர)

32. கரும்புசர்க் கரைகற்கன் டாலே—பாகங்
காய்ச்சி யெடுத்துத் திரட்டிய பாலே
அரும்பாவிக் கருத்துங்கை யாலே—அணைத்
தாட்கொளு நாயகன் றாள்களைப் போற்றி (இர)

33. கற்பங்க ளுண்டோநா மென்றே—வெறி
கஞ்சாவுங் கள்ளு மபினியுந் தின்றே
துப்புக்கெட் டலையாம னின்றே—அருள்
தூயமெய்ஞ் ஞானச் சுடரினைப் போற்றி (இர)

34. கருவி வழிதனி லோடி—யானுங்
காலுக ளோய்ந்தும் விடாமலே தேடி
அருவிக் கயர்ந்துளம் வாடி—அலை
யாம லெனக்கருள் வாமனைப் போற்றி (இர)

35. நாசி நுனியிடை நின்று—நல்ல
நடனம் புரிவதைக் கலீஃலலீ ரென்று
வாசியி லேறிக்கொண் டின்று—காண
வைத்த குருபர னற்றாளைப் போற்றி (இர)

36. தேடிய பொருள்புதைப் போரும்—தேசா
தேசங்கள் ராஜாங்க மாண்டிருப் போரும்
ஈடெனக் கில்லையென் போரும்—செத்
திறப்போரென் றேமனந் திறப்படப் போற்றி (இர)

37. ஆனை குதிரைக ளொட்டை—ரதம்
ஆசையோ டேறும் உடலொட லொட்டை
ஞானமி லாதகன் பொட்டை—என்று
நாதன் குருவறி வித்ததைப் போற்றி (இர)

38. அரச ரரண்மனைக் கோட்டை—சூழ
அன்பர் நடனம் புரிகின்ற பாட்டை
இரவும் பகன்மனச் சேட்டை—வைத்த
இன்பக் குணங்குடி யானருள் போற்றி (இர)

மொத்தம் பாடல் 281

# 15. நிராமயக்கண்ணி

நிராமயம் என்னும் சொல் நோயற்றது எனப் பொருள் தரும். இங்கு பரம்பொருளைக் குறிக்கிறது. 280 கண்ணிகள் இதன்கண் உள்ளன.

இக்கண்ணிகளில் உலகம், உயிர் இறைவன் பற்றிய சமய உண்மைகளை மிக எளிமையாகவும் அனுபவப் பூர்வ மாகவும் விளக்குகிறார்.

ஒவ்வொரு கண்ணியும் நிராமயமே என முடிகிறது.

இறைவனை ஆதிமுதலே, அகண்ட பரிபூரணமே என்றும் வாசாமகோசரமே, கண்ணே மணியே கண்ணிறைந்த காரணமே, விண்ணே, மெய்ஞ்ஞான வெளியே என்றும் வற்றாச்சமுத்திரமே என்றும் உருவகிக்கிறார்.

இருவினைகள் பற்றியும் ஆசை பற்றியும் உடல் பற்றியும் கருவி கரணம் பற்றியும் மனம் பற்றியும் ஆணவம் பற்றியும் மாயை பற்றியும் விளக்குகின்றார்.

ஊசியைக் காந்தம் ஈர்ப்பதுபோல் தம்மை உகந் தனைக்கும்படி வேண்டுகிறார். கற்பூர உருண்டை கரைவது போல ஆன்மா இறைவனுடன் ஒன்றும் அத்வைத நிலை பற்றியும் பல பாடல்களில் கூறுகிறார்.

## நிராமயக்கண்ணி

ஆதி முதலே யகண்டபரி பூரணமென்று
ஓதுங் குணங்குடிகொண் டோனே நிராமயமே. 1

தேசிகனா னென்றே திருநடன மாடுகின்ற
வாசாம கோசரமே வாழி நிராமயமே. 2

சுத்தத் திருவடியிற் சொக்கி யருள்பெறுமுன்
செத்திறந்து போனாலென் செய்வேன் நிராமயமே. 3

கண்ணே மணியேயென் கண்ணிறைந்த காரணமே
விண்ணேமெய்ஞ் ஞான வெளியே நிராமயமே. 4

எந்தவிதமென் னிதயந் தெளிவதற்கே
பந்த வினையைகலப்பாராய் நிராமயமே. 5

இறந்தான் முதலகத்தில் என்னதுயா னென்பதெல்லாந்
துறந்தானே அந்நிலையே சொல்வாய் நிராமயமே. 6

வற்றாச் சமுத்திரமே வள்ளலே வான்பொருளே
சித்த ருளத்தில் தெளிவே நிராமயமே. 7

உம்பர்க்கும் எட்டாதென்று ஒன்றிமறை யோலமிட்ட
செம்பொற் கிரியே செயமே நிராமயமே. 8

பேச்சுக் கடங்காத பேரின்பத் தேனாமிர்தங்
காய்ச்சி வடித்த கடலே நிராமயமே. 9

அந்தரத்தி னுள்ளேநின் றாடுதிருக் கூத்தனை
சிந்தை அறிகிலேன் செய்வே னிராமயமே. 10

மோன மவுனமணி மூடிவைத்த பெட்டகமே
தேனமுத இன்பத் தெளிவே நிராமயமே. 11

மண்பட்ட நெஞ்ச மயக்க மெலாந் தீரவருள்
பண்பட்டார்க் கல்லோ பயன்காண் நிராமயமே. 12

மனவாக் கணுகா மறைந்தவான் செஞ்சுடரே
இனமாதி யற்ற இறையே நிராமயமே. 13

பார்க்குமிட மெல்லாம் பரிபூ ரணமாக
ஏர்க்கையுடன் நின்ற இயல்பே நிராமயமே. 14

விண்ணுமுதல் மண்ணாய் விளங்கி நின்ற மெய்ச்சுடரே
கண்ணேயென் னின்பக் கடலே நிராமயமே. 15

துன்புறுமென் னெஞ்சத் துயரமெலாந் தீர்க்கவெனக்கு
அன்புருவாய் நின்ற வருளே நிராமயமே. 16

அங்கிங்கென வொண்ணா அகண்டபரி பூரணமாய்
எங்கும் நிறைந்த இறையே நிராமயமே. 17

நாட்டும் இருவினையும் நாட்ட ருளதருளின்
தேட்டாள ரென்ற திறமே நிராமயமே. 18

படர்ந்த மணங்குடியாம் பக்குவர் சாடவியைத்
தொடர்ந்து தொடர்ந்துவெட்டத் துணிவார் நிராமயமே. 19

உத்தமர்கட் காகா வுலுத்தப் புலையரெனும்
பித்தர் நெறியுளரோ பேசாய் நிராமயமே. 20

பாவபுண் யத்தைப் பறக்கவிட்ட பத்தர்தமக்
கேவல் விலகலிலை யென்றாய் நிராமயமே. 21

முத்திதரும் வேத மொழிந்த வழிநடக்கப்
பெற்ற குருவென் பிணைகாண் நிராமயமே. 22

ஊத்தைப் பிணமாம் உடலை இடிசுவரை
ஏற்ற படிவிடுதல் ஈனம் நிராமயமே. 23

வஞ்ச மழிந்து வருபாசம் விட்டொழிந்து
நெஞ்சந் தெளிய நெறிநிற்பார் நிராமயமே. 24

தொந்தங் கடிந்தே சுபமணையின் அல்லாலென்
புந்தி மயக்கம்விட்டுப் போமோ நிராமயமே. 25

வாராக் கருணைமழை வந்துபொழிந் தாலொழியத்
தீரா மனமயக்கந் தீரேன் நிராமயமே. 26

மாயும் பசுபாச மடிய மடியஅருள்
தாயனைய இன்பந் தருவாய் நிராமயமே. 27

அய்யனே யென்னை யணைத்தாட்கொண் டாளவந்த
மெய்யனே நாத வெளியே நிரா்மயமே. 28

கூறும் அவத்தைக் குணங்குடிபோம் அன்பருக்கு
யாரை நிகரிடுவது ஐயா நிராமயமே. 29

பித்தம் பிடித்தலையும் பேய்க்குரங்கு போற்கரணம்
புத்தி தனையலைக்கப் போமோ நிராமயமே. 30

தஞ்சமெனும் ஞானத் தடாகத்தின் மூழ்குநர்க்கு
விஞ்சிய நாத விளக்கே நிராமயமே. 31

ஆரிருந்தென் னார்போயென் ஆவிக் குறுந்துணையாம்
பேறுபெறச் செய்தாற் பிழைப்பேன் நிராமயமே. 32

போகாக் கவலைப் புழுக்கமெலாந் தீருதற்கு
வாகா யருள்புரிய வாராய் நிராமயமே. 33

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல்வைத்தால்
நேமநிட்டைக் கம்பம் நிலைகாண் நிராமயமே. 34

நின்னைச் சரண்புகுந்தால் நிர்மூட மாகவெனை
என்னத்துக் காட்கொண்ட தியம்பாய் நிராமயமே. 35

சிந்தை யறிவைச் சிதையவிட்டுன் னருள்பெறவே
வந்தேற்குன் திருக்கருணை வைப்பாய் நிராமயமே. 36

தேனமுதே பாகு திரண்ட பெருங்கடலே
வானவர்க்கும் எட்டா மணியே நிராமயமே. 37

இந்த இதயம் இணங்கி வணங்க அருள்
தந்தடிக்காட் கொண்ட தானே நிராமயமே. 38

இடம்பொருள் ஏவல் எவையும் மறந்தகுணங்
குடியார்க் குவமை குறியேன் நிராமயமே. 39

ஆழாழி தானும் அணைகடவாது ஆணைதனில்
தாழ விலையோ வென் தாயே நிராமயமே. 40

தீதுநலமறியேன் திசைநாகம் மற்றெவையும்
ஈதென் றறியேன் எளியேன் நிராமயமே. 41

மீளா வெளியில் விழற்கிரைத்த நீரெனவும்
பாழில் அலைவதுமென் பாவம் நிராமயமே. 42

ஈன்றெடுத்த மாதா எனையாட்கொண் டாள்வதென
ஆண்டனைப்ப தென்றோ அருளாய் நிராமயமே. 43

சாத்திரங்க ளோதுஞ் சழக்கர் தமக்குமருள்
மாத்திரைப்போ தென்றோ அருளாய் நிராமயமே. 44

அய்யனே மெய்யருளில் ஆசையற்ற நீசனுக்கு
உய்யுந் திருக்கருணை உண்டோ நிராமயமே. 45

காதல்தருங் கண்ணீர்க் கரைபுரள நின்றவர்க்குச்
சூதுதருங் கண்ணீர் தொலையும் நிராமயமே. 46

வஞ்சங் குடியிருந்து வாழும் மனத்தினருக்கு
எஞ்சா திருக்கும் இருப்பே நிராமயமே. 47

பற்றற்று நின்ற பரம பதத்தினருக்கு
எத்தொழிலுஞ் செய்ய இயல்போ நிராமயமே. 48

வாதே யகன்றகுணங் குடி வாழ வைத்தாயே
ஈதே பெருமையெனக் கென்றாய் நிராமயமே. 49

என்றுமிருப் போமென் றெண்ணியெண்ணி யென்னிதயஞ்
சண்டை பிடிக்கச் சரியோ நிராமயமே. 50

மட்டுக் கடங்கா மயக்கமெல்லாந் தீர்த்துவெளிப்
பட்டோர்கட் கல்லோ பயன்காண் நிராமயமே. 51

மன்னும் உயிர்க்கு மறலி வரும் பொழுதில்
உன்னையன்றி யார்தாம் உளரோ நிராமயமே. 52

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி யிடைந்துமனம்
புண்ணாவ தற்கோ புகுந்தேன் நிராமயமே. 53

உள்ளது உரியதெல்லாம் ஒளியா துரைத்தளனைத்
தள்ளி விடத்தான் தகுமோ நிராமயமே. 54

வன்னத் திருக்கருணை வாழுந் திருவடிக்கே
என்னத்தைச் செய்வேன் எளியேன் நிராமயமே. 55

கற்ற படி நடக்கக் கல்லாத பாவியெனைச்
சித்தந் தெளியவருள் செய்வாய் நிராமயமே. 56

பேச்சற்றுச் சிந்தை பிரக்கினையு மற்றபதம்
வாய்ச்சார்க்கல் லோமவுனம் வாய்க்கும் நிராமயமே. 57

நிட்டை நிருவிகற்ப நித்திரைகொண்டேயிருக்க
அட்டாங்க யோக மெனக்கு அருளாய் நிராமயமே. 58

தொல்லுலகில் அல்லல் துயரமெலாந் தீர்க்கவொரு
சொல்லருள வந்த துரையே நிராமயமே. 59

உயிர்த்துணைவ வேனும் உளந்தெளியா வுலுத்தரையோர்
மயிர்க்கு நிகர்குறிக்க மாட்டேன் நிராமயமே. 60

கொல்லா விரதத்தைக் கொல்லக் கொலைஞருளங்
கல்லாகத் தானோ கணித்தாய் நிராமயமே. 61

எத்தனையோ உத்தி எடுத்தெடுத்துச் செய்யும்உடல்
உற்றா ரிருக்க உடையும் நிராமயமே. 62

வாயே புலம்பி வருபாசப் பேய்பிடித்த
தீயனெனச் சொன்னாலென் செய்வேன் நிராமயமே. 63

தாயிருக்கப் பிள்ளை தளரா தொருபோதும்
நீயிருக்க நான்தளர் நேரோ நிராமயமே. 64

சொல்லுக் கடங்காச் சுகங்காண் துறவிகட்கு
நல்லறிவா சற்றே குங்காண் நிராமயமே. 65

மத்திபத்தி னூடே மறைந்த மணிவிளக்கை
நித்தம் விளங்கவருள் நேராய் நிராமயமே. 66

மெத்தப் படித்த வெறும்பாசப் பித்தருக்கே
சித்தந் தெளியாதென் செய்கேன் நிராமயமே. 67

கள்ள இருளைக் கடிந்துகரை யேறுதற்குத்
தெள்ளியவான் சோதித் திரளே நிராமயமே. 68

ஓட்டாதே உன்னைவிட்டும் ஓட்டி நயம் இடரில்
மாட்டாதே யான்பொறுக்க மாட்டேன் நிராமயமே. 69

தன்னை யறிந்தால் தலைவன் தனையறிந்தது
என்னும் மொழியே இதங்காண் நிராமயமே. 70

அபயம் எனைக்காப்பது அண்ணலே உன்னுபயம்
உபயம் உபய முனதுபயம் நிராமயமே. 71

பிரியா உனதடியைப் பின்தொடர்ந்தார் பின்தொடர
அறியாச் சிறியேனென் ஐயா நிராமயமே. 72

துற்குணமே கொண்ட தொழும்பன்யான் தொல்லுலகில்
கற்குணத்தார் என்போலுங் காணேன் நிராமயமே. 73

பொய்யுங் கவடுமுள்ளே பூட்டிவைத்த பெட்டகமாய்
நைய முடலெடுத்தேன் நான்காண் நிராமயமே. 74

கங்குல் பகலொழித்த காரணர்க்கோ நின்னருளைப்
பங்கு கொடுத்தாய் பகராய் நிராமயமே. 75

தேறாப் பிரபஞ்சத் திடுக்கமெல்லாந் தீர்ந்தவர்க்கு
மாறா அருள்நிலைதான் வாய்க்கும் நிராமயமே. 76

சருவ தயாநிதியாய்ச் சஞ்சரித்த நெஞ்சினர்க்குப்
பிரியா அருள்நிலைதான் பேறாம் நிராமயமே. 77

பாத முடிநடுவும் பக்கமுன்னும் பின்னுமற்ற
நாத வடிவே நவமே நிராமயமே. 78

பேசா இடமறித்தும் பேய்க்குரங்கு போற்கருவி
ஊசா டுவதேன் உரையாய் நிராமயமே. 79

எனையாட்கொண் டாளவரும் என்குருநா தன்வடிவந்
தனையார்க்குஞ் சொல்லத் தகுமோ நிராமயமே. 80

கொப்புவித்தி னுள்ளே குடியிருந்த கொள்கையென
எப்பொருட்குஞ் சித்தாய் இருந்தாய் நிராமயமே. 81

கூறுங் கருவி குடிபோன அன்பருக்கே
யாரும் நிகரோஎன் ஐயா நிரா மயமே. 82

சிந்தை சிதையாச் சிவராச யோகநிலை
வந்தோர்க் கருள்புரிய வந்தாய் நிராமயமே. 83

கோடானு கோடிமறை கூறஅறி யாதவுனைத்
தேடுகின்ற தென்னோஎன் திறமே நிராமயமே. 84

பிரியா அருள்நிலையைப் பெற்றார்பெற் றாரெனவும்
அறியா வெறியன்ஐயா ஐயா நிராமயமே. 85

எமனார் விடுதூது எனும் பாசக் கட்டறுத்தோர்
நமனார் தமக்கும் நமனாம் நிராமயமே. 86

துலங்கும் அருள்மயத்தைத் தோன்றாது இருள்மயமாம்
புலனைத் தொலைப் பாய்உனக்குப் புண்யம் நிராமயமே. 87

மன்னிக்க வொண்ணா மனக்குறையும் தாய் பொறுப்பாள்
நின்ன தருளுமந்த நேராம் நிராமயமே. 88

எந்த அறிவை யெடுத்தெடுத்தே ஓதினும்என்
புந்தி மயக்கு அணுவும் போகா நிராமயமே. 89

செகத்துள் மயக்கஞ் சிதறிப் பறக்கவும்என்
தகைப்பறவோர் முத்தந் தருவாய் நிராமயமே. 90

உய்த்த துணர்வதெல்லாம் உயிர்க்குயிர் நீ தானெனவுஞ்
சித்தந் தெளிந்தோர் திறங்காண் நிராமயமே. 91

அனைத் துயிரும் நீயென்று அறிந்தார் மறப்புமுதல்
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் நிராமயமே. 92

நின்செயல்கள் என்றால் நினைப்பு மறப்பு முதல்
என்செயல்கள் உண்டோ இயம்பாய் நிராமயமே. 93

எறும்பூர வூர இரும்புமுதல் தேய்வதுபோல்
இறும்பூரும் அன்பருளம் இத்தகைய நிராமயமே. 94

கும்பிக்கு இரைதேடிக் கொடுப்போர் முகம்பார்த்துச்
சம்பித் திரியத் தகுமோ நிராமயமே. 95

கடலின்மடை கண்டதெனக் கண்ணீர் கரைபுரளும்
அடியன்முகம் பார்த்திரங்கி அருளாய் நிராமயமே. 96

பருவமது செய்யப் படர்பயிராம் பக்குவர்க்குக்
கருவாம் அருள்நிலையே கனிகாண் நிராமயமே. 97

நினைப்பும் உதிப்புமெலாம் நின்செயலென்று அன்பருளம்
தினைப்போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே. 98

சிவராச யோகந் தெளித்த திறத்தினருக்கு
எவரைச் சரியிடுவது எந்தாய் நிராமயமே. 99

அந்திபக லற்ற அகண்டபரி பூரணர்க்கே
சிந்தை நிறைந்த தெளிவே நிராமயமே. 100

வேதங்க ளாலும் வெளிப்படாச் சுந்தரமாஞ்
சோதியெனக்கு என்றோ துலங்கு நிராமயமே. 101

எப்பொருளுந் தானாய் இயங்குமுனைப் பூசைசெய்யப்
புட்பம் எடுக்கவுந்தான் போமோ நிராமயமே. 102

கைப்பொருளைத் தேடிக் கடலோடிப் போவரென
மெய்ப்பொருளைத் தேடி மெலிந்தேன் நிராமயமே. 103

உயிர்க்கு ளுயிராயென் உள்ளுள் உலாவியநீ
தயிர்க்குளுறு வெண்ணெயெனத் தானே நிராமயமே. 104

மூடும் விழிக்கிடையாம் மூக்குநுனிக் கட்கிடைக்கீழ்
ஆடுந் திருநடனத் தாட்டம் நிராமயமே. 105

நீளுங் கரண முதல் நெக்குருகி மட்கினர்க்குத்
தாழா அருள்நிலையைத் தந்தாய் நிராமயமே. 106

கொல்லுதற்கு வந்த கொலைஞரெனப் பாவிமனம்
மல்லுப் பொருதுதற்கேன் வைத்தாய் நிராமயமே. 107

பல்லுயிரும் போற்றும் பரம் பதத்தினார்க்குச்
சொல்லுஞ் செயலுந் தொலையும் நிராமயமே. 108

தன்னை அறிந்தால் தனக்கொருகே டில்லையெனச்
சொன்ன மொழியே சுகங்காண் நிராமயமே. 109

புண்ணாய்க் கசிந்துமனம் பூணுகின்ற அன்பருக்குக்
கண்ணீர் கரை புரளக் கண்டாய் நிராமயமே. 110

முன்னால் சுருதி முறையால் எனையறிதல்
உன்னை அறிதற்கு உளவாம் நிராமயமே. 111

அண்டபகி ரண்டம் அகண்டபரி பூரணமாய்க்
கொண்டநின்னை யாரறிந்து கொண்டார் நிராமயமே. 112

உன்னையன்றி வேறொன்று உளதோவுண் டாயினதை
இன்னதுவாம் என்றே இயம்பாய் நிராமயமே. 113

நெஞ்சகத்தில் வஞ்சம் நெகிழாக்கட் டுண்டவர்க்கு
அஞ்சலென்ன நீயொன்று அறியாய் நிராமயமே. 114

துற்கவலையற்ற துரியாதீ தத்தினார்க்கு
நற்கவலை தானே நடிக்கு நிராமயமே. 115

விண்ணோடு மண்ணுமுதல் வேணதெலாம் உன்கருணைக்
கண்ணூ டிடைகிடக்கக் கண்டேன் நிராமயமே. 116

நாய்க்கு விருந்தோ நரிக்கோ புழுக்கூடு
தீக்கு விறகோ தெரியேன் நிராமயமே. 117

ஈக்கள் எறும்புமுதல் என்னதுவாம் என்னும்உடல்
பேய்கள் தமக்குப்பேறு பேறோ நிராமயமே. 118

விண்ணாதி யாவும் விளங்குவது நீயெனஎன்
கண்ணார வுங்கனவு கண்டேன் நிராமயமே. 119

இல்லாமை யில்லதென்று இதயந் தெளிவதற்கென்
வல்லாண்மை கொண்டு வருமே நிராமயமே. 120

உன்னையன்றி யாவும் உளவோஎன்று ஓதியபின்
என்னையென்னத் தில்வைத்து இசைப்பாய் நிராமயமே. 121

கானற் சலமாங் கவிபாசக் கட்டுண்டார்
தான்ஆனேன் என்னத் தகுமோ நிராமயமே. 122

காட்டுக் கொலைவேடன் கைக்குள்சிக்கும் மானெனவும்
மாட்டித் துயருறவும் மாட்டேன் நிராமயமே. 123

கல்லும் உருகு மொரு காலத்தில் என்னிதயம்
அல்லல் இறுவதில்லை ஐயா நிராமயமே. 124

காயக் கருவி கரணமுதற் காயவைத்த
நேயர் உளத்தின் நிறைவே நிராமயமே. 125

பல்லாயி ரங்கோடி பகிரண்ட மும்எவையும்
எல்லாம் உனதடிமை என்றாய் நிராமயமே. 126

எனக்கோர் நிகருமில்லை இல்லாரில்; வல் லாரில்
உனக்கோர் நிகரொருவர் உண்டோ நிராமயமே. 127

செப்பஞ் செயுஞ்செயலுட் சிந்தித்தல் வந்தித்தல்
எப்போ தெனைவிட் டியங்கும் நிராமயமே. 128

நீரால் திரள்குமிழி நேர்மைதரும் இவ்வுடலம்
யாரார்க்குக் கைகொடுத்த தையா நிராமயமே. 129

ஒன்றாய்ப் பலவாய் உருஅருவா யும்முயிராய்
நின்றவுனை யாரறிய நின்றாய் நிராமயமே. 130

பெற்றெடுத்த மாதா பிதாக்களிருந் தாலுமெனைச்
செத்தவுடன் மண்ணில் திணிப்பார் நிராமயமே. 131

எந்தம் உயிர்க்கே யமனாய் வரும்பாச
பந்தம் அகலமும் பாராய் நிராமயமே. 132

அபயம் எனைக்காப்பது அண்ணலே உன்கடமை
உபயம் இனியொருவர்க்கு உண்டோ நிராமயமே. 133

என்னை யுனதடிக்கீழ் இதைத்தாட்கொண் டாளாத
இன்னலையே எண்ணி இளைத்தேன் நிராமயமே. 134

நாமத்தை அற்ற நவநாத சித்தர்தமைக்
காமங் கரைபுரளக் காணேன் நிராமயமே. 135

தேங்காய்க்கு இளநீர் செழிப்பில் திரட்சிதரப்
பாங்காய் அருளுவதுன் பாரம் நிராமயமே. 136

கன்னலென இன்பங் கனிந்தொழுகும் உன்னடிக்கென்
தன்னாலும் என்னபலன் தாயே நிராமயமே. 137

அமையா மனமமைந்தே அருட்கடிமைப் பட்டவரை
எமனாலும் என்செயலாம் எந்தாய் நிராமயமே. 138

ஒன்றுக்கும் எட்டாது உறைந்தசுயஞ் சோதியுயர்
அண்டர்க்கும் எட்டாதென்று அறிந்தேன் நிராமயமே. 139

வஞ்சமின்றி என்னை வழிப்படுத்தி வைக்கவுனை
அஞ்சலற நானடைந்தேன் ஐயா நிராமயமே. 140

தாயனைய இன்பந் தருபேரின் பக்கடலில்
வாய்மடுக்கில் தாகம் வருமோ நிராமயமே. 141

முன்னாள் எமக்கிருந்த மூதறிவி னோர்வசனஞ்
சொன்னால் அதுவே சுகங்காண் நிராமயமே. 142

அட்டதிக்கு மண்ணின் அடங்கும் பெருவெளியில்
நட்ட நடுவிருந்த நாதா நிராமயமே. 143

தீது நலமுதலாஞ் செய்கை அகலவைத்தால்
ஈதொன்று போதுமெனக்கு எந்தாய் நிராமயமே. 144

கெர்ப்பத்தில் என்னைக் கிடத்தியமு தூட்டுமுனக்கு
ஒப்புவமை யாதென்று உரைப்பேன் நிராமயமே. 145

எவ்வுலகும் ஏவற் கிணங்காதோ நின்னருள்தான்
செய்விக்கப் பட்டோர்க்குச் செப்பாய் நிராமயமே. 146

தன்தேசம் விட்டுத் தனித்த தபோதனர்க்குச்
சென்றுழி யெல்லாஞ் சிறப்பாம் நிராமயமே. 147

சிந்தைக் கலக்கஞ் சிதறிவிடச் செய்வதுவே
எந்தத் தவத்தினும் நன்று எந்தாய் நிராமயமே. 148

தேடுவதும் நாடுவதும் சிந்தைத் திருநடனம்
ஆடுவதும் உன்னடியார்க்கு ஆசை நிராமயமே. 149

கண்ட பகலிரவுங் காணார்க்குச் சூரியனார்
என்றெழுந்தால் என்ன இயம்பாய் நிராமயமே. 150

செத்த சவமென்றுச் சின்னஞ் சிறியரென்றும்
முத்தர்க் கிருக்கு முறைகாண் நிராமயமே. 151

சட்ட ரசங்கள்முதற் சர்வவில் லங்கசுத்தி
இட்டர்க் குனதருள்வந்து எய்தும் நிராமயமே. 152

ஆகமத்துக் கெட்டா அகண்டபரி பூரணமாம்
ஏகவெளி யன்றோ இயம்பாய் நிராமயமே. 153

தேகம் உடையுமெனத் தேர்ந்த மனத்தினர்போல்
பாகபக்கு வத்தைப் படையேன் நிராமயமே. 154

நாழிஉப்பும் நாழிஅப்பும் நாழியாந் தன்மைமுப்
பாழெய்தி னார்க்கோ பகராய் நிராமயமே. 155

கொத்தோ டடிமை குடியரசு என்றனையுன்
பத்தருக் கென்றோ படைத்தாய் நிராமயமே. 156

எந்த வுயிரும் எமதுயிரென் றெண்ணியெண்ணிச்
சிந்தை தெளியவருள் செய்வாய் நிராமயமே. 157

அந்திபக லற்ற அகண்டிதா காரமுமென்
புந்தி வெளிக்குட் புகுமோ நிராமயமே. 158

உள்ளு ளுயிராய் உறைந்த உனைத்தொழவே
பள்ளி யறையேன் பகராய் நிராமயமே. 159

மேலிட்ட ஆணவத்தை மெலியவிட்ட மேலவர்க்கு
மூலத் தெழுந்த முள்ளியே நிராமயமே. 160

மூலதல் ஆறுதல் முட்டிநின்ற குண்டலியின்
பாலிற் கலித்தேகப் படுமோ நிராமயமே. 161

பஞ்சசுத்தி செய்த பழவடியார் என்னவுன்னை
அஞ்சலி செய்தே யடைந்தேன் நிராமயமே. 162

தொண்டர்பணிக் காளாய்ச் சுதைப்படுத்தி விட்டுவிடற்கு
என்றிரங்கு வாய்கருணை எந்தாய் நிராமயமே. 163

ஓவியத்தைப் போலே உறைந்த மனத்தினரென்
ஆவிக் குறுதுணையாம் ஐயா நிராமயமே. 164

விரிந்த சரியைமுதல் மேவிநின்ற மெய்ஞ்ஞானம்
கரும்புமுதற் கண்டெனவுங் கண்டேன் நிராமயமே. 165

அஞ்ஞானம் விட்டே அறந்தாங்கி வந்தவர்க்கு
மெய்ஞ்ஞானந் தானே விளங்கும் நிராமயமே. 166

தின்றுடுத்திப் பூண்டு திரியவெனப் பாவிமனச்
சண்டி புரளச் சரியோ நிராமயமே. 167

எம்மா விசைந்த இருவினையும் போகவிட்டுச்
சும்மா இருக்கச் சுகந்தான் நிராமயமே. 168

பாசவினை யெல்லாம் பயந்திடமெய்ஞ் ஞானவைவாள்
வீசவருள் தானே விளக்காய் நிராமயமே. 169

தன்னி லிருந்து தலைவன் தனியறியாது
என்னையறிந் தென்னபலன் எந்தாய் நிராமயமே. 170

உன்னைமறப் பிக்க உருவெடுத்த ஆணவப்பேய்
தன்னைமறப் பிக்கத் தகாதோ நிராமயமே. 171

இல்லாத மாயை எனைத் தொடரா வண்ணமொரு
சொல்லருள் செய்யென் துரையே நிராமயமே. 172

பொல்லாளன் னெஞ்சம் புழுங்க வருகவலை
சொல்லுக் கடங்காச் சுகங்காண் நிராமயமே. 173

அலையும் மனத்தை அகத்தடக்கும் அன்பருளம்
உலையின் இடுமெழுகுக்கு ஒப்பாம் நிராமயமே. 174

எழுகடலும் ஓர்கடுகின் இடையிருத்தக் கற்றாலும்
வழுவும் மனத்தினிற்கு வாயேன் நிராமயமே. 175

போருக்கே வந்தெதிர்த்த போக்கிரிபோல் என்னிதயம்
தீரம்பே சுவதென்ன செய்வேன் நிராமயமே. 176

சோம்பே றிகள்போல் சுருண்ட மனத்தினர்க்குக்
காம விகாரங் கசப்பாம் நிராமயமே. 177

ஒழியாப் பிரபஞ்சத்து உறவை மறவார்க்குக்
கழியிற் படுநாரைக் கதிகாண் நிராமயமே. 178

புந்தி இதம்அகிதப் பூட்டுவிட்ட போகர் தமக்கு
அந்தி பகலறுமென் ஐயா நிராமயமே. 179

நானே நெருப்பாறு நடக்கும்மயிர்ப் பாலமும்யான்
தானே யெனுமறிவைத் தாராய் நிராமயமே. 180

மின்னனைய பொய்யுடலை மெய்யென்ற பொய்யரினி
என்ன கதிபெறுவார் எந்தாய் நிராமயமே. 181

கருவிப் பெருவெளியிற் கருத்தைச் செலுத்தாருக்கு
அருவி சொரியவருள் ஆங்காண் நிராமயமே. 182

தேயாப்பஞ் சாட்சரவாள் தீட்டுந் திறத்தினார்க்குக்
காயா புரிக்கோட்டை களங்காண் நிராமயமே. 183

பூமிப் பரப்பைவலம் போய்வரினும் பாவிகளைக்
காம வினையகலக் காணேன் நிராமயமே. 184

கோணற் கரும்பிரசங் கோணாத கொள்கையென்றன்
ஆணவத்தில் உன்தன் அறிவாம் நிராமயமே. 185

கானலைநேர் பொய்யுடலைக் கல்லாக் கண்டவர்க்கு
நாணாமை நின்றே நடிக்கும் நிராமயமே. 186

செலக்குமிழிபோன்ற வென்றன் சிற்றுடற்கும் இத்தனையோ
கலக்கமதை வைத்தாயென் கண்ணே நிராமயமே. 187

பொய்வாழ்வை நம்பும் புலையர் தமக்குனது
மெய்வாழ்வு வந்து விடுமோ நிராமயமே. 188

கனக்கும் இருவினையாங் காவடியைத் தூக்குவதற்கு
எனக்குமுடி யாதினிமேல் எந்தாய் நிராமயமே. 189

துறவின்றிச் செய்வினையின் தொகைப்பலனே தென்பவர்க்கு
நரகசொர்க்க மென்றே நவின்றாய் நிராமயமே. 190

காதொடுகண் வாய்மூக்குங் கண்டமெய்யோ டையறிவும்
வாதாடு தற்கோ வளர்த்தேன் நிராமயமே. 191

மாதாவும் பிதாவும் வருந்தி வருந்திவைத்த
பேர்தனையும் பார்க்கிற் பிழைகாண் நிராமயமே. 192

செல்லும் அளவுஞ் செலுத்துகின்ற சிந்தையினோர்க்கு
அல்லும் பகலும்அறும் ஐயா நிராமயமே. 193

வேதச் சுமையதனை வீம்புக் கெடுத்தவுடல்
மாதவத்திற் கெங்கே வளையும் நிராமயமே. 194

நரம்பென்பு தோலால் நடிக்கின்ற பாவைதனிற்
குறும்புமுத லெல்லாங் குடிகாண் நிராமயமே. 195

தூலத்துள் இச்சை தொலைத்தோரிஞ் ஞாலமுதல்
ஆலத்துக்கு ஒப்பென்று அறைந்தாய் நிராமயமே. 196

வானேற நூலேணி வைத்தாற்போல் உன்னடிபேர்ல்
நானேறு வேனென்ற நாட்டம் நிராமயமே. 197

மைந்தர்களைப் பெற்று மறலிக்களித் தாரெனவுஞ்
சிந்தைநெருப் பாயெரியச் செய்தாய் நிராமயமே. 198

நாலுதிக்கி னும்விசயம் நாட்டுமன்னர் கோட்டையெல்லாம்
பாலர்மணற் சோற்றின் படியாம் நிராமயமே. 199

பாட்டைப் படித்ததனாற் பகர்ஞான வானென்பது
ஏட்டுச் சுரைக்காய்க் கியல்பாம் நிராமயமே. 200

நின்னரு ளன்றி நிறைவுகுறைவு என்பாருக்கு
என்ன கதிமுடிவில் எந்தாய் நிராமயமே. 201

தேகாபி மானத் திரைகடந்த தேசிகர்க்கு
மோகங்க ளெங்கே முயலும் நிராமயமே. 202

சித்தந் தெளிந்த சிவஞா னியருலகப்
பித்த ருறவைப் பிடியார் நிராமயமே. 203

புத்தி தெளியாப் புலத்தோர் தமைத்தவத்துஉன்
மத்த மனுசரென மாட்டேன் நிராமயமே. 204

தொல்லைப் பெருமல்லல் தொலைத்தாருக் கேதொன்றுஞ்
சொல்லத்தா னுண்டோதான் சொல்லாய் நிராமயமே. 205

போக்கும் வரத்துமெல்லாம் பொய்யென்ற புண்ணியருக்கு
நீக்கும் அருளுண்டோ நிகழ்த்தாய் நிராமயமே. 206

எத்தனையோ கற்றும் இதயந்தெளி யாதிருந்த
பித்தருடன் நேசம் பிழைகாண் நிராமயமே. 207

வஞ்சப்ர பஞ்ச மயக்கொழிந்தா லல்லாதுன்
அஞ்சலெனும் பேரருளில் ஆகேன் நிராமயமே. 208

அண்டும் இருவினைப்பேய் அண்டா தடிப்பவர்க்குத்
தொண்டுசெய்வார்க் கன்றோ சுகங்காண் நிராமயமே. 209

என்னெஞ்சந் தானே எனைக்கெடுக்கும் இன்னுமெனைச்
சின்னப் படுத்திலென்ன செய்வேன் நிராமயமே. 210

மூடும் எனதறிவே மூடி யிருந்தாலுன்
ஆடுமறி வெங்கேநின் றாடும் நிராமயமே. 211

ஓடியே யுள்ளமட்டும் ஓடியித யம்மயங்கி
வாடியே நின்சமுகம் வந்தேன் நிராமயமே. 212

முட்டாளெனும்பட்டம் முழுதுமெனக் கீயவுனக்கு
இட்டாமிருந்தா லியம்பாய் நிராமயமே. 213

ஆலமுறுந் தூலம் அநித்தியமென் போர்க்காசை
மாலெங்கே நின்று வருங்காண் நிராமயமே. 214

ஆர்ப்புக் குயிரான அண்டபக் ரண்டமுமாந்
தாற்பரிபஞ் சொல்லத் தகுமோ நிராமயமே. 215

எண்டிசையுந் தானா யியங்கு முனைத்தொழுதற்கு
அண்ட சராசரம்நின் றாடும் நிராமயமே. 216

காற்றாடி போலக் கருத்துவந்து தேடியுனை
அற்றா தயர்ந்தேனென் ஐயா நிராமயமே. 217

எல்லாம் படித்துநடப் பெய்தினஇன் புற்றனர்மற்று
அல்லாரை யாரென் றறியேன் நிராமயமே. 218

அன்னை சுற்ற மெல்லாம் அகலவிட்ட அன்பர் தமக்கு
இன்னல் அகலுமற் றெவர்க்காம் நிராமயமே. 219

சாருதல்நீ யன்றியில்லைச் சத்தியம் என்மனத்தை
ஆராய வேண்டாமென் அரசே நிராமயமே. 220

தத்தும் மனத்தினள்க்குத் தாரபலன் போகிறதை
எத்தனையென் றேயுரைப்ப தெந்தாய் நிராமயமே. 221

கொல்லும் கொலைகஞ்சா கொலைஞனெனும் பாவிமனத்
தொல்வினையைத் தீர்க்கச் சுகங்காண் நிராமயமே. 222

உன்னையன்றி யென்னை ஒதுக்கிவைப்ப தெந்தநெறி
அன்னையின்றிச் சேய்தானுண் டாமோ நிராமயமே. 223

பொங்கு கருணைப் புறஞ்சுழித்தாற் கள்ளமன
வங்கமங்கே ஓடி வருங்காண் நிராமயமே. 224

கல்லாத கல்வியெல்லாங் கற்றுமுயர் ஞானகலை
இல்லார்க்கும் இன்பநிலை ஏதோ நிராமயமே. 225

விளக்குஞ் சுடரினையும் வேறுவே றெண்ணார்க்கு
உழக்குள் அப்பும் உப்பெனவும் ஒன்றாம் நிராமயமே. 226

சார்ந்தோரைத் தூடணிக்குந் தப்பிலிக ளைப்புவியில்
ஏன்தான் படைத்ததுதான் எந்தாய் நிராமயமே. 227

புத்தி யகங்காரம் பூணும் மனம் இறக்கில்
சித்தம் மகத்துவத்தைச் சேரும் நிராமயமே. 228

நானோ திருவடியை நாடுவதுந் தேடுவதும்
ஆனா லதுபெரிதாம் ஐயா நிராமயமே. 229

காற்றுத் துருத்தியைந்து கள்ளர் புலைக்குடிலே
சோற்றாலெடுத்த சுவர்காண் நிராமயமே. 230

மன்னுங் கலைஞான மார்க்கமறிந் தோர்க்குமுறும்
அந்நியங் ளேதும் அறியார் நிராமயமே. 231

சென்னிக் கிசையச் சிவராச யோகநிலை
வன்ன மலர்ப்பதத்தை வைத்தேன் நிராமயமே. 232

சென்ம மெடுத்தாற் செகமாயை விட்டொழிந்து
நன்மை பெறுதல் நயங்காண் நிராமயமே. 233

பாச மறவார் பரம பதத்தினர் போற்
பேசுசிலர் கூடவும்நான் பேசேன் நிராமயமே. 234

நேராம் வழிகாட்டி நிச்சயத்தைச் சொல்லவெனக்கு
ஆருன்னை யன்றி யரசே நிராமயமே. 235

வாசகத்தின் ஞானமெல்லாம் வந்ததுபோற் பேசியையோ
மோசப் படவு முறையோ நிராமயமே. 236

பெட்டி நிறையப் பெருக்கிவைத்த பெட்டகத்தாற்
குட்டிச் சுவரென்றோ குறித்தாய் நிராமயமே. 237

மனம்பாச மற்றுநிற்க வாயாலுனைப் புகழும்
இனங்கள் முழுமெனக் கெதிர்காண் நிராமயமே. 238

வாசனையைப் போக்கும் வரமுண்டென வொருசொல்
நீசருக்கும் உண்டோ நிகழ்த்தாய் நிராமயமே. 239

அன்னை பிதாவும் அணைந்தகுற்ற ஆக்கினைக்கா
என்னைப் பிறக்கவைத்தாய் எந்தாய் நிராமயமே. 240

மாதா பிதாவும் மயல்தீர்ந்த வாற்றினுக்கு
வாதோ எனைப்பிறக்க வைத்தாய் நிராமயமே. 241

பின்னை யொருவர்செய்யும் பிழைக்குப் பரிகாரம்
என்னைத் தெருவில்விட்டது ஏன்காண் நிராமயமே. 242

தொண்டாசை கொண்டோர் துயிலார் முகத்தனைக்க
கண்துயிலார் அன்பரெனக் கண்டாய் நிராமயமே. 243

ஈனத்துக் கேற்றவுடல் என்னதென்ன தென்பதுவும்
ஞானத்துக் கேற்றவர்க்கு நன்றோ நிராமயமே. 244

ஆசைக் கடலின் அலைவாய்ப்பட் டேயலைந்து
மோசப் படுதல் முறையோ நிராமயமே. 245

எட்டிரண்டு மின்னதென்றும் ஏழையறி யாதபடி
வெட்டவெளிப் பேதையென விட்டாய் நிராமயமே. 246

பித்தம் பிடித்தபிர பஞ்சத்தார் போலன்றோ
முத்தர்க் கிருக்கு முறைகாண் நிராமயமே. 247

காமக் குரோதமத மாச்சரியக் காரருக்கே
ஆமோ திருக்கருணை ஐயா நிராமயமே. 248

செகத்து மயமாயுந் தேசோ மயமாயும்
அகத்தூ டணுவான தன்றோ நிராமயமே. 249

கேசாதி பாதமுதல் கெர்ப்பக் குவட்டில்வைத்த
ஈசா வுனக்கே யியல்பாம் நிராமயமே. 250

எக்கலைக்குஞ் சொக்காது இயங்கும் உனைத்தொழுதல்
நிற்கவலைக் கெல்லாம் நிலைகாண் நிராமயமே. 251

அகத்து விழியுமறி தற்கரி தாயவுன்பால்
முகத்து விழியோர் முயலும் நிராமயமே. 252

திக்கு விசயஞ் சிவராச யோகியார்க்காந்
துக்க வலையோர்க்குத் துறையோ நிராமயமே. 253

வாழுகிறோ மென்றே வலக்காரம் பேசிலையோ
ஏழாம் நரகுக் கிரைகாண் நிராமயமே. 254

ஈடெனக் காரென்றே எதிர்பேசும் மட்டியுடல்
நீடுழி கால நிலையோ நிராமயமே. 255

பாகாய்க் கசிந்துருகும் பரம பதத்தினர்க்குத்
தேகாபி மானமெல்லாந் தீயும் நிராமயமே. 256

ஆவியுடல் பொருளுமடங் கக்கொள்ளை கொண்டுமெனைப்
பாவியென்று தள்ளப் படுமோ. 257

அளந்தாலும் இந்தவுல கவ்வளவும் எவ்வளவும்
உளந்தெளியா ருக்கருள்தான் உண்டோ நிராமயமே. 258

சொன்ன படிக்கிணங்காத் துட்டன்யா னாகிலுமுன்
வன்ன மலர்ப்பதத்தை வைப்பாய் நிராமயமே. 259

பாத முடியின் பரமார்த்த மானவுனக்கு
ஏது வடிவென்றே யிசைப்பேன் நிராமயமே. 260

முன்னா ளிருந்த முறைபோலும் மூர்த்திகராய்
எந்நாள் வருவதெனக் கெந்தாய் நிராமயமே. 261

மடக்கெடுத்து வீசி மணல்குடித்த நீரதனால்
கடற்குறை யுண்டொவென் கண்ணே நிராமயமே. 262

தானேதா னெவ்வுயிர்க்குந் தற்பரமாய் நிற்பதுடல்
ஊனாகிக் கொண்ட வுளவே நிராமயமே. 263

பாசம் ஒழித்துநெறி பற்றிநின்ற வித்தகர்க்கு
வீசுந் திருக்கருணை வீசும் நிராமயமே. 264

கற்றகல்வி யற்றுக் கன்மமுதல் பாசமுற்று
உத்தமர்க்குச் சித்தம் ஒடுங்கும் நிராமயமே. 265

சித்தம் நிரஞ்சனத்திற் சென்றிருக்க வல்லார்க்குப்
புத்தி நிருவிகற்பம் பூணும் நிராமயமே. 267

கற்பூர வுண்டை கரைவதுபோ லக்கரையுந்
தற்போத கக்கருணை தந்தாள் நிராமயமே. 268

தேனோடு பாகாய்த் திரண்டமுத மென்னவுமென்
ஊனோ டுடலோ டுறைந்தாய் நிராமயமே. 269

கண்டித்த எள்ளுங் கரும்பும்போ லும்மெனது
சண்டித்தன மெய்யதற்குச் சார்நீ நிராமயமே. 270

ஐந்துபுல வேடருக்கே யாளாக்கி னாலுனக்கு
வந்தபல னென்னோ வழுத்தாய் நிராமயமே. 271

ஓயாக் கவலைக் குரித்தாம் புழுக்குரம்பை
ஆயே னெனவகுத்த தையா நிராமயமே. 272

ஐவர்க்கு மென்னை யடங்கச்சிறை யாக்குவது
உய்யுங் கருணைக் குளதோ நிராமயமே. 273

ஊசிதனைக் காந்தம் உகந்தணைக்கு மாறெனவே
பாசத்தைப் போக்கியருள் பாராய் நிராமயமே. 274

உள்ளந் தெளிந்தே யொளியாய்ப் பிறங்கினர்க்குக்
கள்ளந்தெளி யக்கனவு கண்டேன் நிராமயமே. 275

அற்புதமே நிர்க்குணமே யன்பர்க் கருள்புரியுஞ்
சற்குருவே யெங்கள் சலுவே நிராமயமே. 276

அழியா அருள்வாரி யள்ளியடி யேன்றனக்கா
மழையாய்ப் பொழிந்தாய்நீ வாழி நிராமயமே. 277

முத்தரும் வாழியெங்கள் முன்னோரும் வாழியருள்
வித்தகரும் வாழியெங்கும் விளங்கும் நிராமயமே. 278

ஒழியா அருள்வாழி வுத்தமர்க ளும்வாழி
அழியாப் பதிவாழி ஐயா நிராமயமே. 279

குன்றாக் குணங்குடிகொண் டோராமெம் வித்தகரும்
எந்நாளும் வாழியரு ளெந்தாய் நிராமயமே. 280

## 16. பராபரக்கண்ணி

இறைவனின் பல்வேறு இயல்புகள் பற்றியும் ஆன்மா பற்றியும் உலகம் பற்றியும் மாயை, வினை, ஆணவம், கருவி, கரணங்கள், ஆசை, உடல் முதலியனபற்றி இப்பகுதியில் பாடுகின்றார்.

எல்லாமாயிருக்கும் இறைவனைக் குறித்து நூறு கண்ணிகள் இப்பகுதியில் உள்ளது. எல்லாக் கண்ணியும் பராபரமே என முடிகிறது.

"அண்டபுவனமென்றும் ஆடுதிருக் கூத்தினையான் கண்டு மகிழ்ந்திடவே காட்டாய் பராபரமே" என்கிறார் குணங்குடியார்.

### பராபரக்கண்ணி

அண்ட புவனமென்றும் ஆடுதிருக் கூத்தினையான்
கண்டு மகிழ்ந்திடவே காட்டாய் பராபரமே. 1

ஆதியா யாண்டவனா யஃததுவாய் நின்றபெருஞ்
சோதியாய் நின்மலமாய்ச் சூழ்ந்தான் பராபரமே. 2

வேத மறைப்பொருளை வேதாந்தத் துட்கருவை
ஓதி யுனையறிந்தா ருண்டோ பராபரமே. 3

அண்ட புவனமுடன் ஆகாச மென்றுசும்பிக்
கொண்டாடும் மெய்ஞ்ஞானக் கூத்தே பராபரமே. 4

நாவாற் புகழ்க்கெட்டா நாயகனே நாதாந்தம்
பூவாய் மலர்ந்திருக்கப் பூத்தாய் பராபரமே. 5

பேராற் பெரிய பெரும்பொருளே பேதைதனக்கு
ஆரா ரிருந்தும்பல னாமோ பராபரமே. 6

மாராய நற்கருணை மாவருள்சித் தித்திடவே
பாராயே ஐயா பகராய் பராபரமே. 7

ஆனாலும் உன்பாதம் யாசித் திருப்பதற்குத்
தானா யிரங்கியருற் தாராய் பராபரமே. 8

நாதாந்த மூல நடுவீட்டுக் குள்ளிருக்கும்
மாதவத்தோர்க் கான மருவே பராபரமே. 9

உடலுக் குயிரேயென் உள்ளமே உன்பதத்தைக்
கடலுமலை யுந்திரிந்துங் காணேன் பராபரமே. 10

மாந்தரித்துக் கெட்டா மறைபொருளே மன்னுயிரே
சேர்ந்தவெழு தோற்றத்தின் சித்தே பராபரமே. 11

தனியேனுக் காதரவு தாரணியி லில்லாமல்
அனியாய மாவதுனக் கழகோ பராபரமே. 12

ஓடித் திரிந்தலைந்தும் உன்பாதங் காணாமல்
வாடிக் கலங்குகிறேன் வாராய் பராபரமே. 13

தூராதி தூரந் தொலைத்துமதில் உன்பாதம்
பாராத பாவத்தாற் பயந்தேன் பராபரமே. 14

தேடக் கிடையாத திரவியமே தேன்கடலே
ஈடுனக்கும் உண்டோ இறையே பராபரமே. 15

அரிய பெரும்பொருளே அன்பா யொருவார்த்தை
பரிபூ ரணமாய்ப் பகராய் பராபரமே. 16

ஐயோ எனக்குதவும் ஆதரவை விட்டுவிட்டுத்
தையலரைத் தேடித் தவித்தேன் பராபரமே. 17

எத்திசையும் நோக்கில் இசையாத் திருக்கூத்தாய்
வித்தைவிளை யாட்டு விளைப்பாய் பராபரமே. 18

எப்பொழுதும் உன்பதத்தில் என்கருத்தே எய்துதலுக்கு
இப்பொழுதே கைப்பிடித்தாள் இறையே பராபரமே. 19

வாதுக்கு அடரவரும் வம்பரைப்போல் தோசிமனம்
ஏதுக் கடர்வதுயான் எளியேன் பராபரமே. 20

கண்ணே மனோன்மணியே கண்பார்வைக் கெட்டாத
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. 21

அடக்கவரி தாமாய ஐம்பொறியைக் கட்டிப்
படிக்கப் படிப்பெனக்குப் பகராய் பராபரமே. 22

எத்தவங்கள் செய்தாலும் இன்பமுட னுன்பதத்தை
முத்த ரொருபோது முற்றார் பராபரமே. 23

சொல்லுக் கிணங்காத சூத்திரத்தைப் பார்த்திருக்க
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே. 24

நாற்றச் சடலமதை நம்பார் முகர்ந்திருக்க
பூத்து மலர்ந்திருக்கும் பூவே பராபரமே. 25

சோற்றுப் பொதியைச் சுமந்தே திரிந்தலைந்தே
ஆற்றாமல் நின்றுகளைத் தழுதேன் பராபரமே. 26

காற்றுத் துருத்திதனைக் கல்லா யணைந்திருக்கச்
சூத்திரமாய் நின்றாய் சுழியே பராபரமே. 27

கோலத் திருவடிவு கோதையர்கள் ஆசையினால்
ஆலைக் கரும்புபோல் ஆனேன் பராபரமே. 28

கேளாயோ என்கவலை கேட்டிரங்கி யேயென்னை
ஆளாயோ ஐயாபாழ் ஆனேன் பராபரமே. 29

எத்தனைதான் குற்றம் எதிர்த்தடிமை செய்தாலும்
அத்தனையும் நீபொறுப்ப தழகே பராபரமே. 30

அல்லல் வினையால் அறிவுகெட்ட ஆன்மாவாய்
நெல்லும் பதருமென நின்றேன் பராபரமே. 31

சொல்லரிய ஞானச் சுடரே ஒருவார்த்தைச்
செல்வம் பொழிந்திடநீ செப்பாய் பராபரமே. 32

நித்தம் உனைத்தொழா நிர்மூட னாயிருக்கும்
பித்தனாய் ஏன்காண் பிறந்தேன் பராபரமே. 33

உற்றார்க ளாலும் உறவின்முறை யோராலும்
பெற்றார்க ளாலுமுனைப் பிரிந்தேன் பராபரமே. 34

ஏழை முகம்பார்த் தெளியேனை யெப்பொழுதும்
ஆழாம லாண்டருளென் அழகே பராபரமே. 35

பாவ வுடலெடுத்துப் பாதகனா யான்பிறந்துள்
ஆவி கெடுவதுனக் கழகோ பராபரமே. 36

வாராயோ என்னிடத்தில் வந்தொருக்கா லென்றன்முகம்
பாராயோ சற்றே பகராய் பராபரமே. 37

பார்க்கப் பலவிதமாய்ப் பல்லுயிருக் குள்ளிருந்தும்
ஆர்க்குந் தெரியாம லானாய் பராபரமே. 38

ஆனாலும் பொல்லா தரும்பாவி யாகவுடல்
ஏனோ எடுத்தேனான் எந்தாய் பராபரமே. 39

கர்ப்பூர தீபக் கனலொளிபோற் காட்சிதர
முப்பாழும் பாழாய் முடித்தாள் பராபரமே. 40

கரும்பே நவரசமே கடலமுதே கண்மணிக்குள்
அரும்பொருளாய் நின்ற அழகே பராபரமே. 41

ஏழை அடியேனை யெப்படியுங் கைப்பிடித்து
ஆளா திருப்பதுனக் கழகோ பராபரமே. 42

ஆளாயோ ஐயா அடியேன் பிதற்றுதலைக்
கேளாயோ என்றன் கெதியே பராபரமே. 43

ஊனாகி யுள்ளுயிரில் ஒட்டாத அக்கருவாய்த்
தானாகி நின்ற தனுவே பராபரமே. 44

பொன்னால் மயக்கெடுத்துப் புத்திகெட்டு நானெனவே
பன்னாளும் நின்றாற் பலனோ பராபரமே. 45

இல்லல்லா கூவென் றெனைமறந்து கொண்டுனையே
சொல்லவருள் மெய்ஞ்ஞானச் சுடரே பராபரமே. 46

ஐயோ அடிமைதனக் காரிருந்து மென்னபலன்
கையாற் கவிந்தனைக்கக் காணேன் பராபரமே. 47

ஆனாலும் ஏழை யடியேனுக் காதரவாய்த்
தானா யிரங்கியருள் தாராய் பராபரமே. 48

தூங்கி யிருந்து தொழுவோர் முகம்பார்க்கும்
வேங்கைப் புலியாக்கு விப்பாய் பராபரமே. 49

கண்ணே கருத்தேயென் கண்மணியே கண்ணிறைந்த
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. 50

காசாசை கொண்டு கலங்கியே கெட்டலைந்த
தோசியாய் நின்றேன் துணையே பராபரமே. 51

ஐயோ எனதுதுயர் ஆரிடத்திற் சொல்லிநின்று
கையெடுக்கப் போறெனென் கண்ணே பராபரமே. 52

என்னதான் செய்திடுவேன் என்விதியைச் சொல்லியழ
உன்னையன்றி வேறெனக்கும் உண்டோ பராபரமே. 53

முகக்கண் விழியொளியே முக்திதரும் உத்தமனே
அகக்கண் திறந்தோர்க் கறிவே பராபரமே. 54

முப்பாழும் பாழாய்நன் முத்திபெற் றிருக்கவெனைக்
கைப்பிடிப்ப தெப்போதென் கண்ணே பராபரமே. 55

உல்லாச மாக வொளிதான் பரந்திடவுன்
செல்வம் பொழிந்திடவே செப்பாய் பராபரமே. 56

மாச்சரியஞ் செய்யு மதமொடுங்கி முத்திபெறக்
காட்சி தருவதெப்போ கண்ணே பராபரமே. 57

சண்டாள னென்றென்னைச் சகலருரை யிட்டாலுங்
கொண்டணைப்ப துன்பார குருவே பராபரமே. 58

முத்திதரு மெய்ஞ்ஞான முச்சுடரைக் காணாமற்
செத்திறந்து போனாலென் செய்வேன் பராபரமே. 59

தன்னை யறிந்துணரத் தயையா யொருவார்த்தை
இன்னபடி யென்றே யியம்பாய் பராபரமே. 60

களியேகண் டுன்னுடைய கைப்பிடிப்போ மென்றுசற்றே
எளியேன் முகம்பார்த் திரங்காய் பராபரமே. 61

பாசவினை போக்கிப் பலவினையைப் பாழாக்கி
ஆசைவைப்போர் தங்கள் அருளே பராபரமே. 62

ஆளவரு வோமென் றன்பா யொருவார்த்தை
ஏழை முகம்பார்த் தியம்பாய் பராபரமே. 63

நிலைகாட்டுங் காயம் நிசமென்று நிச்சயித்த
புலையாட்டல் என்றுதள்ளப் போமோ பரரபரமே. 64

பார்க்கப் பலவிதமாய்ப் பலசமய மாகவொரு
வாக்கை வெளிப்படுத்தி வைப்பாய் பராபரமே. 65

ஆனால் எளியேனுக் காதரவே யில்லாமற்
போனால் உனக்கழகோ புகலாய் பராபரமே. 66

நீச்சாப் பெருகிவர நிரம்புமா னந்தவெள்ளம்
பாய்ச்சாயோ ஐயா பகராய் பராபரமே. 67

எத்தனையோ கெஞ்சும் எளியேன் தனக்குதவி
உற்றா ருனைத்தவிர வுண்டோ பராபரமே. 68

கள்ள மிடுங்கருவி கரணமதைச் சுட்டோர்கள்
தன்னுக்குள் தானாம் தனுவே பராபரமே. 69

காயாமற் காய்த்துக் கனிந்து சொரிவதற்கு
மாயமாய்ப் பூத்த மலரே பராபரமே. 70

உயிருக் குயிரான வுட்கருவுக் குள்அமைவே
தயையா யெனக்குதவி தந்தாள் பராபரமே. 71

அறிவை யறிவோருக் கானந்த வெள்ளமதாய்க்
கரையறவே பொங்குங் கடலே பராபரமே. 72

ம்றைப்பொருளைக் காணா மடையவனின் என்றியம்பிச்
சிரிப்பார் சிரிக்கிலென்ன செய்வேன் பராபரமே. 73

குறிவிளக்குங் குருவடியைக் கொள்கையுடன் போற்றாமல்
அறிவு மயங்குகின்றேன் ஐயா பராபரமே. 74

வல்லாரைக் கெஞ்சி வலியாரைக் கால்பிடித்திட்டு
இல்லாரை நம்பி இருந்தேன் பராபரமே. 75

சொல்லும் பதர்தூற்றிச் சூத்திரத்தைப் பாராமல்
கல்லும்நெல்லும் போலக் கலந்தேன் பராபரமே. 76

செகமுழுதுஞ் சுற்றியுமுன் சீர்பாதங் காணாமல்
திகைத்தழுதேன் நீயுந் தெரிவாய் பராபரமே. 77

கள்ளக் கருத்துகளைக் கட்டோ டறுத்தவருக்கு
உள்ளிருக்கும் மெய்ஞ்ஞான ஒளியே பராபரமே. 78

கும்பிக் கிரைவிரும்பிக் கொடுப்பார் தமைத்தேடிச்
சம்பித் திரிந்தே சலித்தேன் பராபரமே. 79

காண்கலா ஆசை கடித்தாலென் கால்முகமும்
வீங்காதோ ஐயா விதியே பராபரமே. 80

தூங்காமல் தூங்கித் தொழுதிருக்க என்னுடைய
ஆங்கார மெல்லாம் அகற்றாய் பராபரமே. 81

தேனமிர்தம் ஊறத் திவ்யமது ரஞ்சொரியத்
தானா யொருவார்த்தை தாராய் பராபரமே. 82

சாத்திரங்கள் ஏதுஞ் சதுர்மறையோர்க் கெட்டாத
சூத்திரமாய் நின்ற சுழியே பராபரமே. 83

வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைப்
பார்த்தோர்க ளெய்தும் பலனே பராபரமே. 84

சாதி சனத்துடனே சார்ந்திருந்து பட்டதுயர்
போதும்போ தும்போதும் போதும் பராபரமே. 85

உற்றாரை நம்பியிருந் தொருபலனுங் காணமற்
செத்தா லெனக்கத்துதான் சின்னம் பராபரமே. 86

செல்லும் முறையறிந்து சித்திவழி காணாமற்
கல்லுமாம் போலானேன் கண்ணே பராபரமே. 87

ஓகோ வுனையறிந்தும் ஒருபலனுங் காணாமற்
போகாமற் காத்தருளென் புணையே பராபரமே. 88

உன்னை யறிவதற்கோ வுடலெடுத்தே னென்றென்னைச்
சின்னஞ்சொல் வாங்கட்கென் செய்வேன் பராபரமே. 89

தெரியாத இன்பத் தெளிவாய் அருள்மயமாய்ப்
பரிபூ ரணமுடனே பாராய் பராபரமே. 90

ஆச்சி தனைத்தேடி யாசைவைத் தலையாமற்
பூச்சியாய் ஏனோ பிறந்தேன் பராபரமே. 91

காசை விரும்பிக் கலங்கிநின்று உன்பாத
ஆசை விரும்பாது அலைந்தேன் பராபரமே. 92

சாகாமற் செய்துதயச் சச்சிதா னந்தமயப்
பாகாமா யாகமுகம் பாராய் பராபரமே. 93

வாராயோ ஐயா வந்திரங்கிக் கொண்டனைக்கப்
பாராயோ சற்றே பகராய் பராபரமே. 94

ஆசைவழிப் பாசநெறி யத்தனையுங் கட்டறுத்து
வாசிதனி லேற்றியெனை வைத்தாள் பராபரமே. 95

வேசந்தனைப்போட்டு வேதாந்த சாத்திரத்தைக்
காசு பணம்பறிக்கக் கற்றேன் பராபரமே. 96

செய்ததெல்லாங் குற்றஞ் சிறியேன் தனக்கிரங்கிக்
கைதூக்கிக் கொண்டருளென் கண்ணே பராபரமே. 97

மாளா மயக்கறுத்து மனக்கறையைத் தான்கழுவி
ஆளாக்கிக் கொள்வாயென் ஐயா பராபரமே. 98

நாட்டமங்கு மிங்கிருக்க நாதாந்த முத்திநிலை
காட்டா யணைந்தருளென் கண்ணே பராபரமே. 99

சிந்தை தனைத்தெளிந்து சித்திமுத்தி பெற்றுயர்ந்த
உன்றன் குணங்குடியார்க் குயிரே பராபரமே. 100

## 17. றகுமான் கண்ணி

றகுமான் என்பது இறைத்திரு நாமங்களுள் ஒன்றாகும். அருளாளன் என்னும் பொருள் கொண்டது. இதில் 100 கண்ணிகள் உள்ளன.

"பார்க்கப் பலவிதமாய்ப் பல்க அண்டந் தன்னையடை காக்குந் திருக்கருணைக் கண்ணே றகுமானே" எனக்கூறி இறை ஞானச் சித்தர் குணங்குடியார் தொடங்குவதில் இறைவனின் அருட்பண்பு விளக்கமுறுகிறது.

நூறு கண்ணிகளும் 'கண்ணே றகுமானே' என முடிகின்றன.

இறைவனைக் காதல் நெறியில் வழிபடுவது நான்கு பாடல்களில் அமைந்துள்ளது.

### றகுமான் கண்ணி

பார்க்கப் பலவிதமாய்ப் பல்கஅண்டந் தன்னையடை
காக்குந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. 1

ஈறும் முதலுமற்றே இயங்குகின்ற முச்சுடராய்க்
காரணிக்கும் பூரணமே கண்ணே றகுமானே. 2

பாணிக்க வொண்ணாப் பதம்பெறுதற் கென்சிரசை
காணிக்கை வைத்தேனென் கண்ணே றகுமானே. 3

பொய்யடிமை யாயினுமுன் பொன்னடிக்கா ளாக்கியெனைக்
கையைக் கொடுத்தணைத்தாள் கண்ணே றகுமானே. 4

பெண்டுபிள்ளை யென்றே பிதற்றுதல்பொய் யல்லாமற்
கண்டபல னொன்றுமில்லை கண்ணே றகுமானே. 5

பேதலித்தே னுன்னடிமை பேதகமில் லாமலுனைக்
காதலித்தே னாண்டருள்செய் கண்ணே றகுமானே. 6

ஏகப் பெருவெளியில் இருட்கடலிற் கம்பமற்ற
காகமது வானேன் கண்ணே றகுமானே. 7

ஐயோ வுனதருளில் ஆசையற்ற பாவியென்னைக்
கையைநெகிழ்த் தாதுஅருளென் கண்ணே றகுமானே. 8

போதமய மாகவெங்கும் பூரணித்த காரணத்தைக்
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே. 9

எல்லார்க் கமுதளிக்கும் இயல்புபோல் தேரைகட்குங்
கல்லுள் அமுதளிக்குங் கண்ணே றகுமானே. 10

சொல்லுட் பதர்நீக்கிச் சும்மா விருந்தருளைக்
கல்லாருங் கல்லேயென் கண்ணே றகுமானே. 11

வெட்டவெறும் பாவியென்ன வீணிலெனைத் தள்ளாமற்
கட்டியணைத் தாண்டருள்செய் கண்ணே றகுமானே. 12

யானைரதம் ஏறும் அரசர்பெரு வாழ்வுமுதற்
கானற் சலமன்றோ கண்ணே றகுமானே. 13

எவருடைமை யும்மெடுத்திட் டென்னுடைமை யென்னார்க்குக்
கபறில் வருந்துணையே கண்ணே றகுமானே. 14

ஊனெடுத்த நாள்முதலா வுபயோக மற்றயான்
கானில்நில வானேனென் கண்ணே றகுமானே. 15

வாசிதனி லேறி மனமகிழ்ந்து வாழாமற்
காசாசை கொண்டேனென் கண்ணே றகுமானே. 16

வீடோஎன் தேகம் விழுமிடந்தான் வீதிகளோ
காடோ செடியோஎன் கண்ணே றகுமானே. 17

பாக முடன்வளர்த்த பாழுடல்தான் நாய்க்கிரையோ
காகங் களுக்கிரையோ கண்ணே றகுமானே. 18

ஏங்காமல் அங்குமிங்கும் ஏகாந்த மாகவுனைக்
காண்கவந்து பாங்கருள்செய் கண்ணே றகுமானே. 19

தொண்டுசெய்ய நின்ற துறவியர்க ளெயருளைக்
கண்டுகொள்ளக் கண்டாயென் கண்ணே றகுமானே. 20

அல்லும் பகலும் அடிமைமனந் தேம்புதற்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. 21

வேட்டை பெரிதென்றே வெறிநாயைக் கைப்பிடித்து;
காட்டிற் புகலாமோ கண்ணே றகுமானே. 22

அடைத்த மனக்காட்டை யாளுமைந்து கள்வரையுங்
கடத்த முடிவதில்லை கண்ணே றகுமானே. 23

மடம்புகு நாய்போல மயங்குமென்னை யுன்னைவிடக்
கடத்துவாரைக் காணேனென் கண்ணே றகுமானே. 24

வையெம்பொய் யென்றே மறையோல மிட்டதெல்லாங்
கையுமெய் மாச்சுதென்றன் கண்ணே றகுமானே. 25

சொல்லறு மெய்ஞ்ஞானச் சுடரொளிகண் டாலென்மனக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. 26

மாதா பிதாவுமென்னை மயக்கி மயக்கியுன்னைக்
காதலிக்க வொட்டாரென் கண்ணே றகுமானே. 27

வெற்றிதரு மெய்ப்பொருளை வேதாந்தத் துட்கருவைக்
கற்றோர்க் கருள்புரியுங் கண்ணே றகுமானே. 28

உடைஆ பரணமென வுன்னியுன்னிப் பாவிமனங்
கடையா விடலாமோ கண்ணே றகுமானே. 29

ஓயாக் கவலையினா லுள்ளுடைந்து வாடுதற்கோ
காய மெடுத்தேனென் கண்ணே றகுமானே. 30

நேசம்வைத்த துன்னடிமை நின்பதத்திற் கல்லாது
காசு தனக்கோவென் கண்ணே றகுமானே. 31

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியெண்ணி யுன்னடிமை
கண்ணிக்குட் சிட்டானேன் கண்ணே றகுமானே. 32

பொய்யெடுத்தா னென்று புறக்கணித்தா யாகிலெனைக்
கையணைப்பா ருண்டோவென் கண்ணே றகுமானே. 33

விண்ணாடர் காணா விரிகருணைச் செஞ்சுடரைக்
கண்குளிரத் தந்தருள்செய் கண்ணே றகுமானே. 34

தங்குபே ரின்பத்தைச் சார்ந்தகுரு நாதனுக்கே
கங்குல்பகல் தானறுமென் கண்ணே றகுமானே. 35

தூங்காமல் தூங்கித் தொழுதுதொழு துன்னருளைக்
காண்க வெனக்கருள்செய் கண்ணே றகுமானே. 36

இன்றுள்ளோர் நாளைக் கிருப்பதுபொய் யென்பதையான்
கண்டுகொண்டேன் ஐயாவென் கண்ணே றகுமானே. 37

பீற்றல் துருத்திதனைப் பீக்குழியைச் சாக்கடையைக்
காத்தேன் வளத்தேனென் கண்ணே றகுமானே. 38

போதத் தனம்புதைத்த புல்லர்க்கு இருப்பூசி
காதற் றதும்வருமோ கண்ணே றகுமானே. 39

பாடிப் படித்தறிந்தும் பற்றறார் பாசமலைக்
காடுகொண்டு போவாரென் கண்ணே றகுமானே. 40

நிறைந்தபரி பூரணமே நிர்க்குணமே நின்மலமே
கருணைக் கடலேயென் கண்ணே றகுமானே. 41

பார்ப்பாயோ வென்றன்முகம் பாவியா காமலெனைக்
காப்பாயோ ஐயாயென் கண்ணே றகுமானே. 42

மெய்யெடுத்த நாள்முதலா மெய்யறியாப் பாவியெனைக்
கைவிடவே வேண்டாமென் கண்ணே றகுமானே. 43

சோற்றுப் பொதியைச் சுமந்தே யலைந்துசுழற்
காற்றுத் துரும்பானேன் கண்ணே றகுமானே. 44

சேர்ந்தசுற்றந் தன்னைச் சிதறவிட்ட சிந்தையர்க்குக்
காந்த மலையேயென் கண்ணே றகுமானே. 45

உலையி லிடுமெழுகின் ஒப்பாக என்றனுள்ளம்
கலைதலது காரியமோ கண்ணே றகுமானே. 46

ஆவி தனைக்குரங்கா ஆட்டுகின்ற ஐயறிவைக்
காவ லிடவருள்செய் கண்ணே றகுமானே. 47

வேசந் தனைப்போட்டு மெய்ம்மயக்கும் பொய்க்குருவாய்க்
காசு பணம்பறித்தேன் கண்ணே றகுமானே. 48

எட்டிப் பிடிக்கும் இதமறிந்தா லுன்பதத்தைக்
கட்டிப் பிடித்திடுவேன் கண்ணே றகுமானே. 49

அவியா மனமவிய ஆய்கலை யோர்கள்தமைக்
கவியுந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. 50

சித்திதரும் வேதாந்தச் செழுஞ்சுடரைச் சின்மயத்தைக்
கற்றவர்க்கு முத்திதருங் கண்ணே றகுமானே. 51

அருவிசொரி யும்படிக்கு அம்பரத்தில் அன்புவைத்தால்
கருவி பிரியாதென் கண்ணே றகுமானே. 52

மாராய வெள்ள மருங்கமிழ்ந்தால் நின்கருணைக்
காரார் மழைபொழியுங் கண்ணே றகுமானே. 53

என்படா தென்னமெலாம் எண்ணியெண்ணி நெஞ்சமொரு
கண்படாது அலங்குவதோ கண்ணே றகுமானே. 54

கோலங் குறியில்லாக் குருவடிதொ ழார்கள்மனம்
காலன் இருப்பிடமோ கண்ணே றகுமானே. 55

உள்ளுயிரி னுள்ளே உறைந்தபரஞ் சோதிவரின்
கள்ளமனந் துள்ளாதென் கண்ணே றகுமானே. 56

சேர்க்குந் திரவியமுஞ் சித்ரமணி மண்டபமுங்
காக்குந் துணையோவென் கண்ணே றகுமானே. 57

பட்டுடையும் ஒப்பனையும் பாதகமு மென்னைவிட்டுக்
கட்டோ டொழிவதிலை கண்ணே றகுமானே. 58

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணா திருக்குமனக்
கண்ணாடிக் குள்முகமாங் கண்ணே றகுமானே. 59

மண்டபமுந் தண்டிகையு மாளிகையுஞ் சாளரமுங்
கண்டு கழிக்கவருள் கண்ணே றகுமானே. 60

மன்னுங் கருவி மவுனமணிப் பெட்டகத்தைக்
கன்னமிடப் போமோவென் கண்ணே றகுமானே. 61

என்றுமன்னை கற்றமுதல் எற்குப்பழி காரனெக்
கண்டறிந்து கொண்டேனென் கண்ணே றகுமானே. 62

கொடிய மனத்துயரைக் கூடா திருப்பவர்க்குக்
கடுக முடுகவருங் கண்ணே றகுமானே. 63

ஏச்சும் மதிமயக்கும் இல்லார்க ளாலுடைதேங்
காய்ச்சிறட்டை யானேனென் கண்ணே றகுமானே. 64

விள்ளரிய வேதம் வினாவுதலை யுங்கடிந்து
கள்ளமனந் துள்ளவதென் கண்ணே றகுமானே. 65

வேதக் கருவை விளைகருணைக் குஞ்சரத்தைக்
காதலித்தே னாதரித்தாள் கண்ணே றகுமானே. 66

அரும்பே மலரேயென் னாசைதரும் வாசனையே
கரும்பே ரசமேயென் கண்ணே றகுமானே. 67

பூரணமே யற்புதமே பொங்குகரு ணைக்கடலே
காரணமே யென்றனருட் கண்ணே றகுமானே. 68

ஓயாதோ என்கவலை யுன்னருளா லென்கருவி
காயாதோ ஐயாஎன் கண்ணே றகுமானே. 69

ராசாங்கம் வேண்டி ரதகசங்க ளேறுதற்குக்
காசெங்குங் கேளேனென் கண்ணே றகுமானே. 70

தந்தைதா யென்றே தயங்குகின்ற பாவிமனக்
கண்திறக்க வந்தருள்செய் கண்ணே றகுமானே. 71

அச்சமெமக் கில்லையென ஐம்புலனாம் பாழ்மனத்தைக்
கைச்சூறை யாட்டிவிடென் கண்ணே றகுமானே. 72

இனியவமிர் தம்பொங்கி யெங்குங்கரை தத்திவரக்
கனிவாய் திறந்தருள்செய் கண்ணே றகுமானே. 73

ஆணையிட்டே னாணையிட்டேன் ஐயனே யுன்னருளைக்
காண வெனக்கருள்செய் கண்ணே றகுமானே. 74

அல்லும் பகலும் அறிவிலய மாவோர்க்குக்
கல்லும் பிளந்திடுமென் கண்ணே றகுமானே. 75

புவியும் எழுவானும் பொன்னுலகும் பல்லுயிருங்
கவியுந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. 76

எண்ணரிய தாக இருந்திடுஞ் சூத்திரமோ
கண்ணிலொளி பாய்ந்ததுவோ கண்ணே றகுமானே. 77

உழையோ அழுக்கோஎன் உள்ளங்கழு வக்கழுவக்
கழுவாத் தொடக்கோவென் கண்ணே றகுமானே. 78

உற்ற கிளைத்திரை யுறவின் முறைத்திரையுங்
கத்திரித்து விட்டருள்செய் கண்ணே றகுமானே. 79

நற்பவளக் கொம்பே நவமணிக்கும் அற்புதமே
கைப்பொருட்கும் மெய்ப்பொருளே கண்ணே றகுமானே. 80

ஒப்புரவு தப்பிஉணர் வற்றுனைக் கைவிட்டுக்
கப்பரைகைக் கொண்டேனென் கண்ணே றகுமானே. 81

பசப்பிப் பணம்பறிக்கும் பாவிக் குருமுகத்தைக்
கசப்பாகக் கண்டேனென் கண்ணே றகுமானே. 82

வேதியர்க்கும் மாதவர்க்கும் மெய்யடியார் கட்குமுனைக்
காதலிப்போ ருக்குமருள் கண்ணே றகுமானே. 83

வேரைவே ரோடறுத்து மெய்யடிமை யாக்குதற்கென்
காரியத்தில் தாமதமென் கண்ணே றகுமானே. 84

பழகப் பழகிவரும் பாக்கியத்தைப் பைமுதலைக்
களவு கொடுக்கேனென் கண்ணே றகுமானே. 85

நாமாண்மை கள்முழுது நாசமாக் கார்தமக்குங்
காமவினை போமோவென் கண்ணே றகுமானே. 86

அடிமை யுனதுபயம் ஆகா திருக்கினுமென்
கடைவழிக்குங் கட்டமுதே கண்ணே றகுமானே. 87

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறி யேகடந்து
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே. 88

இனமுஞ் சனமுமென எண்ணியெண்ணி யுன்னடிமை.
கனசழக்குப் பட்டேனென் கண்ணே றகுமானே. 89

நவசூத்தி ரத்தைவிட்டு நன்னினைவென் னாதுமனங்
கவலைப் படுவதென்ன கண்ணே றகுமானே. 90

மடிப்புங் கொலைகளவும் வஞ்சமுமென் னெஞ்சைவிட்டுக்
கடக்க நடப்பதில்லை கண்ணே றகுமானே. 91

பலவிடத்தைச் சுற்றிப் பரிதவித்துப் பாவிமனங்
கலங்கி மயங்குவதென் கண்ணே றகுமானே. 92

உள்ளக் கருத்தால் உவந்துறவு கொள்ளாமற்
கள்ளமனந் துள்ளுவதென் கண்ணே றகுமானே. 93

மன்னுமுதன் மற்ற மயக்கமறக் கல்லாரைக்
கண்ணெடுத்துப் பாரேனென் கண்ணே றகுமானே. 94

தேசிகன் நானென்னுந் திருட்டு குருக் கள்சொல்லோர்
காசாய் மதியேனென் கண்ணே றகுமானே. 95

தன்னை யறிந்து தவம்புரியாத் தன்மையினாற்
கன்னெஞ்சன் ஆனேனென் கண்ணே றகுமானே. 96

மாடகூ டங்கள்மணி மண்டபமும் மன்றுகளுங்
காடுகொள்ளக் கண்டேனென் கண்ணே றகுமானே. 97

குரல்நெரிய வேகதறிக் கூப்பிட்டுங் காணாக்
கருவே குருவேயென் கண்ணே றகுமானே. 98

மருளாத் தவத்தான் மறப்புநினைப் பற்றவர்க்குக்
கருணைக் குணங்குடியாங் கண்ணே றகுமானே. 99

உதிக்கு முணர்வன்றி யுணர்வோ டுணர்வொன்றில்
கதிக்குங் குணங்குடியென் கண்ணே றகுமானே. 100

## 18. எக்காலக் கண்ணி

எக்காலக் கண்ணியில் பதினேழு கண்ணிகள் அமைந்துள்ளன. ஆறுபாடல்கள் அந்தாதித் தொடை பெற்றுள்ளன.

'முத்திதரும் வித்தை முனையில் வைத்து சீராட்டி நித்தம் மறவாமல் நினைப்பதினி யெக்காலம்' என்று கண்ணி துவங்குகிறது. பரம்பொருளின் அருளுக்கு ஏங்கும் பாடலாக ஒவ்வொரு கண்ணியும் அமைந்துள்ளது.

## எக்காலக் கண்ணி

முத்திதரும் வித்தை முனையில் வைத்துச் சீராட்டி
நித்தம் மறவாமல் நினைப்பதினி யெக்காலம். 1

ஆதியின்மே லாசை அடர்ந்தெரித்த அக்கினியின்
சோதியினால் வெந்து சுகம்பெறுவ தெக்காலம். 2

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல்வைத்து
நேமநிட்டைத் தம்பம் நிறுத்துவது மெக்காலம். 3

பங்கப் பழிப்புரய்ந்த பையன்யான் தையலர்கள்
கொங்கையைநான் பாராக் குருவடா தெக்காலம். 4

கொங்கைதனைப் பாராக் குருடா யிருப்பதுடன்
அங்கம்உமிழ் மோகம் அழிவதினி யெக்காலம். 5

அங்கம்உமிழ் மோகம் அழிந்தே அறமெலிந்தே
வன்கிழடு போல வறண்டுணர்வ தெக்காலம். 6

வாசியினால் ஏறி வலமிடந்தி ருப்பாமல்
தேசிநடை போலத் திடப்படுவ தெக்காலம். 7

தேசி நடைபோலத் தியங்காச் சுழுமுனையை
நாசி நுனியிலதை நான்மறிப்ப தெக்காலம். 8

நாசி நுனிகடந்து நாசமாய்ப் போகாமல்
வாசியுமென் கையில் வசப்படுவ தெக்காலம். 9

மையலெனு மாலை மார்புநிறை யப்பூண்ட
தையலர்க ளெல்லாமென் தாயாவ தெக்காலம். 10

கஞ்சா அபினரக்குங் கற்பமென வுண்ணாமல்
என்சாண் பணங்கள் இறக்கியுண்ப தெக்காலம். 11

பொய்யே மிகுத்த புதர்ப்பாவிப் பையல்தான்
அய்யோவென் றேயழுதுன் னடிபணிவ தெக்காலம். 12

அய்யோசகூ என்றே அலறவடி யுண்டவென்றன்
பொய்யான மெய்யின் பிழையறுவ தெக்காலம். 13

மருவு தனைமறந்து மனமும் மதமிறந்து
இருகையு மேந்தி யிரந்துண்ப தெக்காலம். 14

இருகையு மேந்தி யிரந்து குடித்தேநான்
சருகா யுலர்ந்து சலிப்பறுவ தெக்காலம். 15

ஆசான்நற் காலை அணைத்திருந்து மோந்துகலந்து
ஊசாடிப் பேசி உணர்வருள்வ தெக்காலம். 16

வாசிவா என்று வருந்தெள் ளமுதமுண்டு
பேசிநான் வாழ்ந்தே பிழைதீர்வ தெக்காலம். 17

## 19. கண்மணிமாலைக்கண்ணி

பராபரக்கண்ணியில் ஒவ்வொரு பாடலின் இறுதியினும் “பராபரமே” எனும் சீர் வருவதைப் போல இக்கண்ணியில் 'கண்ணே பராபரமே' எனும் தொடர் பாடல்தோறும் இறுதியில் வருகிறது.

'அத்துவிதமே யறிவகண்டி தாகாரக் காத்த வியமே யென்கண்ணே றகுமானே' என இக்கண்ணி துவங்குகிறது.

இப்பகுதி யோக நெறியின் சாதனை பற்றித் தெரிவிப்பதை மூலக்கனல், எட்டுமோரெட்டையும் எட்டுக் கயிற்றதனால் கட்டல், ஆதாரம் ஆறு, கும்பித்துரேசித்து, பட்டிப்பசும்பால் காலைக்கட்டிக் கறந்தளித்தல், சோமப்பால், வாமப்பால், காமப்பால், மூலாதாரம், ஆடுந்திருக்கூத்து, ஆயுங்கலையிரண்டு, கற்பமுறை முதலிய தொடர்கள் மூலம் அறியலாம்.

இதன் இறுதி எட்டுக் கண்ணிகள் வாழ்த்தாக அமைகின்றன.

## கண்மணி மாலைக் கண்ணி

அத்து விதமே யறிலகண்டி தாகாரக்
கர்த்த வியமேயென் கண்ணே பராபரமே. 1

தற்பரமே சிற்பரமே தானென்று நின்றுதவுங்
கற்பகமே யற்புதமே கண்ணே பராபரமே. 2

உடலே யுயிரே யுளங்குளிர்ந்த செந்தேனே
கடலே நிறையமுதே கண்ணே பராபரமே. 3

கொட்டிவைத்த முத்தே குவித்த நவரத்தினமே
கட்டிப்பசும் பொன்னேயென் கண்ணே பராபரமே. 4

சட்டரச வர்க்கமே சார்ந்ததோர் குஞ்சரமே
கட்டழகுப் பெண்ணேயென் கண்ணே பராபரமே. 5

செல்வப் பெருக்கே திரண்டமணிப் பொக்கிசமே
கல்விக் களஞ்சியமே கண்ணே பராபரமே. 6

இன்னமுதே கண்டே யெனக்கேற்ற முக்கனியே
கன்னலரும் பாகேயென் கண்ணே பராபரமே. 7

பீச்சாத் திரண்டமுதே பிரியாப் பெருவாழ்வே
காய்ச்சாச்செம் பொன்னேயென் கண்ணே பராபரமே. 8

நற்பவளக் கொம்பே நவின்றமணிப் பெட்டகமே
கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே பராபரமே. 9

பட்டைக் கருப்புவட்டே பானைகொண்ட சர்க்கரையே
கட்டிக் கரும்பேயென் கண்ணே பராபரமே. 10

துன்பக் கடலைத் தொலைந்தோர் துயர்தீங்குங்
கம்பமற்ற பாற்கடலே கண்ணே பராபரமே. 11

பொய்ப்பொருள்க ளெல்லாம் புறக்கணித்த புண்ணியர்தங்
கைப்பொருள்சித் தேயென்றன் கண்ணே பராபரமே. 12

பவக்கடலை நீக்கிப் பரிவாய்க் கரையேற்றுங்
கவிழா மரக்கலமே கண்ணே பராபரமே. 13

தம்பனங் கொண்டே தரித்துநின்ற ஓங்காரக்
கம்பத்தடி யானேயென் கண்ணே பராபரமே. 14

மலிகாதல் கொண்டைகையான் மண்ணிற் கவிழ்ப்பதற்கோ
கலகம் விளைத்துவிட்டாய் கண்ணே பராபரமே. 15

தெள்ளிய வான்சோதி தெளிந்துமெள்ள வந்ததையுங்
கள்ளப் படுத்திவிட்டாய் கண்ணே பராபரமே. 16

புண்ணீரொழுகிப் புழுங்கு மனத்தினர்போற்
கண்ணீர் கலங்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 17

பித்தர்கள் போலும் பிதற்றிக்கா கம்போலுங்
கத்திகத்திச் சாகவிட்டாய் கண்ணே பராபரமே. 18

போற்றாமற் சிந்தை பொருதுசமர்க் காற்றாமற்
காற்றாய்ப் பறக்கவிட்டாய் கண்ணே பராபரமே. 19

நெற்பதர்க்கே யொப்பாக நிற்பதற்கோ என்தலையில்
கற்பித்து விட்டுவிட்டாய் கண்ணே பராபரமே. 20

சொல்லாச் சுயஞ்சோதிச் சுடர்கொழித்த நெஞ்சுகருங்
கல்லாகச் செய்துவிட்டாய் கண்ணே பராபரமே. 21

அவிழ்ந்தவிழ்ந்து சிந்தையுன்மீ தாசைவைத்த தத்தனையுங்
கவிழ்த்துப்பா ழாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 22

ஓசைமணி மண்டபத்தி னுட்புகா வண்ணமெனைக்
காசினியிற் சுற்றவிட்டாய் கண்ணே பராபரமே. 23

வீண்காதல் தந்ததல்லால் வேற்றிலுனைக் கண்ணாலுங்
காண்கதுரி தாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 24

சேட்டுமத்தின் ஈர்ப்போலென் சிந்தைநைந் தேங்கவுனைக்
காட்டி மறைந்துவிட்டாய் கண்ணே பராபரமே. 25

துட்டாமா மாயையினிற் சுட்டெரிந்ததோர் கொள்ளிக்
கட்டைவிற காக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 26

வேல்விழியார் காமவேட்கை யளற்றிலெனைக்
கால்மாற்ற விட்டுவிட்டாய் கண்ணே பராபரமே. 27

வீடுகா டென்று விதித்தவும் அல்லாமற்
காடுவீ டாகவிட்டாய் கண்ணே பராபரமே. 28

ஓடாமல் ஓடி யுலகைவலஞ் சுற்றுதற்கோ
காடோட ஆக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 29

ஈடோயான் உன்றனக்கும் என்மீதில் ஏனோவிக்
காடிநியஞ் செய்துவிட்டாய் கண்ணே பராபரமே. 30

அச்சமிலாப் புல்வேடர் ஐவருக்கும் என்னறிவைக்
கைச்சூறை யாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 31

வில்லங்க மற்ற விளக்கொளிபோ னின்றநெஞ்சைக்
கல்லங்க மாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 32

மண்ணாதி மூவாசை மாமாயை முக்கூட்டுக்
கண்ணியுட்சிட் டாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 33

கொண்டனைத்துக் கொள்ளுங் குணங்குடியான் சீரடியைக்
கண்டணைக்க நீயருளாய் கண்ணே பராபரமே. 34

ஏட்டி லெழுதவொண்ணா இறையேயுன் றன்வடிவைக்
காட்டிக் கொடுத்தருளாய் கண்ணே பராபரமே. 35

மைச்சினிச்சி போலும் மணக்கோலப் பெண்போலுங்
கைச்சரசஞ் செய்தருளாய் கண்ணே பராபரமே. 36

நிதியாசை யற்று நிரஞ்சனமாய் நின்றிடநற்
கதியாசை தந்தருளாய் கண்ணே பராபரமே. 37

நாதவிந்தாய் நின்றதுவும் நானென் றுபதேசங்
காதி லுரைத்தருளாய் கண்ணே பராபரமே. 38

மாதவசி யாகி மலைமுழையிற் புக்குமென்மேற்
காதலொன்று தந்தருளாய் கண்ணே பராபரமே. 39

நிற்குணத்தைக் கொண்டு நிருவிகற்பஞ் சாதிக்கக்
கற்குணத்தைத் தீர்த்தருளென் கண்ணே பராபரமே. 40

சென்மந் தொலைத்தடிமை சின்மயமாய் நின்றிடவுங்
கன்மந் தொலைத்தருளாய் கண்ணே பராபரமே. 41

சிந்தை யொளிபரப்பிச் சிதறுவன் கண்டாய்யோ
கந்தனையுந் தந்தருளாய் கண்ணே பராபரமே. 42

அட்டாங்க யோகமதில் ஆசையுற வேயெனது
கட்டைவெட்டு முன்னருளாய் கண்ணே பராபரமே. 43

விற்புரு வத்தூடு விளங்குமொளி பந்தாடக்
கற்பித் தருளாயென் கண்ணே பராபரமே. 44

ஒப்பி லருளாழி ஓடஅடி யேற்குமொரு
கப்பலாய் வந்தருளாய் கண்ணே பராபர்மே. 45

உனையாள்வோம் என்றடிமை உள்ளங் குளிர்ந்திடநின்
கனிவாய் திறந்தருளாய் கண்ணே பராபரமே. 46

பொய்கோத்த மெய்யதனைப் போட்டுவிடு முன்னமெனைக்
கைகோத் தணைத்தருளாய் கண்ணே பராபரமே. 47

வாய்ச்சதெனக் கென்று மகிழ்ச்சிகொண்டு நின்றிடநின்
காட்சி யளித்தருளாய் கண்ணே பராபரமே. 48

மலைக்கு மலைதிரிந்து மனுவாக ஏழைமனக்
கலக்கந் தவிர்த்தருளாய் கண்ணே பராபரமே. 49

நாணா மடவாரை நான்கைதழு வக்கனவுங்
காணாது காத்தருளாய் கண்ணே பராபரமே. 50

தொண்டரிடஞ் சென்றிடவுந் தொண்டுசெய்து நின்றிடவுங்
கண்டித்து வைத்தருளாய் கண்ணே பராபரமே. 51

மூலவர்க்க மாக முழுமதிப்பா லுங்கொடுத்துக்
காலபயந் தீர்த்தருளாய் கண்ணே பராபரமே. 52

சோற்றா லெடுத்த சுவரிடியா மற்பாது
காத்துமுகம் பார்த்தருளாய் கண்ணே பராபரமே. 53

மூலக் கனல்மூட்டி மூட்டிவரு காலரையுங்
காலா லுதைத்தருளாய் கண்ணே பராப்ரமே. 54

சிட்டனென வும்பூசை செய்தேனும் இப்பாவிக்
கட்டைகடைத் தேறவைத்தாள் கண்ணே பராபரமே. 55

எட்டுமோ ரெட்டையுமெட் டெட்டுக் கயிறதனாற்
கட்டவும்நல் லிட்டம்வைத்தாள் கண்ணே பராபரமே. 56

ஆதாரம் ஆறும் அடுக்கடுக்கா கக்கடத்திக்
காதுக்குமே லேற்றிவைத்தாள் கண்ணே பராபரமே. 57

கும்பித்து ரேசித்துட் கொள்ளும் படிக்குதவிக்
கம்பமுனைக் காட்டிவைத்தாள் கண்ணே பராபரமே. 58

பட்டிப் பசும்பாலைப் பக்குவத் துடன்காலைக்
கட்டிக் கறந்தளித்தாள் கண்ணே பராபரமே. 59

நில்லா வுடற்கு நிலையங் கொடுக்குமொரு
கல்லாவின் பாலளித்தாள் கண்ணே பராபரமே. 60

சோமப்பா லூட்டிச் சுரந்தவா மப்பாலுங்
காமப்பா லுங்கொடுத்தாள் கண்ணே பராபரமே. 61

மண்டைநடு மண்டலத்துள் மண்டியமு துண்டிடவுங்
கண்டங் கடத்திவைத்தாள் கண்ணே பராபரமே. 62

மூலாதா ரத்துள் முளைகொண் டுயர்ந்தெழுந்து
காலாற் கனல்எரித்தாள் கண்ணே பராபரமே. 63

ஆயுங் கலையிரண்டும் ஆயா தடக்கியென்றன்
காயம் நிலைக்கவைத்தாள் கண்ணே பராபரமே. 64

அற்பவுட லால்அருந் தவமே புரிந்திடவுங்
கற்பமுறை கைக்களித்தாள் கண்ணே பராபரமே. 65

அண்டபிண்ட மென்றுநின் றாடுந் திருக்கூத்தைக்
கண்டுகளி கூரவைத்தாள் கண்ணே பராபரமே. 66

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணாமல் என்றன்மனக்
கண்ணாடிக் குள்ளளித்தாள் கண்ணே பராபரமே. 67

எவ்வுலகுந் தானா யிருந்தவுனை யான்தொழவுங்
கவ்வுமலக் கட்டறுத்தாள் கண்ணே பராபரமே. 68

அற்ப வுடலம் அழிந்திடுமுன் தீபமிட்ட
கற்பூர மாக்கிவைத்தாள் கண்ணே பராபரமே. 69

விலங்கிளங்க ளோடு நான் வீற்றிடவும் ஏழைநெஞ்சு
கலங்காத வண்ணம்வைத்தாள் கண்ணே பராபரமே. 70

அடுத்துக் கெடுக்கும் அரிவையர்க்கா ளாகாமல்
கடக்கக் கடத்திவைத்தாள் கண்ணே பராபரமே. 71

நாற்றந் தொலைய நறைஅணையு நாரியர்தங்
காற்றும் படாதுவைத்தாள் கண்ணே பராபரமே. 72

ஆணிப்பொன் மேருமலை ஆமுனையும் உன்னடிமை
காணுங் கருணைவைத்தாள் கண்ணே பராபரமே. 73

வனவாசம் ஏக வரமளித்துள் பொற்பாதத்தைக்
கனமா யிறைஞ்சவைத்தாள் கண்ணே பராபரமே. 74

எட்டிப் பிடித்தாலும் எட்டாது நின்றவுனைக்
கட்டிப் பிடிக்கவைத்தாள் கண்ணே பராபரமே. 75

மதபேத மோதி மறைக்குமறை சொல்வதெல்லாங்
கதையாய் முடித்துவைத்தாள் கண்ணே பராபரமே. 76

அண்டபிண்ட மாயுமதற் கப்பாலு நின்றுவெளி
கண்டவுனைக் காட்டிவைத்தாள் கண்ணே பராபரமே. 77

உலையி லிடுமெழுகா யுள்ளம் பதைத்துருகிக்
கலங்கியதுங் கண்டிலையோ கண்ணே பராபரமே. 78

வெம்பிமிக நொந்தேன் மெலிந்தேனென் கண்ணீருங்
கம்பலையுங் கண்டிலையோ கண்ணே பராபரமே. 79

மெத்த மயலுற்று விருப்பமொடு பன்னூலுங்
கற்றும்பா ழாக்கிவிட்டேன் கண்ணே பராபரமே. 80

பாலங் கடந்துபெரும் பாதம்நட வாமலும்வீண்
காலங் கடத்திவிட்டேன் கண்ணே பராபரமே. 81

பூத்த மலரெடுத்துன் பொன்னடியை யானுமென்றங்
காத்திருந்து பூசைசெய்வேன் கண்ணே பராபரமே. 82

விண்கொண்டு நின்று விளங்குமுனை யெங்காலங்
கண்கொண்டு காண்பேனென் கண்ணே பராபரமே. 83

ஐயோஎன் செய்கிற்பேன் ஆருமற்ற பாவியைநீ
கையைவிட லாமோவென் கண்ணே பராபரமே. 84

நட்டநடு வீடுசென்று நானொளித்தி ருந்துனையுங்
கட்டித் தழுவேனோ கண்ணே பராபரமே. 85

அல்லும் பகலும் அடியேன் படுந்துயர்க்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே பராபரமே. 86

பொன்னைப் புதைத்துவைத்துப் போவார் உளந்தோறும்
கன்னங் கருநிறங்காண் கண்ணே பராபரமே. 87

பணத்தைப் பணமெனவும் பார்த்ததுண்டோ வுன்றனுக்கென்
கணக்குத் தெரியாதோ கண்ணே பராபரமே. 88

நிற்கும் பொழுதாடை நெகிழ்ந்தால் உபசாரங்
கைக்குஞ் சொலுதுண்டோ கண்ணே பராபரமே. 89

தடையில் உலகனைத்துந் தானா யிருந்துமொரு
கடுகிடையும் ஆனாயென் கண்ணே பராபரமே. 90

உனக்குள் எனைமறந்தோர் உள்ளக் கருத்தினுள்மாங்
கனிக்குளிறு வண்டானாய் கண்ணே பராபரமே. 91

நெக்குருகி நின்ற நிலைதோன்றா நிர்க்குணத்தார்
கைக்குட்பந் தாடிநின்றாய் கண்ணே பராபரமே. 92

பதித்த மனம்வாழி பரமார்த்த மும்வாழ்
கதித்த நிலைவாழி கண்ணே பராபரமே. 93

அத்துவிதம் வாழி யறிவகண்டி தம்வாழி
கர்த்தனே நீவாழி கண்ணே பராபரமே. 94

தற்பர மேவாழி தாராதும் தந்துதவுங்
கற்பகமே வாழியென் கண்ணே பராபரமே. 95

சிற்பரமே வாழி சிவயோ கியர்வாழி
கற்பனையெல் லாம்வாழி கண்ணே பராபரமே. 96

நற்பதவி யும்வாழி நவில்நான் மறைவாழி
கற்பதா ரிகள்வாழி கண்ணே பராபரமே. 97

சித்தர் கணம்வாழி சின்மயந் தான்வாழி
கர்த்வியம் வாழியென் கண்ணே பராபரமே. 98

மாதவத்தோ ரும்வாழி மவுனமுத்தி ரையும்வாழி
காதலித்தோ ரும்வாழி கண்ணே பராபரமே. 99

குவலயத்தோ ரும்வாழி குணங்குடியா ரும்வாழி
கவலையற்றோ ரும்வாழி கண்ணே பராபரமே. 100

## 20. மனோன்மணிக் கண்ணி

இறைவன் மீது காதலாகிக் கசிந்துருகி இன்புறுவது பக்தி இலக்கிய நெறிகளுள் ஒன்றாகும். நாயக நாயகி பாவத்தால் இறைவனை வழிபடும் முறை பக்தரிடையே தொன்று தொட்டு இருந்து வருவதாகும்.

மனோன்மணி எனும் பெயர் மனத்துள் மணி போன்றிருப்பவன் எனப்பொருள்தரும். இதன்கண் 100 கண்ணிகள் உள்ளன.

அழகு என்பது பரிபூரணம். தெய்வீகப் பண்புகளின் வெளிப்பாடு. அழகின் உச்ச அளவு பெண்களிடமே அமைந்திருக்கிறது. தன் அழகால் ஈர்த்து காதல் கிளர்ச்சியைத் தூண்டி இணைப்புக்குத் துடிக்க வைப்பது, ஆண்மை கவரப்படுவது, ஏங்குவது, துடிப்பது, காதலை வெளிப் படுத்துவது இவையெல்லாமே அழகின் பரிபூரணத்தால் விளைவதாகும். இதனால் சூபிகள் இறைவனைக் காதலியாகப் பாவித்தே பாடுவர். குணங்குடியாரும் அவ்வாறே பாடியுள்ளார்.

மனோன்மணியை இறைவனுக்குக் குறியீடாகக் கொண்டு பேரின்பக் காதலைப் பாடுகின்றார்.

'கோப்பாகவும் உனையான் கொண்டாடிப் பாடவும் நீ காப்பாகவும் கனவு கண்டேன்' என்று மனோன்மணியைத் துதித்து காதல் கதையைத் தொடருகின்றார் குணங்குடியார்.

மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறை மஞ்சக் குளிப்பு, கண்விழிப்பு, எக்களிப்பு முதலிய சொல்லாட்சியால் இறைக்காதலின் உணர்வு மிகுதியைப் புலப்படுத்துகிறார்.

எல்லார்க்கும் அருளும் இறையியல்பை உள்ளத்தில் கொண்டு பத்தினித் தன்மை கெட்டுவிட்டதாகக் குறை கூறுகிறார்.

காதல் மயக்கத்தால் கால்பிடித்து கைகுவித்து மெய் மயக்கி மதிமயங்கிச் சொன்னதாகவும் குறிப்பிடுகின்றார்.

உன் அடியார்க்கு அடியனாக ஆட்கிப் பிரியங் கொடுப்பாய் என்று குறிப்பிட்டு மணிகளாகவும் மலர்களாகவும் உருவகித்து வர்ணிக்கிறார் குணங்குடியார்.

## மனோன்மணிக் கண்ணி

மெய்தொழவு மேலும் மேலும்நந்தி கேஸ்வரனைக்
கைதொழ வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 1

கோப்பா கவும்உ னையான் கொண்டாடிப் பாடவும்நீ
காப்பாக வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 2

பெண்கள்நிர்த்தத் தோடுனையான் பிரியா மணம்புணரக்
கண்கஞுறங் காக்கனவு கண்டேன் மனோன்மணியே. 3

மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறையில் இருவருங்கை
கலந்திருக்க வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 4

மெய்ம்மஞ்சட் குளிப்புங்கண் விழிப்பும்எக் களிப்புமெனைக்
கைமிஞ்ச வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 5

மைதீட்ட வுங்கயற்கண் மலரின் மலர்முலையிற்
கைபூட்ட வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 6

மெய்தழு வும்இருவர் மெய்யோடு மெய்நெருங்கக்
கைதெழுவ வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 7

வாமப்பா லைப்பெருக மறுவாலி பம்வருக
காமப்பா லுண்ணக் கனவுகண்டேன் மனோன்மணியே. 8

பாலனா கவுங்கான்ற பாலுணவும் என்னைவிட்டுக்
காலனே கவுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 9

வடியா அருளமிர்தம் வடியவடி யக்குணங்
குடியா ரொடுகனவிற் குடித்தேன் மனோன்மணியே. 10

கோடி பெருமதிகள் கூடும் ஒருமதிபோல்
வாடியெம் மானேபெம் மானே மனோன்மணியே. 11

கண்ணேயென் கண்மணியே கண்குளிர்ந்த கட்டழகுப்
பெண்ணே யமிர்தப் பிழம்பே மனோன்மணியே. 12

பெண்ணே மயிலினமே பேரினமே என்றுனையென்
கண்ணிற் கிடக்கஎன்று காண்பேன் மனோன்மணியே. 13

வன்ன வுடைக்குமுன்றன் வால வயதினுக்கும்
அன்ன நடைக்குமென்ற னாசை மனோன்மணியே. 14

கூந்தல் இலங்கக் குரும்பைத் தனங்குலுங்க
நேர்ந்து நடம்புரிந்து நிற்பாய் மனோன்மணியே. 15

துவளுந் துடியிடையுந் தோகை மயில்நடையும்
பவள இதழுமென்று பார்ப்பேன் மனோன்மணியே. 16

மலர்மாலை கள் கிடந்து மார்பின்ன லாடுமுன்றன்
அலர்முலையும் யானென் றணைவேன் மனோன்மணியே 17

வெய்யிற்பட் டாலும் வெதும்புமுட லாயுனது
மெய்யில்தொட்டா லுங்கந்தம் வீசும் மனோன்மணியே. 18

காற்றுப்பட் டாலுங் கலங்குமென்றன் மேனியில்நீ
பார்த்துத் தொடவின்பம் படைப்பேன் மனோன்மணியே. 19

பிடியாரைப் போலும் பிடிப்பேன் முலையையுங்குணங்
குடியாரைப் போலுங் குடிப்பேன் மனோன்மணியே. 20

கூந்தலுக்கு நெய்தோய்த்துக் குளிர்மஞ்சள் நீராட்டி
வார்ந்துசிங் காரித்து வைப்பேன் மனோன்மணியே. 21

காலிற்பனி நீர்விட்டுக் கழுவிமடி மீதுவைப்பேன்
மேலித் அத் தரும்பூசி விடுவேன் மனோன்மணியே. 22

காதம் பரிமளிக்குங் கத்தூரிப் பொட்டிடுவேன்
போதுஞ் சவாதணிந்து புணர்வேன் மனோன்மணியே. 23

தலைக்குமினுக் கெண்ணெய் தடவிச்சடை பின்னிவைப்பேன்
முலைக்குவன்னக் கச்சிறுக்கி முடிப்பேன் மனோன்மணியே. 24

கட்டாடை வர்க்கமெல்லாங் கண்டு களித்துயர்ந்த
பட்டாடை வர்க்கம்வைத்துப் படைப்பேன் மனோன்மணியே. 25

மூக்குகுத்திக் காதுகுத்தி முழுவயிரந் தூக்கிவைப்பேன்
கோக்குமுத்துந் தூக்குமுத்துங் குவிப்பேன் மனோன்மணியே. 26

கைக்கும் சுரிகடகம் கல்லுமிழைத்துக் கொடுப்பேன்
மொய்குழற்குச் சடைப்பில்லை முடிப்பேன் மனோன்மணியே. 27

தங்கக்கொலு சுஞ்சிலம்புந் தண்டரைத்த பாடகமுங்
கொங்கைக்கு மோகனமாலை கொடுப்பேன் மனோன்மணியே. 28

காலாழி பீலிமுதற் கல்நகையும் பொன்னகையும்
நாலாட் சுமைவேண்டின் நடக்கு மனோன்மணியே. 29

முடிமீ தினுமகுட முடிசூட்டு வேன்நற்குணங்
குடிமா தவர்கள்குலக் கொழுந்தே மனோன்மணியே. 30

சந்நிதா னத்திற் சரணஞ் சரணமென்று
சொன்ன மலர்தூவித் தொழுவேன் மனோன்மணியே. 31

கர்ப்பூரம் ஏற்றிக் கரத்தீப ஆலாத்தி
எப்பாரும் போற்ற எடுப்பேன் மனோன்மணியே. 32

முக்கால மும்பூசை முடிப்பேன்முக் காலமல்லால்
எக்கால மும்பொங்கல் இடுவேன் மனோன்மணியே. 33

சாதந்தளி கைசமத்துச் சாம்பிராணி தூபமிட்டுப்
பாதந் தொழுதிட்டுப் படைப்பேன் மனோன்மணியே. 34

பச்சைப் பருப்புமுதற் பருப்பிற்பத்து வகைகடவேன்
வச்சநறு நெய்யுருக்கி வார்ப்பேன் மனோன்மணியே. 35

முட்டை பொரிப்பேன் முழுக்கோழி யும்பொரிப்பேன்
தட்டைப்பீங் கானில் தருவேன் மனோன்மணியே. 36

ஆட்டுக்கறி யுங்கொள்வேன் அதிலனந்தம் வகைசமைப்பேன்
கூட்டுக்கறி யும்பண்ணிக் கொடுப்பேன் மனோன்மணியே. 37

குட்டிக் கறிதானுங் குழம்புபண்ணித் தாளித்தோர்
சட்டிக் கறியேனுந் தருவேன் மனோன்மணியே. 38

பால்பழமுந் தேனும் பலகார வர்க்கங்களும்
மேலுமே லும்பரப்பி விடுவேன் மனோன்மணியே. 39

அடிக்காயி ரம்பொன்விலை யானாலும் ஈந்துகுணங்
குடிக்குள்மா ளிகைகட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே. 40

ஆணிப்பொன் மதிலுயர்ந்த அரண்மனையுந் தீர்ப்பாக
மாணிக்க மேவிளக்கா வைப்பேன் மனோன்மணியே. 41

துலங்குமணி மண்டபமுஞ் சொர்க்கமென வும்இலங்காது
இலங்குமலங் காரஞ்செய் திடுவேன் மனோன்மணியே. 42

ரத்தினங்கள் வைத்திழைத்து ராவைப் பகலாக்குஞ்
சித்திரங்கள் வகைவகையாச் செய்வேன் மனோன்மணியே. 43

மண்ணா யழுந்தாமல் மனமே முழுவதினுங்
கண்ணாடி யாயிருக்க காண்பேன் மனோன்மணியே. 44

மங்கா தொளிபரப்பும் மவுணமணி யாலுமொரு
சிங்கா சனமேடை செய்வேன் மனோன்மணியே. 45

நாற்காலி கட்டில்பல நற்பவள ஆசனங்கள்
நீக்கமறச் சுற்றும் நிறைப்பேன் மனோன்மணியே. 46

பாதம்பூ சித்துப் பணிவிடைகள் செய்துநிற்க
மாதாக ளோவனந்தம் வைப்பேன் மனோன்மணியே. 47

புவனத் தரசரெல்லாம் போற்றிப் பணியவென்றன்
மவுன மலரணைமேல் வாழ்வாய் மனோன்மணியே. 48

கட்டிலினுங் கூடி களிகூர்ந்து கொண்டிருப்போம்
தொட்டிலினு மாடிச் சுகிப்போம் மனோன்மணியே. 49

முடிமன்னர் தம்வாழ்வு முதலெவையும் எங்கள்குணங்
குடிமன்னர் தம்வாழ்வுங் கொடுப்பேன் மனோன்மணியே. 50

சொன்னம் மலைமலையாய்த் தொகைவகையி லாதளிக்குங்
கன்னன் எனவுமெனைக் காண்பாய் மனோன்மணியே. 51

போதத் தனங்குவித்துப் பொக்கிசமுங் கைகுவிப்பேன்
பாதத்தி னும்வீழ்ந்து பணிவேன் மனோன்மணியே. 52

கிடையாப் பொருள்களெல்லாங் கிடைக்குமுன்ன நீயுமென்னாற்
படையாப் பொருள்களெல்லாம் படைப்பாய் மனோன்மணியே. 53

தானா சமுத்திரம்போற் சான்றோர்க்கெல் லாமளிப்பாய்
சேனா சமுத்திரமுஞ் சேர்ப்பாய் மனோன்மணியே. 54

முடிதூக்கு மன்னர் முதலெவரும் உன்வாயிற்
படிகாக்கும் வாழ்க்கை படைப்பாய் மனோன்மணியே. 55

கவிராச ரும்விருது கட்டியங்கள் கூறிநிற்பார்
தவராச ரும்போற்றத் தவறார் மனோன்மணியே. 56

உன்மீதில் ஆசித்து உயிர்பொருளுன் தாட்களிப்ப
என்மீதில் ஆசையுனக் கிலையேன் மனோன்மணியே. 57

உள்ளது உரியதெல்லா மொப்புக்கொண்ட பின்னலவோ
கள்ள மனம்படைக்கக் கற்றாய் மனோன்மணியே. 58

வேசைக் குணத்தை விரும்புவாய் என்றறிந்தாற்
காசைப் பணத்தைநான் காட்டேன் மனோன்மணியே. 59

படையாதெல் லாமென்னாற் படைத்துப்பர தேசிகுணங்
குடியாரை யோதேடிக் கொண்டாய் மனோன்மணியே. 60

உத்தமிப் பெண்ணென்று உவந்தேனிப் போதுன்றன்
பத்தினித் தனத்தைநன்றாய்ப் பார்த்தேன் மனோன்மணியே. 61

என்பது துனக்கிருந்தா விராச ராசேச்வரியாய்
ஐம்பத்தறு தேசமும்நீ ஆள்வாய் மனோன்மணியே. 62

உள்ள மணவாளன் உனக்கெவனோ என்னைவிடக்
கள்ளமண வாளனிச்சை கடிதோ மனோன்மணியே. 63

வேசியென்ற பேர்படைத்து வெளியிற்புறப் பட்டவளைத்
தாசியென்று சொல்லத் தகாதோ மனோன்மணியே. 64

ஆடாதும் ஆடி அவுசாரி யானவுனைப்
பாடாதும் பாடிலென்ன பயமோ மனோன்மணியே. 65

மூக்கும் உனக்குமுழம் மூன்றேனோ பத்தினிபோல்
நாக்கும் உனக்குமுழம் நாலேன் மனோன்மணியே. 66

பானைச்சோ றெல்லாம் பதம்பார்த்துத் தின்றவினி
மானம் அழியிலுயிர் மயிர்தான் மனோன்மணியே. 67

இனிக்கண் டறிந்துகொள இவனான் பிளையானால்
தனிக்கண்ட போதுபுத்தி தருவான் மனோன்மணியே. 68

பல்லை யிதழ்கடிக்கப் பானை தடியொடிக்கக்
கல்லைத்தேங் காயுடைக்கக் காண்பாய் மனோன்மணியே. 69

தடிபோ லிருந்துனையான் சாதிகெட்ட பாழுங்குணங்
குடியாக்கெப்படி கூட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே. 70

போனதெல் லாம்போச்சு பொழுதும் விடிந்ததினி
நானதெல் லாமனத்தில் நாடேன் மனோன்மணியே. 71

மல்லாந்து நான்படுத்து மார்பில்துப்பிக் கொண்டுஇனும்
பல்லைக்குத்தி யும்முகர்ந்தோ பாரப்பேன் மனோன்மணியே. 72

என்னைவிட்டால் மாப்பிள்ளைமார் எத்தனை உன்றனுக்கே
உன்னைவிட்டால் பெண்ணெனக்கும் உண்டோ
மனோன்மணியே. 73

தடித்தனமே செய்தாலுஞ் சமுசாரத் திற்படிந்து
குடித்தனஞ்செய் தாலென்மனக் குறையோ மனோன்மணியே. 74

தொடுத்தணைத்துக் கொண்டே துயில்வன்மற்ற நேரமெல்லாம்
எடுத்தணைத்துக் கொண்டே யிருப்பேன் மனோன்மணியே. 75

படுத்துப் படுத்துநெஞ்சிற் பளிச்சுபளிச் சென்றுமுத்தங்
கொடுத்துக் கொடுத்துநான் கொள்வேன் மனோன்மணியே. 76

வன்னச் செழும்பவள வாயிதழ்ஊ றல்சுவைத்துன்
கன்னத்தில் வீழ்ந்து கடிப்பேன் மனோன்மணியே. 77

கச்சிறுக்கு மாதரின்பங் கைச்சிறுக்கும் போதவின்பம்
வைச்சிறுக்குக் கொங்கையிற்கை வைப்பேன் மனோன்மணியே. 78

தித்தித் தொழுகுகாம தேனமிர்த வூறலுண்பேன்
முத்திதழு வித்தழுவி முகப்பேன் மனோன்மணியே. 79

படியோர்க்கெல் லாமுயன்ற படியோர்க ளானகுணங்
குடியோர்கள் போலுமின்பங் கொள்வேன் மனோன்மணியே. 80

சேயாயும் என்மடியிற் செங்கீரை யாடியருள்
தாயாயும் அங்கை தருவாய் மனோன்மணியே. 81

அங்கைதந்து தந்தே அணையத்தா யருளமிர்தங்
கொங்கைதந்து தந்தே கொடுப்பாய் மனோன்மணியே. 82

தாவி யணைத்தென்றன் தாயேயுனை யென்றிந்தப்
பாவி மடியில்வைத்துப் பார்ப்பேன் மனோன்மணியே. 83

ஏங்கியழு வேனோஉன் இணையடியைக் காணாமல்
தூங்கிவிழு வேனோஎன் தோழி மனோன்மணியே. 84

உலைபோல் எரியுமென்றன் உளங்குளிர மேல்வளர்ந்த
மலைபோ லெழுந்தருளி வருவாய் மனோன்மணியே. 85

கன்மம் அறுவதெந்தக் காலமோ யானறியேன்
நன்மை தருவதெந்த நாளோ மனோன்மணியே. 86

பன்னீர் ஒழுகுமுன்றன் பாத மலரையென்றன்
சென்னிமீ தென்றுமருள் செய்வாய் மனோன்மணியே. 87

தாயினுமிக் காங்கருணைத் தயாநிதியே யிவ்வுரையை
நாயினுமிக் காங்கடையேன் நவின்றேன் மனோன்மணியே. 88

கால்பிடித்துக் கண்ணில்வைத்துக் கைகுவித்து மெய்மயங்கி
மால்பிடித்துச் சொன்னதெல்லாம் மகிழ்வாய் மனோன்மணியே. 89

அடியானை யுன்னடியார்க்கு அடியானும் ஆக்கிகுணங்
குடியா னெனப்பிரியங் கொடுப்பாய் மனோன்மணியே. 90

உச்சிதவச் சிரமலையே ஒப்பில்லா மாணிக்கமே
கச்சிதப் பச்சைமர கதவே மனோன்மணியே. 91

செப்புறா ஆணிமுத்தே சிறந்தபவ ளக்கொடியே
புட்பரா கக்கமலப் பூவே மனோன்மணியே. 92

கோமே தகமே குளிர்ந்தவயி டூரியமே
மாமேரு வேநீல மலையே மனோன்மணியே. 93

வற்றா அருட்செல்வ வாழ்வேகரு ணாநிதியே
பொற்றா மரைக்கமலப் பொகுட்டே மனோன்மணியே. 94

அல்லி மலரே அலர்செங்கழு நீர்மலரே
மன்மத பாணமா மலரே மனோன்மணியே. 95

பொன்மலரே பன்மலரே புகழ்தருபன் னீர்மலரே
மன்மத பாணமா மலரே மனோன்மணியே. 96

குடலை நிறைந்தொரு கொத்தலரிச் செம்மலரே
மடலவிழ்ந்த செந்தாழை மலரே மனோன்மணியே. 97

பூக்கும் அருள்மலரே புளிக்காத மாமலரே
வாக்கு மலரேகன் மலரே மனோன்மணியே. 98

வஞ்சியர்செய் மோசமுடன் மறலிசெயும் நாசத்திற்கு
அஞ்சி யுனக்கடிமை ஆனேன் மனோன்மணியே. 99

அடியாரும் வாழியிந்த அடியேனும் வாழிகுணங்
குடியாரும் வாழிக்குணக்குன்றே மனோன்மணியே. 100

## உமையாள் பாதம் முன்னிற்க

ஆதியந்தங் கடந்தவுமை யாள்தன் பாதம்
அகண்டபரி பூரணமாம் ஐயர் பாதம்

சோதியந்தங் கடந்தகண பதியின் பாதம்
தொழுதிறைஞ்சிக் கரங்குவித்துப் போற்றி செய்து
வாதியந்தங் கடந்ததந்தி பாதம் என்றும்
வாலைமனோன் மணியம்மை பாதம்என்றும்
ஓதியந்தங் கடந்தண்டம் இரண்ட தாக
ஒன்றுமறி யாவறிரு னுரைசெய் தானே.

## 21. நந்தீஸ்வரக்கண்ணி

இப்பகுதியில் இறைவனின் மகத்துவ நிலையைப் பாடுகிறார் ஞானச்சித்தர் குணங்குடியார்.

நந்தி சிவனுக்குப் பிரதம மாணாக்கர். சந்தான குரவர்களான சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் முதலியோர்க்கு முதற்குருவானவர் என்பர்.

இங்கு குருவடிவான பரம்பொருளைக் குறிக்கும் 51 கண்ணிகள் இதன்கண் உள்ளன. இதில் சூபி நெறிக் கருத்துக்கள் சித்தர் நடையில் கூறப்பட்டுள்ளன.

இந்தப் பாடல் ஆதியந்தம் கடந்த உமையாள் எனத் தொடங்குகிறது. உமையாள் என்பது சக்தியைக் குறிக்கும் பரம்பொருளின் படைப்பு நிலையாகும்.

### நந்தீஸ்வரக் கண்ணி

ஆதியந்தங் கடந்தவுமை யாளருள் நாதாந்தச்
சோதியந்தங் கடந்தசெழுஞ் சுடரேநந் தீஸ்வரனே. 1

முடியடியாய் நின்றநடு மூல மணிவிளக்கே
அடிமுடியாய் நின்றநடு அணையேநந் தீஸ்வரனே. 2

கர்த்தனே யானுன் கருணைத் திருவடிக்கே
எத்தனைதான் தெண்டன் இடுவேன்நந் தீஸ்வரனே. 3

தீர்க்கதெண்ட னிட்டேன் திருவடியைப் போற்றிச்செய்தேன்
வாக்கு நடக்க வரமருள்நந் தீஸ்வரனே. 4

மாசில் பரவெளியே மவுனமணி மாளிகையில்
வாசல் பெருவழியே மகத்தேநந் தீஸ்வரனே. 5

மகத்தோனே ஞான மழையே யருள்வெள்ள
முகத்தோனே மோன முளையேநந் தீஸ்வரனே. 6

ஞானம் விளைவேற்று நல்லசமு சாரிகட்கு
மோன மழையூற்று முகிலேநந் தீஸ்வரனே. 7

முன்மூல யோகம் முழுதுஞ்சித்தி செய்துதர
உன்னாலே யாகும் உயிரேநந் தீஸ்வரனே. 8

சமர்கொடுத்து வென்றோங்கு சாம்பவியைக் கைப்படுத்தித்
தமர்விடுத்து நீக்கித் தருவாய்நந் தீஸ்வரனே. 9

நல்லோர்க்கு நீகாட்ட நல்குங்குணங் குடிவாழ்வு
எல்லோர்க்கு நேர்காட்ட எளிதோநந் தீஸ்வரனே. 10

இல்லி னிடங்கூட்டி யிதழ்விரியுஞ் செங்கமல
வல்லி னிடங்காட்டி வைப்பாய்நந் தீஸ்வரனே. 11

சாமிதனை யுஞ்சுத்த சைதந்ய மானசிவ
காமிதனை யும்என்று காண்பேன்நந் தீஸ்வரனே. 12

உமையாளும் ஐயா உவந்தடிமை கொள்ளும்வண்ணம்
எமையாளும் ஐயா இறையேநந் தீஸ்வரனே. 13

கேசரத்தைக் காட்டிக் கிளரொளியாள் தன்னருட்பால்
ஆசரித்தே பூட்ட அருள்வாய்நந் தீஸ்வரனே. 14

சக்தி சிவமுதலாச் சாம்பவியம் பாளருளிற்
செத்த சிவமுதலாச் சித்தாம்நந் தீஸ்வரனே. 15

சித்தாளை யீன்ற சிறுபெண்ணாத் தாளிரண்டு
பொற்றாளை யென்றோ புணர்வேன்நந் தீஸ்வரனே. 16

பத்து வயதுடைய பாவையரை யன்றோநீ
சித்தர்க்கெல் லாந்தாயாய்ச் செய்தாய்நந் தீஸ்வரனே. 17

காமரூபி யாம்நித்ய கல்யாண சுந்தரியை
ஓமரூபி யையெற்கும் முதவுநந் தீஸ்வரனே. 18

கேசரியாள் தன்கருணை கிட்டினன்றோ வாசாம
கோசரவாழ் வெல்லாங் கொடுப்பாய்நந் தீஸ்வரனே. 19

மூலவொளி சூட்டி மோனக் குணங்குடிக்கும்
மேலைவழி காட்டி விடுவாய்நந் தீஸ்வரனே. 20

கண்டப்பா லங்கடத்தி கமலாசனத் தேற்றி
அண்டப்பா லுங்கொடுத்தே யருள்வாய்நந் தீஸ்வரனே. 21

செங்கமல பீடச் செல்வியர்தாஞ் சித்தம்வைத்தால்
தங்கமலை கூடத் தருவாள்நந் தீஸ்வரனே. 22

போதகத்தைப் பூட்டிப் பருவமையத்து ஆயுமெற்கும்
வாதவித்தை காட்ட வருவாய்நந் தீஸ்வரனே. 23

ரசயோக சித்து நயனருளி னாலடிமை
நிசயோகம் முற்று நிலைப்பேன்நந் தீஸ்வரனே. 24

மகாவித்தை காய்ப்பதற்கு மதியமிர்த வூறலுண்டே
லகிரியுற்று நிற்பதற்கு லபிப்பாய்நந் தீஸ்வரனே. 25

குப்பை வழலையெனுங் கோழையெல்லாம் கக்கவைத்துக்
கற்ப வழலைவரக் காட்டுநந் தீஸ்வரனே. 26

கற்ப வழலைவரக் காட்டிகற்ப முண்டதற்பின்
பற்ப வழலைமுறை பகர்வாய்நந் தீஸ்வரனே. 27

சூதமுத னீற்றிச் சொன்னமதி யமிர்தப்ர
சாதமதி லூற்றித் தருவாய்நந் தீஸ்வரனே. 28

அற்பதே கமதாய் அடியேன் எடுத்தவுடல்
கற்பதேக மாகக் கனிப்பாய்நந் தீஸ்வரனே. 29

உமைநம்பி னோர்வாழும் ஓங்குகுணங் குடியார்க்கு
எமனும் பிணையாரும் எதிரோநந் தீஸ்வரனே. 30

முநீஸ்வரரில் ஒன்றாய் முடித்தருள்வா யாகிலெனைச்
சநீஸ்வ ரர்கூடச் சாட்டாய்நந் தீஸ்வரனே. 31

காலனும் போய்விடுவான் காலங் கடந்துசிறு
பாலனும் ஆய்விடுவேன் பரமேநந் தீஸ்வரனே. 32

கவன மணிமுதலாய்க் கட்டியென் கைக்களிக்க
மவுன மணித்தாய்க்கு வகுப்பாய்நந் தீஸ்வரனே. 33

மாயை வலைவீசி மயக்காமல் என்றன்மேல்
நேய வலைவீச நிகழ்த்துநந் தீஸ்வரனே. 34

தோகை யிளமின்னார் சுகபோக மும்பசியும்
போக வழிசொன்னாற் போதும்நந் தீஸ்வரனே. 35

பெண்ணா யுலகமெல்லாம் பிணக்காட தாக்கியையோ
மண்ணாய் மடிவதென்ன மாயம்நந் தீஸ்வரனே. 36

சையோகப் பித்தைவெல்லச் சமர்த்தோடு கச்சைகட்டும்
மெய்யோக புத்திசொல்ல வேண்டும்நந் தீஸ்வரனே. 37

பாஷாண் டிகள்தோறும் பலனொன்றும் இன்றிவெறும்
வேஷாண்டி யாக்கி விடுகாண்நந் தீஸ்வரனே. 38

பிணம்பிடுங்கித் தின்னும் பேய்போற் சிலநுளையர்
பணம்பிடுங்கித் தின்பதென்ன பாவம்நந் தீஸ்வரனே. 39

பண்முடியா னென்றும் பவம்பிடியா னென்றுமெனைக்
குணங்குடியா னென்றுங் குறிப்பாய்நந் தீஸ்வரனே. 40

உன்னையன்றி ஏழை ஒரேன் ஒருவரையும்
அன்னையென்றும் ஆள அருள்வாய்நந் தீஸ்வரனே. 41

ஆத்தாளைத் தேடி யலைந்தலைந்து விண்பறக்குங்
காற்றாடி யானென் கண்ணேநந் தீஸ்வரனே. 42

மான்பிரிந்த கன்றாய் மயங்குதற்கென் தாய்வயிற்றில்
ஏன்பிறந்து அகன்றே யிருந்தேன்நந் தீஸ்வரனே. 43

ஏனோ ஏனையீன்றாள் எத்தாயிவ் வாறுசெயத்
தானோ இனுமென்செயத் தானோநந் தீஸ்வரனே. 44

தாய்தாயே யென்றே தலைபுரட்டக் கொண்டுவெறு
வாய்வாயை மென்றோடி மடிவேன்நந் தீஸ்வரனே. 45

தாயைவிட்டுப் பிள்ளை தவிப்ப தறிந்தவுடன்
சேயையிட்டம் வைத்தணைக்கச் செய்வாய்நந் தீஸ்வரனே. 46

கன்றினுங் கேயிரங்குங் காலியென என்னனைதான்
என்றும் எனக்கிரங்க இசைப்பாய்நந் தீஸ்வரனே. 47

மாயை மணமுடித்து மயக்கா தெனையீன்ற
தாயை மணமுடித்துத் தருவாய்நந் தீஸ்வரனே. 48

தற்பரத்தின் நல்வெளியே சர்வபரி பூரணமே
சிற்பரத்தின் நேரொளியே சிவமேநந் தீஸ்வரனே. 49

முத்தரெலாம் வாழியெங்கள் மோனமணித் தாயருளுஞ்
சித்தரெலாம் வாழிசுத்த சிவமேநந் தீஸ்வரனே. 50

குற்றம் பலநீக்கிக் குணங்குடியென் றேமேவுஞ்
சிற்றம் பலம்வாழ் சிவமேநந் தீஸ்வரனே. 51

### கட்டளைக் கலித்துறை

மடக்கி மடக்கி வருமா யினுஞ்சொல்லும் மாண்பொருளும்
அடக்கி யடக்கிக் கிடக்குங்கண் டீர்பல ணாய்ந்துகொள்வார்
நடக்கினு மாமன வுண்மையி னுள்ளி நடையொழிந்து
கிடக்கினு மாமென் றறிதர நாடிக் கிளத்தியதே.

# 22. கீர்த்தனைகள்

இப்பகுதியில் பெண்மயக்கம் கொண்டு சிற்றின்பத்தில் அழுந்திப் பேரின்பத்தை இழக்கும் ஆண்களுக்கு அறிவுரை கூறுகிறார்.

பெண்களால் வரும் கேடுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் குணங்குடியார். அதுபோலவே ஆண்கள் மீது மயங்கி விழும் பெண்களுக்கு ஆண்களால் வரும் கேடுகளைக் கூறி பரம்பொருளை நாடவும் வேண்டுகிறார்.

இப்பகுதியில் 22 கீர்த்தனைகள் உள்ளன. இராக தாளங்கள் வகுக்கப்பட்டுள்ளன. புன்னாகவராளி, சௌராஷ்டிரம், சாவேரி, ஆசாவேரி, பியாகடை, செஞ்சுருட்டி, ஆகிரி, பரிசு, ஆனந்தபைரவி, காம்போதி, தன்யாசி, அடானா, தோடி முதலிய பதினேழு இராகங்களாலும் அடசாப்பு, சாப்பு, ஆதி, ரூபகம், ஏகம் ஆகிய 5 தாளங்களிலும் இசை வகுக்கப்பட்டுள்ளன. 22 கீர்த்தனைகளும் 22 பல்லவி, 22 அனுபல்லவிகளுடன் 86 சரணங்கள் கொண்டுள்ளன். எதுகை மோனைத் தொடைகளுடன் இசை நலம் கனியச் செய்துள்ளார் குணங்குடி மஸ்தான் சாகிபு.

*பிஸ்மில்லாஹி*

**கீர்த்தனைகள்.**

**1**

இராகம் - புன்னாகவராளி - தாளம் - அடசாப்பு

பல்லவி

பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி
பார்த்து வருவோம் வாருங்கள் (பர)

## அநுபல்லவி

வரமுத்தர் சுரர்கணுந் தரமுற்றவர்களிரு
பரமொய்த் தினியதுதி தரமுத்தியருளுநம் (பர)

## சரணங்கள்

1. சாத்திரவேதஞ் சலாம்—சலாம் சலாமென்ன
ஜகஜோதி மின்னல் பளீர்—பளீர் பளீரென்ன
பேர்த்துளம் போற்றும் றகீம்—றகீம் றகீமென்ன
பிசுமில்லா கிற்றகுமா னிற்றகீமென்றுள்
அசையாம லொருநிலை விசுவா மருளுநம் (பர)

2. கருமமத்தள தாளந் திடீல்—திடீல் திடீலென்ன
கைம்மணி யோசை கணீல்—கணீல் கணீலென்ன
திருவருளாட்டந் திடும்—திடும் திடுமென்ன
மனத்தொந்தோ மனத்தொந்தோம்
எனத்தாளனைத்தையு நினைத்தபடியாகநம் (பர)

3. நாசச் சரீரம் நரேல்—நரேல் நரேலென்ன
நஞ்சவினைகள் சரேல்—சரேல் சரேலென்ன
வீசு மருட்கள் விறீல்—விறீல் விறீலென்ன
வேதவா ளெடுத்தோதி சோதிவா சியிலேறி
ஆதி பிசுமிலுட னோதிக் கலிமாவைநம் (பர)

4. நாடாத பேர்கள் பயம்—பயம் பயமென்ன
நம்பிய பேர்கள் ஜயம்—ஜயம் ஜயமென்ன
தேடிய பேர்கள் நயம்—நயம் நயமென்ன
திக்குத் திசைகளெங்கு மிக்க வொளிபரப்பி
ஒக்க வுலகமொரு கைக்குள் ளடங்கும் (பர)

## 2

*இராகம்-சௌராஷ்டிரம்; தாளம் - சாப்பு*

*பல்லவி*

இல்லல் லாகூவென் றென்னை மறந்துகொண்
டிருப்பாயென் னெஞ்சமே. (இல்)

*அநுபல்லவி*

அல்லல்லா கூவென்ற வகண்டித கண்டமா
நல்லா யிருக்குது காணும்—ஒரு
சொல்லாலே இப்படித் தோணும்—வெகு
உல்லாச மாலாயிலாக (இல்)

*சரணங்கள்*

1. அண்ட புவனங்க ளென்று மிருப்பதை
யாதென் றறியாது தானே—எங்கும்
நின்று நிறைந்து மறைந்து சிறந்த
நெடிய நிராமயந் தானே—முதல்
பண்டு பழகிய நாட்டத்துக் கேயது
பாவைக்கூத் தானது தானே—நீ
கண்டு களித்துச் சகலமும் விட்டுக்
கரையேறி னால்நலந் தானே—தன்னைச்
சென்ற விடஞ்செயந் தானே—தன்னைக்
கண்டு கொண்டு லாயிலாக (இல்)

2. கெட்ட மனத்தை யுடைய எருமைக்
கிடாவினைப் போலவு முண்டோ—காசைக்
கட்டிப் புதைத்துக் கடைசியிற் சாகின்ற
கழுதைகட் கும்பல னுண்டோ —சுத்த
மட்டிப் பயல்கள் மனத்தைக் கரைக்க
மருந்துகள் மாத்திரை யுண்டோ—வெகு

சட்டம தாகிய நிட்டை யிராத
சண்டாளர்க்குச் சாஸ்த்ர முண்டோ—இந்தத்
துட்டரைப் போலவு முண்டோ—நீ
கெட்டியுடன் லாயிலாக (இல்)

3. இல்லல்லா கூவென் றேநானிராமல்
இணைபடவு மிருந் தேனே—மெத்த
நல்ல நோன்புடன் தொழுகையும் விட்டு
நலங்களையு மறந் தேனே—தன்னை
வெல்லுங் குருபரன் சொல்லிய தீட்சை
வினவாமல் விட்டிருந் தேனே—அதை
அல்லும் பகலு மறியா லென்னுள்ளே
ஆபாச மாக்குவித் தேனே—இது
எல்லா மறிந்திடுந் தானே—சொல்லுஞ்
சொல்லுஞ் சொல்லும் லாயிலாக (இல்)

4. பூசைகள் செய்கிறே னென்று திரிந்து
புலம்பிய பாபமும் போக்கி—பெண்கள்
ஆசையி னாலே யனேகந் தரங்கள்
அடிபட்ட தும்லகு வாக்கி—எங்கள்
ஈசன் றிருவடி யாசையுள் ளானபின்
என்னைக்கை யாலவர் தூக்கி—அந்தத்
தோசித் தனங்களை தொலையைத் தொழுநற்
றுரைகளைப் போதனை யாக்கி—கெட்ட
பாசங்க ளைவிட்டு நீக்கி—தந்த
வாசியுடன் லாயிலாக (இல்)

5. எண்சா ணுயரத் திருக்கும் பனங்கள்
இறக்கி யுண்ணேன்மனக் கண்ணே—கெட்ட
கஞ்சாவுங் கள்ளும் அரக்கும் அபினுங்
கலப்பதை விடுவெறு மண்ணே—நீ

தஞ்சா வூராளு மகராஜன் பாதந்
 தணிந்து நமஸ்காரம் பண்ணே–என்றன்
கொஞ்சப் பெலனுள்ள காயா புரியென்ற
 கோட்டை யிடித்திடு மெண்ணே–அவர்
அஞ்சா திடிப்பரென் றெண்ணே–இனிக்
 கொஞ்சிக் கொஞ்சி லாயிலாக (இல்)

6. என்ன விதமென்று சொல்வேன் முழக்க
 முழங்குவ தென்னுக்குள் ளாலே–ஒரு
அன்ன மிருந்தே யழகு பிறக்க
 அசைந்தசைந் தாடுவ தாலே–அதன்
முன்னாலே யான்செய்த பாக்கியங் கண்டு
 மூன்றாசை யில்லாத தாலே–அது
தன்னாலே யானந்த வெள்ளம் பெருகித்
 தடையறப் பாய்வத னாலே–பயிர்
அன்னம் பிடிப்பத னாலே–உனக்
 கென்ன குறை லாயிலாக (இல்)

7. வாசனை யாகிய மாசற்ற வஸ்துவும்
 வாக்கு மனத்துக் கெட்டாதே–அதில்
ஆசைக் கடல்பொங்கி யோசை யுடனலை
 ஆடிடு மொன்றுங் கட்டாதே–இந்த
நாசச் சரீரத்தை வாசியில் தீட்டிடில்
 நாசத்தை யண்ட வொட்டாதே–நல்ல
யோசனை செய்யுங் குணங்குடி வந்திடில்
 யோக முனக்குக் குன்றாதே–ஒரு
மாசற யாசுவென் றோதே காசில்
 ஆசைவிட்டே லாயிலாக (இல்)

## 3

*இராகம்-பந்துவராளி; தாளம்-சாப்பு*

*பல்லவி*

பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையுங் கேட்டையும்
பேசுவோமே நெஞ்சமே (பெண்)

*அநுபல்லவி*

சங்கையும் போக்கிச் சதிமானமாகச்
சகசண்டி யாக்குவித் திடுவாள்—வெகு
பங்கப் படுத்திவிட் டிடுவாள்—அந்த
மங்கைய ராசவைத் தையையோ வையத்தில் (பெண்)

*சரணங்கள்*

1. தங்க நகையு முகப்பணிச் சேலையுந்
தாவென வேகுரங் காட்டுவாள்—என்றன்
செங்கை வளையுந் தலைக்கெண்ணெய் சீப்புஞ்
சிறப்பொடு தாவென மாட்டுவாள்—வன்னக்
கொங்கைக் கிசைந்த ரவிக்கையுங் கோலப்
பணியுங் கொடுவென மூட்டுவாள்—அட
வெங்கப் பயனியென் ஆமக்கனோ வென்று
வீட்டில் வராதேயென் றோட்டுவாள்—வெகு
பங்கப் பழிப்பினி ணாட்டுவாள் அந்த
மங்கைய ராசவைத் தையையோ வையத்தில் (பெண்)

2. ஆதியைத் தேடி யருள்பெற நாடில்
அழுதழுது மடி பிடிப்பாள்—நீதான்
ஏதென்னை விட்டுப் பிரிவது மென்றவள்
ஏங்கியேங் கித்துடி துடிப்பாள்—இன்னும்
வாதாநீ செய்யுந் தவம்பலி யாதென
வாழ்த்தி வசைகொடை கொடுப்பாள்—கெட்ட

மூதேவி புத்தி படைத்தவளாகி
முரணுக்கு மாரடி துடிப்பாள்—வெகு
வேதனை யாய்மட மடப்பாள்—அந்த
வாதிக ளாசைவைத் தையையோ வையத்தில் (பெண்)

3. நாடிக் குருவடி தேடி நடக்கின்ற
நற்செய லைக்கசப் பாக்குவாள்—எங்கும்
ஓடித் திரிந்தே யலைந்து பணங்கள்
ஒருக்காலே தேடென்று தாக்குவாள்—அவன்
தேடும் பொருள்தனைக் காணி லுமக்கெதிர்
தேசத்தி லாரென்று தூக்குவாள்—இன்னும்
ஆடென்றும் மாடென்றும் வீடென்றுந் தேடென்றும்
ஆண்டவ னைமறப் பாக்குவாள்—பின்பு
ஈடென் றிலாநினை வாக்குவாள் அந்தக்
கேடிக ளாசைவைத் தையையோ வையத்தில் (பெண்)

4. நீராட்ட மாடிமை யிட்டுப் பொட்டிட்டு
நிரம்ப வுடைமைக ளிடுவாள்—வந்து
போராட்ட மாகவே சீராட்டஞ் செய்துன்றன்
புத்தியைப் போக்கடித் திடுவாள்—பின்பு
பாராட்டம் பண்ணியுன் றன்னையும் விட்டுப்
பலர்முகம் பார்த்தவள் கெடுவாள்—சுத்த
மாராட்ட மாகு மணந்தெளி யார்க்கு
மருண்மழை யேபொழிந் திடுவாள்—கெட்ட
சீராட்டி யாய்வந்து முடிவாள்—அந்த
நாரிக ளாசைவைத் தையையோ வையத்தில் (பெண்)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

பாடையிலே துறவடைந்து பரமடைந்த குணங்குடியார்
பகர்ந்த ஞானம்

பாடையிலே துறவடைந்து பரமடைந்தா ளந்தசுகம்
படைத்தி டாரைப்
பாடையிலே போட்டுமிடு காட்டிலிடப் படுமுனையும்
பலரு மந்தப்
பாடையிலே போட்டெடுக்க நாள்வருமென் றறிந்திலையே
பாவி நெஞ்சே.

## 4

*இராகம்-கல்யாணி; தாளம்-சாப்பு*

*பல்லவி*

எத்தனை யாட்டம்நீ யாடினும் பதைப்பற்
றிருந்திடுவாய் நெஞ்சமே (எத்தனை)

*அநுபல்லவி*

புத்திசற் றேனும் படைத்த யெனிலந்தப்
போதனை யேயுனைத் தேற்றும்—மூன்று
வாதனை யும்மற மாற்றும்—யோக
சாதனை மீதினு மேற்றும் (எத்தனை)

*சரணங்கள்*

1. நற்றவஞ் சித்திக்கு முத்தி தருந்தச
நாதத்தை யுஞ்சுத்தி யாக்கும்—கட்டிச்
சுற்று மறுதலக் கட்டு மவிழ்ந்திடச்
சோடசப் பின்னலை நீக்கும்—பாயும்
பத்தோ டிரண்டு கலையுமெட் டாகப்
பராபர மும்முகம் பார்க்கும்—நல்ல
சுத்த மயப்படி கச்சுயஞ் சோதிச்
சுழுமுனை யுந்தலை காக்கும்—எமன்
உத்தியோகந் தனைப் போக்கும்—வந்து
வெற்றிக் குணங்குடி வாய்க்கும் (எத்தனை)

2. காற்பசு தன்னை வெளியில் விடாமலுங்
கட்டித் தொழுவினின் மாட்டும்—வீட்டில்
பாற்பசு வைப்பக்கு வத்துடன் வைத்ததன்
பாலைக் கறந்துனக் கூட்டும்—ஏழை
போற்பசி தன்னையும் போக்கித் தபசுக்குப்
போவென்ன நேர்வழி காட்டும்—அதன்
மேற்படக் காலா லுதைத்து வுதைத்தின்னும்
விட்டேனோ வென்றுகை தீட்டும்—உன்றன்
மாற்படி யாவையுஞ் சாட்டும்—மாட்டை
மேய்ப்பக் குணங்குடி யோட்டும் (எத்தனை)

3. வஞ்ச மறலி வரவிடு தூதான
வஞ்சிய ராசைவிட் டோடும்—மெத்த
பிஞ்ச பழங்கந்தை யாணபுன் மாயையைப்
பேயர் தலைதனிற் போடும்—நாளுந்
தஞ்சமென் றென்குரு நாதன் திருவடி
தன்னைத் தொழுதிட நாடும்—இனி
என்செய லேது மிலையென் றவரிடம்
ஏங்கியேங்கி நையப் பாடும்—நின்று
அஞ்சாம லஞ்சியே வாடும்—மிகக்
கெஞ்சிக் குணங்குடி தேடும் (எத்தனை)

4. இடைபிங் கலைக்கிடை யில்லடை யுஞ்சுழு
எளிதில் நடையற மீறும்—பாயும்
மடைகண்டு வருமதி யமுதமுட் கொண்டு
வரவரக் காயமுந் தேறும்—இந்த
உடலோ டிருந்து தவஞ்செய்ய வுங்கற்பம்
உண்டெம கண்டமும் மாறும்—பின்பு
குடங்கவிழ் நீரென்ன நீசெய் பவங்களுங்
கொட்டுண்டு மண்மீது சாரும்—முன்னைத்
தொடரிரு வினைவெந்து நீறும்—அருள்
படருங் குணங்குடி யேறும் (எத்தனை)

5. ஆதார மாறினுஞ் சேதாரம் வாராது
அடுக்கடுக்காகவே விடுக்கும்—எமன்
பாதை பார்த்து நிற்குங் கண்ட மெனுமயிர்ப்
பாலத்தையு மெள்ளக் கடக்கும்—பின்பு
காதுகண் ணாக்கொடு மூக்குமொன் றாகக்
கவிந்துமந் நாளத்தை யடக்கும்—என்றுஞ்
சூதான மாகிய வெட்டவெளி சென்று
சொக்கி மயக்குண்டு படுக்கும்—குரு
நாத னருளடை கிடைக்கும் பரஞ்
சோதி குணங்குடி யடுக்கும் (எத்தனை)

6. உந்தியின் கீழ்நின் றுதித்த சுழுமுனை
ஓங்காரக் கோதண்டம் பிடிக்கும்—வருஞ்
சந்திரன் சூரியன் மேல்வைத்துத் தாக்கிச்
சமர்பொருது ஜெயம் படைக்கும்—சற்றே
குந்தி யிருந்திளைப் பாறித் தெளிந்து
குசாலாகச் சாய்ந்தங்கே படுக்கும்—அதற்
கந்தியுஞ் சந்தியும் உச்சிமுக் காலமும்
ஆதரித்துப் பூசை நடக்கும்—தேவ
இந்திரன் போனின்று நடக்கும்—இங்கே
வந்து குணங்குடி கொடுக்கும் (எத்தனை)

7. சொல்லித் திரிதற் கறிவுகற் றதோஷ
தோஷத்தை நாசத்தி லாக்கும்—கற்றும்
நல்ல வறிவுற்ற புலையரைக் காண்கின்
நடுங்கி யுடலெங்கும் வேர்க்கும்—மலை
கெல்லி யெலிபிடித்த கதைபோற் காசுக்
கேயலை யாதுனைக் காக்கும்—பாயும்
வல்லயம் போல்வரு மாயை யாஞ்சாண்டி
மாட்டையும் மாசண்டி யாக்கும்—கரு
நெல்லிக் கனிகைக்குள் வாய்க்கும்—அருள்
முல்லைக் குணங்குடி பூக்கும் (எத்தனை)

8. காமக்கு ரோதக் களையைக் களைந்து
கடுஞ்சுழிக் காற்றிலே தூற்றும்—யோக
பூமிக்குள் மோன வித்தைப் பதித்துப்பரி
பூரண மாய்ப்பயி ரேற்றும்—மேற்
சோமன் மதிவட்ட மீது சுழுமனைச்
சொக்கித் தெளிந்திடத் தேற்றும்—தாயை
வாமம் வைத்துப்பூசை பண்ணிப் பணிந்திட
வாரி யமிர்தத்தை யூற்றும் நல்ல
நேமத் துடனுனைப் போற்றும்—என்றுஞ்
சேமக் குணங்குடி யேற்றும் (எத்தனை)

9. இல்லந் துறந்து வரும்பல தொல்லைகள்
எல்லா மெடுத்தெடுத் தெறியும்—மூடும்
வல்லிரு ளாகிய மாமாயை தந்த
மயக்கும் விட்டுவிட்டுப் புரியும்—ஒரு
எல்லையிற் பேரின்ப வெள்ளப் பெருக்கில்
எடுத்துண்டுந் தன்வயி னிறையும்—பின்பு
அல்லும் பகலுஞ் சுகானந்த நிட்டையில்
அண்டமும் பிண்டமுந் தெரியும்—எங்கும்
சொல்லும் அருள்மழை சொரியும்—மெத்த
நல்ல குணங்குடி புரியும் (எத்தனை)

10. கூசிக் குலாவு மடவாரைக் கொஞ்சிக்
குலவாம லுங்கையை விடுக்கும்—வன
வாசத்துக் கேகித் தவம்புரி தற்கிச்சை
வைத்து வைத்துத்துடி துடிக்கும்—கெட்ட
ஆசைப் பசாசைத் துரத்தித் துரத்திவந்
தண்டவொட் டாமலே யடிக்கும்—ஞான
தேசிகன் பாதார விந்தத்தை யேமோனச்
சின்முத் திரையாகப் பிடிக்கும்—உப
தேசத்துக் காரைப்பந் தடிக்கும்—நமக்
கீசன் குணங்குடி கிடைக்கும் (எத்தனை)

11. செத்தாலும் வைத்தடி வாங்காம னிற்கின்ற
தீரத்தை யேதீர மாக்கும்—சற்றும்
மெத்தாதி புத்திவந் தெற்றாம லுன்றனை
மேவி விழுந்துகை தூக்கும்—எங்கள்
சித்தாதி கட்கருள் செய்தநன் முத்தியுஞ்
சித்தியும் வெற்றியும் வாய்க்கும்—நின்று
எத்தா லினிப்பிழைப் போமென வெண்ணாமல்
எங்கோ னருட்பாது காக்கும்—ஒரு
மித்த பவங்களைப் போக்கும்—மோன
வித்தைக் குணங்குடி வாய்க்கும் (எத்தனை)

12. எண்ணாத எண்ணத்தி னூடே படர்ந்தெழும்
இன்ப வினோதத்தை வீட்டும்—கெட்ட
மண்ணான மூவாசை புண்ணாக வும்நல்ல
மானாபி மானத்தை யோட்டும்—என்றன்
கண்ணே மணியேயென் கண்ணுத லேயெனக்
கண்ணீரு முன்னீரு மூட்டும்—பின்பு
தண்ணீரு மண்ணுங் கலந்தது போற்சிந்தை
தத்தளிக்கநிலை நாட்டும்—நடம்
பண்ணும் பரவெளி சூட்டும்—உய்யும்
வண்ணக் குணங்குடி காட்டும் (எத்தனை)

13. வித்தக னார்சொன்ன புத்திபுன் மாயையை
வேங்கைப் புலியெனச் சாடும்—நம்மை
வெற்றிகொண் மாதர் முயக்களற் றுக்கேணி
விரிவோ டவுங்காயப் போடும்—உன்னைப்
பெற்றார் பிறந்தார் சுற்றத்தார் முதலான
பித்தர்க் கெல்லா முகம் வாடும்—நல்ல
பத்தரை மாற்றுப் பசும்பொன்னை யொத்த
பரவெளிப் பம்பர மாடும்—மேலுங்
கத்த னருளுங்கை கூடும்—நாளுஞ்
சித்துக் குணங்குடி யாடும் (எத்தனை)

14. எங்கு நிறைந்த பெரும்பொரு ளென்னுள்ளே
இருந்துகொண்டேவிளை யாடும்–ஒரு
கங்கு கரையறப் பொங்கிப் பரவிக்
கருணைக் கடல்வந்து மூடும்–அருள்
வங்கமுந் தங்காம லிங்குவந் தென்னை
மகிழ்ந்தடுத் தேற்றிக்கொண்டோடும்–நாளும்
மங்காத தங்க மவுனப் பொருளும்
மலைமலை யாகக்கை கூடும்–இன்னும்
பங்கு கொடுக்கவு நாடும்–யோகந்
தங்குங் குணங்குடி சூடும் (எத்தனை)

15. வாசாம கோசர வான்பொரு ளென்றன்
மடிமீது செங்கீரை யாடும்–மோன
தேசிகன் பாதார விந்தத் தெய்தத்தத்
தெய்யெனக் கூத்துகள் போடும்–எங்கள்
ஈசன் றிருவருள் தானாணை கொட்டிப்போர்
இன்பக் கோலாகலம் பாடும்–எம
பாச மறித்துக்கொண் டென்னச்சு மட்டமும்
பாய்ந்து மடமடென் றோடும்–கோட்டை
வாயிற் கடந்துட்சென் றாடும்–மேலே
பேசுங் குணங்குடி கூடும் (எத்தனை)

*கொச்சகக் கலிப்பா*

ஐயையோ என்விதியை யாரிடத்திற் சொன்னாலும்
ஐயையோ என்றே யழுங்கவலை கொள்வார்தாம்
ஐயையோ வையகத்தி லாருமிலை யுன்னையன்றி
ஐயையோ அடிமையைக்கை யணைப்பாய் குருபரனே.

## 5

### இராகம்-பைரவி; தாளம்-சாப்பு

### பல்லவி

ஐயையோ நானென்செய் வேன்என் விதிவசம்
ஆருடனே சொல்லி யழுவேன் (ஐயை)

### அநுபல்லவி

மெய்யெடுத்தும் பொய்யா வீணாள் கழிந்துபோச்சு
பொய்யி லாதவென் னையனருளாது
கையுமெய்யுமாய்க் கண்ணிற் காணேனே (ஐயை)

### சரணங்கள்

1. பார்க்கப் பலவித மறைவாய்ச் சமயலான
பதினாலு லோகமு நிறைவாய்
வாக்கு மனமுமதி னோக்க மதுவாய்நின்றுந்
தீர்க்கமா யறியாமற் றேடியே
பார்க்குள்ளே யலைந் தலைந்துங் காணேனே (ஐயை)

2. முன்னோர் செய்திடு பாவலாபமோ பாதகமோவென்
மூதேவித் தனங்கொள்பிர தாபமோ
என்ன கொடுமைகளோ வென்றலை விதிதானோ
இன்ன பேதமில் லாத சோதியை
இன்னு மென்னுட் கண்ணிற் காணேனே (ஐயை)

3. ஆசாபாசங்க ளொவற்றையும்விட்டு அநுதினம்
ஆனந்த வெள்ளத்து ளகப்பட்டும்
ஓசைமணி பூரகத் துள்ளெங்குந் தேடியும்
வாச மொய்த்த குணங்குடிப்பர
தேசி யெய்த்து மிளைத்துங் காணேனே (ஐயை)

## 6

இராகம்-கேதாரகௌளம்; தாளம்-ஆதி

பல்லவி

சூத்திரப் பாவைக் கயிறற்று வீழுமுன்
சூட்சக் கயிற்றினைப் பாரடா—அதி
சூட்சக் கயிற்றினைப் பாரடா. (சூத்தி)

அநுபல்லவி

நேத்திரமி ரண்டினும் நேரே யிலங்கிய
நீடொளி போன்றது தேடரி தாகிய
காத்திர முள்ளது யாவும் பொதிந்தது
கையிலுங் காலிலு மெட்டப் படாததோர் (சூத்தி)

சரணங்கள்

1. சாத்திர வேதஞ் சதகோடி கற்றாலும்
சமய நெறிகளி னாசாரம் பெற்றாலும்
பாத்திர மேந்திப் புறத்தி லலைந்தாலும்
பாவனை யாலுட லுள்ள முளைந்தாலும்
மாத்திரைப் போது மெமன்வரு மப்போது
மற்றொன் றுதவா துதவா துதவாது
சூத்திரமாகிய தோணி கவிழுமுன்
சுக்கானை நேர்ப்படுத் திக்கணமே சொன்னேன் (சூத்தி)

2. உற்றுற வின்முறை யார் சூழ்ந் திருந்தென்ன
ஊருட் சனங்களெல் லாரும் பணிந்தென்ன
பெற்றாரும் பெண்டீரும் பிள்ளை யிருந்தென்ன
பேணும் பெருஞ்செல்வ ஆணவத்தா லென்ன
கத்தன் பிரிந்திடிற் செத்த சவமாச்சு
காணாது காணாது கண்டதெல் லாம்போச்சு

எத்தனை பேர்நின்றுசூக்குர லிட்டாலும்
எட்டாமற் போய்விடும்கட்டையல் லோவிந்தச் (சூத்தி)

3. மாயப் பிறவி வளைய யடைத்திட
மாறாத் தியான மனத்தி னினைத்திட
காயா புரிக்கோட்டை கைக்கு ளகப்பட
காணு மணிச்சுடர் தானே 'விளங்கிட
ஆயு மறிவுடன் யோகத்தி னாலெழும்
ஆனந்தத் தேனையுண் டன்புடனே தொழும்
தாயா யுலகத்தை யீன்ற குணங்குடித்
தற்பரனைக் கொண்டு வப்புடனே சென்று (சூத்தி)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

வங்கெனுமோர் மொழியாதி பீடமியோ கத்தினது
மகிமை பெற்றோர்
வங்குசொறி யுங்கொடுக்கும் பெண்களல்குற் புண்களுக்குள்
மடிய மாட்டார்
வங்குசொறியுங் கொடுக்கும் பெண்களல்குற் புண்களுக்குள்
மடியா வண்ணம்
வங்கெனுப தேசமெங்கள் குணங்குடிமா கவனெனக்கும்
வைத்தி டானோ.

## 7

*இராகம்-சாவேரி; தாளம்-சாப்பு*

*பல்லவி*

வங்கெனு முபதேச மெங்கள் குணங்குடி
வள்ளலென் றோதுவனோ

*அநுபல்லவி*

அங்கென்ற னுட்சரங் கும்பித் தடங்கவும்
ஐம்பத்தோ ரட்சரந் தம்பித் தொடுங்கவும் (வங்)

*சரணங்கள்*

1. உடல்பொரு ளாவியோ டெவையுங்கைக் கொள்ளவும்
உவந்தென்னை யுமுய்யக் கொள்ளவும்
நொடிக்குமுன் மனவாசி மேலேறிக் கொள்ளவும்
நூலேனி மேலேறிக் கொள்ளவும்
படிமுடிச் சானவா றாதாரம் விள்ளவும்
படிக்குப்படி கடந்து கொள்ளவும்
கடினத்துடன் கண்டதையுங்கீழ் தள்ளவும்
காதளவுக்குமேற் கொள்ளவும்
நடனமிடும்பரி துள்ளாட்ட மெடுக்கவும்
நடித்துநடித்துக் கொண்டாட்டங் கொடுக்கவும்
இடைபிங்கலை கண்டத் தாட்ட மொடுக்கவும்
எனக்குப் பயந்தெம னோட்டம் பிடிக்கவும் (வங்)

2. கம்பமற்றவருட் கடலுள்வாய் மடுக்கவும்
களகளென்றே சும்மா குடிக்கவும்
செம்பொற் கமலா சனமீதிற் படுக்கவும்
செங்கீரை யாடித் துடிக்கவும்
வம்பரைப் போல்விளை யாட்டுப் படிக்கவும்
வாசியி லேறி நடிக்கவும்
ஒன்பது வாயிலி னிலையைப் பிடிக்கவும்
ஒளியினோடு காலை மடிக்கவும்
தம்பிரா னெனு மெல்லை சூட்டவும்
தாக்குச் சுழிமுனை வில்லைப் பூட்டவும்
எம்பிரானென்னுங் கல்லை யோட்டவும்
எனக்குப் பயந்தெமன் பல்லைக் காட்டவும் (வங்)

3. தொட்டுப தேசித்த வுடன் சோதி தட்டவுந்
தொடுமுன்னே சிவயோகங் கிட்டவும்
எட்டுக் கயிற்றிலென் காலிரண்டுங் கட்டவும்
எட்டியவன் காலைக் கட்டவும்

கட்டைப் பனைதனி லுங்கள்ளுக் கட்டவும்
கள்ளுக்கள்ளாகச் சும்மா கொட்டவும்
கொட்டிய கள்ளுண்ட பின்போதை முட்டவும்
குதிகொண்டு கெக்கரி கொட்டவும்
நிட்டை படைத்தனு பூதி மிஞ்சவும்
நிருவிகற்ப சமாதி துஞ்சவும்
இட்டப் படிக்கரு ணின்று கொஞ்சவும்
எனக்குப் பயந்தெம னின்று கெஞ்சவும் (வங்)

4\. கத்தன்றிருவடி பெற்றவ னாகவும்
கட்டை கடைத்தேற லாகவும்
நற்றவ முற்றவுஞ் சித்தனு மாகவும்
நாவுமந் நாளத்து ளேகவும்
பத்து வகை நாத முஞ்சுத்த மாகவும்
பத்தோ டுருகலை சாகவும்
ஒற்றைக்கா லான்மயிர்ப் பாலத்தி லேகவும்
ஒருபாய்ச்ச லில்தாண்டிப் போகவும்
வைத்த தீட்சையுந் திருத்த மாகவும்
வாலை யம்பிகை பொருத்த மாகவும்
எய்த்த வருத்த மருத்த மாகவும்
எமக்குப் பயந்தெம னொருத்தன் சாகவும் (வங்)

## 8

*இராகம்-புன்னாகவராளி; தாளம்-ஆதி*

*பல்லவி*

யானே யுனைநம்பினேன்—குணங்குடி
யானேயென் னாண்டவனே

*அநுபல்லவி*

யானே யுனைநம்பி னேன்சாகச் செய்வையோ
யானாக நின்றென்னை நான்சாகச் செய்வையோ

பேய்நாய் கண்டசிறு மானாகச் செய்வையோ
பெருமானு மெம்பெரு மானாகச் செய்வையோ
(யானே)

*சரணங்கள்*

1. பாவைய ரைப்பாவி கூடிடச் செய்வையோ
பாவையர்க் குப்பயந் தோடிடச் செய்வையோ
பாவங்கள் வந்தெனை மூடிடச் செய்வையோ
பாவமெல் லாம்விட்டுச் சாடிடச் செய்வையோ
பாவிகள் போல்முகம் வாடிடச் செய்வையோ
பரஞ்சோதி யம்பர மாடிடச் செய்வையோ
பாவாணர் போல்வீணிற் பாடிடச் செய்வையோ
பரிபூர ணானந்தம் பாடிடச் செய்வையோ
(யானே)

2. சண்டாள ரைவாழ்த்திக் கொண்டாடச் செய்வையோ
சற்குரு வைப்போற்றிக் கொண்டாடச்செய்வையோ
தொண்டாசை யென்னையுந் துண்டாடச் செய்வையோ
தொண்டாசை தன்னையுந் துண்டாடச்செய்வையோ
முண்டரைப் போற்றிண்டு முண்டாடச் செய்வையோ
முத்திதந் துதுதி கொண்டாடச் செய்வையோ
வண்டாய்த்து வண்டுது வண்டாடச் செய்வையோ
வந்தருள் தந்தெனைப் பந்தாடச் செய்வையோ
(யானே)

3. வெட்ட வெளியிலென்னை விட்டிடச் செய்வையோ
வித்தகன் பாதத்தைக் கட்டிடச் செய்வையோ
பட்டதெல் லாங்கேடு கெட்டிடச் செய்வையோ
பட்டதற் குப்பலன் கிட்டிடச் செய்வையோ
நெட்டை மரம்போலப் பட்டிடச் செய்வையோ
நீசனுக் குமருள் எட்டிடச் செய்வையோ

மட்டியென் றென்கையை விட்டிடச் செய்வையோ
வாசியும் பாவிக்குக் கிட்டிடச் செய்வையோ
(யானே)

4. மதபேத மோதப் படுத்திடச் செய்வையோ
மதமற்ற ஞானம் படித்திடச் செய்வையோ
விதியற்றுப் பிச்சை யெடுத்திடச் செய்வையோ
வேதாந்த தீட்சை யெடுத்திடச் செய்வையோ
விதிவந்தென் னுயிரைப் பிடித்திடச் செய்வையோ
விதியென்று காலைப் பிடித்திடச் செய்வையோ
மதுவென்று கள்ளைக் குடித்திடச் செய்வையோ
மதியமிர் தத்தைக் குடித்திடச் செய்வையோ
(யானே)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

எல்லாரு மானிடரோ வெங்கள்குணங் குடியானை
யிறைஞ்சி னோர்கள்
எல்லாரு மானிடரா மெங்கள்குணங் குடியானை
யிறைஞ்ச வேண்டும்
எல்லாரு மானிடரே யெங்கள்குணங் குடியானை
யிறையே யென்றே
எல்லாரு மிறைஞ்சுமெங்கள் குணங்குடியான் பொற்பதமெற்
கெய்தி டாதோ.

9

*இர்ாகம்-அசாவேரி; தாளம்-சாப்பு*

*பல்லவி*

எங்கள் குணங்குடி யாண்டவன் பாதத்தை
என்றிந்தப் பாவிகண் கண்டிடுமோ

அனுபல்லவி

பொங்குந் திருவருளும் தங்கும் படிக்கருளும்
பூரண மயமா நின்ற காரணக் கடவுளான

சரணங்கள்

1. கூட்டிக் கருணைவிழி காட்டிக் காட்டிக் கையை
கொடுத்துக் கொடுத்தணைத்துப் பிடித்துப் பிடித்து மெய்யைப்
பூட்டிப் பூட்டியருள் சூட்டிச் சூட்டித்தரும்
பூரண மயமாநின்ற காரணக் கடவுளான (எங்)

2. முத்திவித் தாய்ப்பதிந்தும் மொய்த்தபயி ராயெழுந்தும்
மூன்று மண்டலத்தை முட்டி மூடியொளியால் விளைந்தும்
புத்தியு மொட்டாது பூத்த பொற் பையற் புகுத்தருளும்
பூரண மயமாநின்ற காரணக் கடவுளான (எங்)

3. வாதனை மாற்றியோக சாதனை யேற்றியேற்றி
வாக்கு மனமணுகா வாழ்வினை வாழ்த்தியேத்தப்
போதும்போ துமெனப் போதித் தருள்புரிய
பூரண மயமாநின்ற காரணக் கடவுளான (எங்)

4. சிற்பரத்துக் குட்சிறந்த தற்பரத்துக் குட்பிறந்த
சிற்பரத்துக் குட்பிறந்து சொற்படிகம் போற்சிறந்து
பொற்பிரபைக் கொப்புளிக்கும் அற்புதகர்ப் பூரமாகி
பூரண மயமாநின்ற காரணக் கடவுளான (எங்)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அன்றெழுதி னவனெவர்க்கு மெங்கள்குணங் குடியானா
மவன்கை யாலே
அன்றெழுது மெழுத்தையழித் தெழுதிடவல் லபமெவர்க்குண்
டார்க்கு மில்லை

அன்றெழுது மவனேதா னழித்தெழுத வல்லவன்கா
ணாத லாலே
அன்றெழுது மெழுத்தழித்தென் மண்டையிற்றா னல்லெழுத்தொன்
றெழுதி டானோ

## 10

### இராகம்-பியாகடை: தாளம்-சாப்பு

### பல்லவி

ஆண்டவ னென்செய்வனோ–குணங்குடி
ஆண்டவ னென் செய்வனோ

### அநுபல்லவி

ஆண்டவனனைத்தென்னை யருகில்வைத்திடுவனோ
தீண்டியும் பார்க்காமற் றெருவில்விட் டிடுவனோ (ஆண்)

### சரணங்கள்

1. தேனைப் பழித்தபே ரின்பங் கொடுப்பனோ
தேவடி யார்கள்சிற் றின்பங் கொடுப்பனோ
மோன வருட்பரி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

2. உச்சிக்குள் வைத்த பொருளைக் கொடுப்பனோ
உச்சந் தலையில்ரண்டு குட்டுக் கொடுப்பனோ
முச்சுட ரொடுசோம வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

3. வற்றா அருட்செல்வங் கொள்ளை கொடுப்பனோ
மண்ணைத்தா னள்ளிக்கை கொள்ளக்
கொடுப்பனோ
முத்தி தருமோன வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

4. நாக்கந் நாளவாயிற் காக்கக் கொடுப்பனோ
நாய்போல் வாயில்தோறுங் காக்கக் கொடுப்பனோ
மூக்கு முனையில்வன்னி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆன்)

5. சிட்டனா கவும்வாசி கட்டிக் கொடுப்பனோ
செட்டையிற் றானிரண்டு தட்டிக் கொடுப்பனோ
முட்டமுட் டச்சட்ட திட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆன்)

6. கண்டங் கடக்கத்தான் காட்டிக் கொடுப்பனோ
காலனுக் கென்னைத்தான் காட்டிக் கொடுப்பனோ
முண்டம் படாநிலை விட்டுக் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆன்)

7. செத்துப்போ முன்காய சித்தி கொடுப்பனோ
செத்துப்போ வென்றுசா பத்தைக் கொடுப்பனோ
முத்தமிட் டிட்டுநல் லிட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆன்)

## 11

*இராகம்-செஞ்சுருட்டி: தாளம்-சாப்பு*

*பல்லவி*

ஐயையோ என் விதிவசம் ஆருடன் சொல்வேன்

*அநுபல்லவி*

நையுமுடல் மெய்யென்றெண்ணிப் பொய்யனாகினேன் (ஐயை)

*சரணங்கள்*

பெண்டுபிள்ளை யென்றுமனம்
பித்துக் கொள்ளுதே—நாம்

என்றமிருப் போமெனவுஞ் சண்டை துள்ளுதே (ஐயை)
பழிக்கோ வென்னுடலைப் படைத்து
வளர்ப்பேன்—இதை
புழுக்கோ நாய்நரிக்கோ பிடுங்கக் கொடுப்பேன் (ஐயை)
கையில்வெண்ணெய் தனைவிட்டு நெய்யைத் தேடுகிறேன்—
எங்கள்
ஐயன்பாதந் தனைவிட்டுப் பொய்யைக் கூடுகிறேன் (ஐயை)
மாதுமக்களென்று மென்மதி மயங்குதே—இது
சூதுசெய்வா ரோடுகூடி வாது பேசுதே (ஐயை)
வாக்குமன மணுகாது வான்பொரு ளுள்ளே—அதை
நோக்கிநோக்கிப் பார்ப்பவர்க்கு
வாய்க்குமோ கொள்ளை (ஐயை)
புந்திமகி ழுண்டுடுக்கச் சிந்தை துள்ளுதே—தீய
அந்தகாரந் தன்னையக மாக்கிக் கொள்ளுதே (ஐயை)
காயிலை யுதிர்ந்த சருகுகனி தின்று—நாம்
ஆயுமறை முடிவை தேடிப்போவது மென்று (ஐயை)
தேகத்தி னென்பு வெளியாக வாடினோர்—அவர்
ஆகமச் சொற்படிக்கே யருளைக் கூடினோர் (ஐயை)
ஆழிகரை யின்றிநிலை நிற்க வில்லையோ—யான்
பாழிலலை யாதெனக் கோர்பாதை யில்லையோ (ஐயை)
ஆசைபாச மற்றவ ரருளைப் படைப்பார்—அவர்
தேசிகன் குணங்குடி தெருவி லிருப்பார் (ஐயை)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

என்றிலையி லிட்டபொல்லா விதியானற் குணங்குடிவாழ்
விணங்கு தில்லை
என்றலையி லிட்டபொல்லா விதிக்கெண்ணே யிட்டாலு
மேசு தில்லை

என்றலையி லிட்டவிதிக் கினியெவர்பட் டுத்தொலைப்பா
    ரெனநின்றேங்கி
என்றலையி லிட்டவிதி தனைநினைந்து பாவியா
    னிடைகின்றேனே.

## 12

*இராகம்-ஆகிரி: தாளம்-அடசாப்பு*

*பல்லவி*

ஏதேது செய்திடுமோ பாவிவிதி ஏதேது செய்திடுமோ

*அநுபல்லவி*

ஏதேது செய்துவெனை மோசஞ் செய்யுமோ
மாதவஞ் செய்து மனுவாகச் செய்யுமோ (ஏதே)

*சரணங்கள்*

1. சற்றுநல் லறிவற்ற மாடாகச் செய்யுமோ
    சாகா வரம் பெற்றுக் காடேகச் செய்யுமோ
கற்றறி மூடர்கட் கீடாகச் செய்யுமோ
    கற்பின் குணங்குடி வீடாகச் செய்யுமோ (ஏதே)

2. கத்திக்கத் திப்பாவி செத்திடச் செய்யுமோ
    கத்தன் றிருவருள் பெற்றிடச் செய்யுமோ
கொத்தும்பெண் ணரவெனைக் கொத்திடச் செய்யுமோ
    குணங்குடி வாழ்க்கைவந் தெய்திடச் செய்யுமோ (ஏதே)

3. செத்த பிணத்தோடு சேர்ந்திடச் செய்யுமோ
    சித்தர் கணத்தோடு சார்ந்திடச் செய்யுமோ
மெத்தப் பணந்தேடி மாய்ந்திடச் செய்யுமோ
    மேலைக் குணங்குடி வாய்ந்திடச் செய்யுமோ

4. பாழான காயத்தைப் பாழாகச் செய்யுமோ
    பாழாகப் போமுன்முப் பாழாகச் செய்யுமோ

தேளான பெண்களுக் காளாகச் செய்யுமோ
தேறிக் குணங்குடிக் காளாகச் செய்யுமோ (ஏதே)

5. தேவடி யாள்வீட்டு நாயாகச் செய்யுமோ
தேவடி யாளுமென் தாயாகச் செய்யுமோ
நாவு ருசிக்கொண்டு பேயாகச் செய்யுமோ
நாதன் குணங்குடிக் கேயாகச் செய்யுமோ (ஏதே)

## 13

*இராகம்-பரிசு: தாளம்-சாப்பு*

*பல்லவி*

அல்லா சூ வென்னுங்கள்—சதா காலம்
அல்லா சூ வென்னுங்கள்

*அநுபல்லவி*

அல்லாசூ வென்னுங்கள் அஞ்ஞானந் தனைவிட்டு
எல்லாரும் வெளிப்பட்டு இப்போதெதிர்ப்பட்டு (அல்)

*சரணங்கள்*

1. வகுத்தசோதி மெய்ஞ்ஞான வாரியைமன முன்ன
வஞ்மில்பர மார்த்த குருவருளிய தென்ன
ஜெகஜால வலைதன்னுட் சிக்கிப்பலவு மின்ன
சிற்சொரூபந் தெரியாமற் செத்திறந்துபோ முன்னம் (அல்)

2. அல்லா சூ வென்ற வரும்பொருளா மென்ன
அனந்த மறைகளு மப்படியே பன்ன
நல்லறி வாளரு நாளுமெடுத்துச் சொன்ன
நன்மையெல் லாமனக் குண்மையிலே மன்ன (அல்)

3. ஆசாபாச மென்னும் அழிபுத்திகளு மற்று
அளவிட்டறிய வொண்ணாதருள்
ஞானந்தனைப் பெற்று

மாசற் றொருளிருமுன் மணிமிருவினை யற்று
மாதா பிதாவெனு மயல்முழுவது மற்று (அல்)

4. மும்மலக் காட்டினை முழுவதைய மரிந்து
மூல நெருப்பினை மூட்டமூட்ட விரிந்து
சின்மய ஜெகஜோதித் தெளிதரவே தெரிந்து
தேசிகன் குணங்குடி தெருவீதியி லிருந்து (அல்)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

புனிதகுணங் குடிவாழ்க்கை போகாமற் பொங்குமிச்சை
பொங்கிப் பொங்கிப்
புனிதகுணங் குடிபடைத்துப் போதபரி பூரணபோ
தகமும் பூண்டு
புனிதகுணங் குடியானைப் போற்றாது போற்றுவார்
போலு மந்தப்
புனிதகுணங் குடியானைப் போற்றியிந்தப் புல்லனும்வாய்
புலம்புவானே.

## 14

*இராகம்-ஆனந்தபைரவி: தாளம்-அடசாப்பு*

*பல்லவி*

கத்திக்கத்தி தொண்டையுங் கட்டிச் செத்தேனே
காணுமெங்கள் குணங்குடிச் சித்தனே

*அநுபல்லவி*

முத்தனே முத்தனே முத்தனே யென்றுங்
கத்தனே கத்தனே யென்று முனைத்தோடி (கத்)

*சரணங்கள்*

1. நாயனே நாயனே நாயனே யென்றும்
மாயனே மாயனே மாயனே யென்றும்
தூயனே தூயனே தூயனே யென்றும்
நேயனே நேயனே யென்று முனைத்தேடி (கத்)

2. ஏகனே யேகனே யேகனே யென்றும்
யோகனே யோகனே யோகனே யென்றும்
மோகனே மோகனே மோகனே யென்றும்
வாகனே வாகனே யென்று முனைத்தேடி (கத்)

3. நாதனே நாதனே நாதனே யென்றும்
நீதனே நீதனே நீதனே யென்றும்
போதனே போதனே போதனே யென்றும்
தூதனே தூதனே யென்று முனைத்தேடி (கத்)

4. நித்தனே நித்தனே நித்தனே யென்றும்
சுத்தனே சுத்தனே சத்தனே யென்றும்
பத்தனே பத்தனே சுத்தனே யென்றும்
அத்தனே அத்தனே யென்று முனைத்தேடி (கத்)

5. ராசனே ராசனே ராசனே யென்றும்
போசனே போசனே போசனே யென்றும்
தேசனே தேசனே தேசனே யென்றும்
வாசனே வாசனே யென்று முனைத்தேடி (கத்)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

கண்டதெல்லாங் கனவாகக் கண்டகுணங் குடியார்நற்
கருணைக் காட்டில்
கண்டதெல்லாங் கனவாகக் கண்டருள்கொண் டவராகக்
கருணை காட்டுங்

கண்டதெல்லாங் கனவாகக் கண்டருள்கொண் டவர்போலக்
கண்மி யாலே
கண்டதெல்லாங் கனவாகக் கண்டிடவோர் கனவேனுங்
கண்டி லேனே.

## 15

இராகம்-காம்போதி: தாளம்-ரூபகம்

பல்லவி

கனவுங் கண்டிலனே – பாவியொரு
நினைவுங் கண்டிலனே

அநுபல்லவி

1. கனவுங் கண்டிலன் காட்சி கொடுக்கவுங்
கர்த்த னருளடை காத்துக் கிடக்கவும்
மனமுந் தேறிப்பொய் வாழ்வை விடுக்கவும்
மாகுணங் குடிமெய் வாழ்வைப் படுக்கவும் (கன)

சரணங்கள்

மானபி மான மடமையைப் போக்கவும்
மாதர்க் கடிமைப் படாதெனைக் காக்கவும்
வானாதி பூத லயம்வந்து வாய்க்கவும்
வாசாம கோசர வாழ்க்கையுஞ் சாய்க்கவும்
மோன மவுன மணிமாலை கோக்கவும்
மூக்கு முனையைச் சுழுமுனை யாக்கவும்
ஞானத் திருநட நாதமுங் கேட்கவும்
நாதன் குணங்குடி பாதையும் பார்க்கவும் (கன)

2. நாதாந்த மோன குருபதம் போற்றவும்
நாவை மடக்கியந் நாளத்து ளேற்றவும்
வேதாந்த வீட்டின் வெளிவாயில் சாத்தவும்
வித்தகன் வந்து விளக்கெடுத் தேற்றவும்

சீத மதிதன் னமிர்தத்தை யூற்றவும்
சின்முத்தி ரையைவைத் தென்மனந் தேற்றவும்
பூத லயத்துட் பொறிகளைத் தாழ்த்தவும்
புண்ணியன் குணங்குடி பொங்கிட வாழ்த்தவும் (கன)

3. பாங்கா யுதவுமெய் கோன்வந் தடுக்கவும்
பஞ்ச கோசமெனுங் கோட்டை பிடிக்கவும்
ஓங்கார வீட்டினுக் குள்ளே யடுக்கவும்
ஒன்றுக்கு ளொன்றா யொடுக்கிப் படுக்கவும்
தேங்கா மரத்தினிற் கள்ளு வடிக்கவும்
தேறற் றெளித்துத் தெளித்துக் குடிக்கவும்
மாங்காயுள் வண்டாய் மயங்கிக் கிடக்கவும்
வாசி குணங்குடி வாயி லடைக்கவும் (கன)

4. கள்ளக் கருத்துகள் கட்டோடே வேகவும்
கன்மந் தொலைந்து கடைத்தேறிப் போக்கவும்
கொள்ளித் தேளான மனமாயை சாகவும்
சுவர்விழி யாரிட்டங் கொட்டுண்டு போகவும்
உள்ளத் திருக்குமற் றுத்தம னாகவும்
ஒப்புர வுந்தப்பி யூரைவிட் டேகவும்
வெள்ளத் திருக்கரு ணையூடு நோகவும்
மெய்யன் குணங்குடிப் பையலு மாகவும் (கன)

5. வேசைய ராசையை வேரோ டறுக்கவும்
வெற்றிக் கொடிகட்டி மீசை முறுக்கவும்
பேசறி யாவூமன் போல் நான் இருக்கவும்
பேயரைப் போலும் பிதற்றிச் சிரிக்கவும்
வாசி நடத்தி வழியைக் குறுக்கவும்
வாசற் படிகிட்ட வந்து நெருக்கவும்
ஓசை மணிமண்ட பத்தைத் திறக்கவும்
உச்சக் குணங்குடிக் குட்சற் றிருக்கவும் (கன)

6. என்னைக் கெடுக்குமென் றன்னைக் கெடுக்கவும்
என்குரு பாதத்தை யெட்டிப் பிடிக்கவும்
பின்னிய பாசந்தன் பின்னல் விடுக்கவும்
பித்தம் பிடித்த மனத்தை யொடுக்கவும்
மன்னும் பரவொளி யும்பந் தடிக்கவும்
மாயைப் பிசாசினை மண்ணின் மடிக்கவும்
கன்னலை யொத்தபே ரின்பம் படைக்கவும்
கத்தன் குணங்குடிச் சித்துங் கிடைக்கவும் (கன)

7. வஞ்ச மறலிக்கு மஞ்சா திருக்கவும்
வஞ்சிய ரைமுத்தங் கொஞ்சா திருக்கவும்
கஞ்சா வபின்வர்க்கங் கசப்பா யிருக்கவும்
காசாசை கொண்டு கலங்கா திருக்கவும்
நஞ்சாம்ப்ர பஞ்சர்க்கு நஞ்சா யிருக்கவும்
நவகண்ட யோகநா லஞ்சா யிருக்கவும்
நெஞ்சம் பதைப்பற்ற நெஞ்சா யிருக்கவும்
நித்தன் குணங்குடி நித்த மிருக்கவும் (கன)

8. பட்டிப் பசுவையுங் கட்டியே போடவும்
பாற்பசு வுங்கட் டவிழ்த்துக்கொண் டோடவும்
மட்டங் குதித்துக் குதித்துக்கொண் டோடவும்
மதிமண்ட லஞ்சென்று மருவியூ டாடவும்
கட்டமு துண்டு களைதீர நாடவும்
காலனை யுங்காலைக் கொண்டுதை போடவும்
பட்டப் பகற்போ லருள்வந்து மூடவும்
பாக்ய குணங் குடிப் பாக்யனைக் கூடவும் (கன)

9. மண்ணான மூவாசை மாட்டேனென் றோடவும்
மாறா வனுபூதி வந்தெனை மூடவும்
எண்ணாத வெண்ணமெல் லாவிட்டுப் போடவும்
என்றன் பிரானரு ளென்றனைத் தேடவும்

புண்ணாளர் போலும் புலம்பிநான் வாடவும்
போதப் பரவெளி பம்பர மாடவும்
விண்ணாடர் போற்றி செயவிளை யாடவும்
மேலைக் குணங்குடி சாலையைக் கூடவும் (கன)

10. அத்து விதப்பிர ணவம்வந் தெற்றவும்
ஆனந்த மான பரமும்வந் தெற்றவும்
கர்த்தவி யத்தின் கடாட்சம்வந் தெற்றவும்
கங்கற்ற பேரருள் கங்கைவந் தெற்றவும்
முத்திக்கு வித்தான மோனம்வந் தெற்றவும்
முப்பாழ் முடிவான மோட்சம்வந் தெற்றவும்
சத்துச்சித் தாநந்தஞ் சற்றுவந் தெற்றவும்
சாந்தக் குணங்குடி தானும்வந் தெற்றவும் (கன)

11. கண்டன வெல்லாங் கனவாகக் காணவும்
கண்ணாடிக் குள்ளொளி போன்முகங் காணவும்
தொண்டாசை மூன்றுந் தொலைந்திடக் காணவும்
சுத்த மயப்படி கச்சுடர் காணவும்
எண்டிசை யுந்தொழு மெங்கோனைக் காணவும்
ஏக பராபர வாகனைக் காணவும்
கண்டங் கடந்தநா தாக்களைக் காணவும்
கடவு ளெனுங்குணங் குடியானைக் காணவும் (கன)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

நம்பினபேர்க் கருடருநற் குணங்குடியா னானகுரு
நாதன் பாதம்
நம்பினபேர்க் கும்பர்களும் பணிசெய்வ ரெனமறைகள்
நவில்கை யாலே
நம்புமன்பர் போலுமிந்தப் பாவியே னெந்நாளு
நாடி நாடி
நம்பினதற் கந்தகுணங் குடியான்செய் ததுவுமென்ன
ஞாயந் தானோ.

## 16

### இராகம்-செஞ்சுருட்டி: தாளம்-சாப்பு

#### பல்லவி

நம்பினதற்குக் குணங்குடி யான்செய்த
ஞாயத்தை யென்ன சொல்வேன்

#### அநுபல்லவி

பம்பரம் போற்சுற்றி யயராமலு மழியாப்
பதிதந் தெனைப்பதிந் திடவும்—பர
கதிவந் தெனக்கெதிர்த் திடவும்—ஞான
மதியிருந் தெனக்குதித் திடவும் (நம்)

#### சரணங்கள்

1. உள்ளதெல் லாங்கொள்ளை கொண்டுகொண்டேயொரு
ஓட்டையோ டென்கையிற் கொடுத்தான் — கேளுங்
கள்ளரைப் போற்கொள்ளைகொண்டதும் பற்றாமற்
காவற் கிடங்கினு மடைத்தான்—அந்தக்
கொள்ளிக்கன் ணனென்னை யுள்ளுக்குள் ளேவிட்டுக்
கொல்லாம லேகொன்று மடித்தான்—ஒரு
எள்ளவேனு மிரக்கமில் லாமலே
என்காலுக் கும்விலங் கடித்தான்—சொந்தம்
தொள்ளியைப் போல்வைத்துப் படைத்தான்—காய
முள்ளுமுள் ளாகவும் வடித்தான் (நம்)

2. பஞ்சைகள் போலென்றன் பாட்டிற் றிரிந்தேன்
பிடாரியைப் போல்வந்து பிடித்தான்—யார்க்கும்
அஞ்சாத கண்டனோ வாவென் றெனைப்பார்த்
ததட்டிப்பல் லைப்பல்லைக் கடித்தான்—யானுங்
கெஞ்சக்கெஞ்ச வாயை மூடுமூ டென்றெனைக்
கீழே காலைவாரி யடித்தான்—கள்ளுங்

கஞ்சா அபின்வர்க்கங் கொள்வார்க்கே தேடின
கன்மமெல் லாம்வாரிக் கொடுத்தான் —என்னைக்
கஞ்சிக்குச் சாம்படிக் கடித்தான்—அவன்
நெஞ்சி லிருந்ததை முடித்தான் (நம்)

3. பெற்ற தகப்ப னமக்கிவன் றானென்றும்
பெற்றார் பிறந்தாரை மறந்தேன்—கொஞ்சப்
புத்தியி னாலவன் பின்னாலே யேநான்
புழுக்கப் பயல்போலுந் திரிந்தேன்—என்னை
முற்றிலுங் காப்பாற்று வானென்று நம்பி
முடிமேலு மேற்றிக்கொண் டிருந்தேன்—அதைச்
சற்றேனு மெண்ணாம லென்முக நோக்கிநீ
சாவக் கடவதென் றறைந்தான்—இன்னும்
மெத்தமெத்த வெல்லாம் பறைந்தான்—ஒரு
மித்துநின் றிப்படிக் கிரைந்தான் (நம்)

4. உண்டுடுத் திப்பூண்டு சையோகித் துச்செல்வத்
தோடுறு நாளில்வந் தடுத்தான்—எந்தச்
சண்டாள னென்னைத்தைக் காதி லுரைத்தானோ
சடுதியில் வந்தெனைக் கடுத்தான்—உள்ளப்
பண்டம் படுதலை யெல்லாங்கைக் கொண்டுமென்
பண்டக சாலையுங் கெடுத்தான்—தன்னை
அண்டின பேரெல்லா மாளாக வும்வாரி
அளவற்ற பாக்யத்தைக் கொடுத்தான்—பின்னுந்
தொண்டுசெய் யென்றெனைத் தடுத்தான்—யானுங்
கொண்டமூ வாசையை விடுத்தான் (நம்)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

எங்கள்குணங் குடியானே தனக்கேதா னானவனாம்
இன்னங் கேளீர்
எங்கள்குணங்குடி யானே யெனக்குமவன் றனக்குமிடை
யில்லை யென்றான்

எங்கள்குணங் குடியானே தனக்குமற்றை யெவர்க்குமா
யெங்கு மானால்
எங்கள்குணங் குடியானை என்றைக்கோ காண்பேனென்
றிரங்கி னேனே.

## 17

*இராகம்-தன்னியாசி: தாளம்-சாப்பு*

*பல்லவி*

எங்கள்குணங் குடியானை என்றைக்கோ காண்பேன்

*அநுபல்லவி*

தங்குபே ரின்பந்தரு மென்றம்பி ரானான (எங்)

*சரணங்கள்*

1. அங்கிங்கெ ணாதெங்கும் பிரகாச மாய்நின்ற
செங்கமல பீடமிசைச் செங்கீரை யாடும் (எங்)

2. சாசுவத வானந்த சகச நிட்டையில்
ஓசைமணித் தீப மதிலொன்றிக் கொண்டுநான் (எங்)

3. பொற்பிரபைக் கொப்பான கற்பூர தீபம்போல்
விற்புருவ மையமணி விளக்காய் நின்ற (எங்)

4. உனக்குள்நா னாகவும்என் றனக்குள் நீயாகவும்
எனக்குள்நா னுனக்குள்நீ யென்றதாய்நின்ற (எங்)

5. அவனன்றி யணுவொன்று மசையா வென்னுமொழிக்
கிவனென்று சொல்லவும் வல்லவனா கியேநின்ற (எங்)

6. அண்டபிண்ட மதற்குமப் புறத்துக் கப்புறமுங்
கொண்டபெரும் பெருமையுங்கொண்டபெரும் பொருளான
(எங்)

7. ஆர்க்கு மரிதாகிய பேராசை மிகவுங் கொண்டு
பார்க்கக்கண் ணாயிரமும் படைத்துக் கொண்டுநான் (எங்)

8. நோக்கினாலு நோக்கொணாது நோக்குக்கு நோக்காய் நின்று
வாக்குமன மற்றபெரு மானவனாய் நின்ற (எங்)

9. பொன்னில மாதராசையும் பூமிதனக் கேயளித்து
மன்னுமுனி வர்க்குதவு மன்னவனான் றானான (எங்)

10. வஞ்சநம னானவஞ்சி யருமஞ்சி யெஞ்சவும்
அஞ்சுபுல வேடருமென் றனைக்கெஞ்சி யஞ்சவும் (எங்)

11. பெண்கொண்டபேர் போலெனையு மண்கொண்டே போமிக்
கண்கொண்ட மணியாய் நின்று காட்சியே தரவும். (எங்)

★★★

*கொச்சகக்கலிப்பா*

என்னை மறந்தே னிருந்தேன் வெகுகாலம்
என்னை மறந்திப் போதிறந்தா லிதுநலமோ
என்னை யறிவா லறிய வெளியில்மகிழ்
என்னையறி வித்தாளா யெந்தாள் குருபரனே.

## 18

*இராகம்-ஆனந்தபைரவி: தாளம்-ஏகம்*

*பல்லவி*

என்னை யறிந்தேனே இனி
ஏகாந்தமானேனே

*அநுபல்லவி*

தன்னை மறந்து தலைகீழாய் நில்லாமல்
என்னை மறந்தும் உனைநினைந் திட்டபோது (என்)

*சரணங்கள்*

1. பார்க்குந் தினந்தோறும் பரிபூரணங் கண்டேனே
நோக்குமிடந் தோறும்நல்ல நூறினிற் சென்றேனே
ஏற்கையுடனே யிருள்வெளி யாயிட
வாக்கு மனமறத் தாக்கிய போதினில்
(என்)

2. உப்புக் குரித்தான உடலுக்கு ளிருந்தேனே
செப்ப முடனழகா யெற்கது சிங்காசனந்தானே
சப்பரம் போலதைத் தப்பாமற் சோடித்தும்
இப்புற மப்புற மொப்புற வாக்கும்போது
(என்)

3. காடு மலைகளெங்கும் பெருங்கானல் பிறந்ததுபோல்
ஆடிய சக்கரமா யகண்டா திசைந்ததனால்
பாடிய நூலினைப் பார்த்தலை யாமலவ்
வேடிக்கை வீட்டில் விளையாடும்
போதினில் (என்)

4. கன்ன மிடுங்கருவி கரணங்களைச் சுட்டேனே
சின்னப் படுஞ்சட்த்தைச் சிறைச்சாலை யிலிட்டேனே
நின்னைய மான குணங்குடி நாதனை
உன்னியெல் லாம்புற மோட்டிய போதினில்(என்)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

பெண்களுக்குப் பேயுமன மிரங்கிடுமென் றெவ்வுலகும்
பேசக் கேட்டேன்
பெண்களுக்குப் பேயுமன மிரங்கியொரு பேச்சேனும்
பேசக் கேளேன்
பெண்களுக்கு மண்களிக்கப் பெற்றபிள்ளை யாகியென்மேற்
பிரியம் வைத்த

பெண்களுக்குக் குணங்குடிவாழ் வெய்துமா றுபதேசம்
பேசு வேனே.

## 19

### *இராகம்-சௌராஷ்டிரம்: தாளம்-சாப்பு*

### *பல்லவி*

தாய்மார்களே பாவி சொல்வதைத்தான் சற்றுந்
தள்ளாமற்கேட்டுக் கொள்வீர்

### *அநுபல்லவி*

பூமாதேவி யானை யாக நரகத்திற்
போகாம லும்பாது காக்குந்—தீயில்
வேகாம லுங்கையைத் தூக்கும்—பாவி
ஆகாமலு முகம் பார்க்கும் (தாய்)

### *சரணங்கள்*

1. பொன்னாசை காட்டிப் புருட ருமையொரு
புண்யமுஞ் செய்யாமற் கெடுப்பார்—பின்பு
சொன்னத்தை வாரி யிறைப்பார்—கடைசியில்
தோட்டி கையிலுமை விடுப்பார்—உங்கள்
கென்னசொன் னாலும் தெரியவில் லையினி
ஏதுப தேசத்தைப் படிப்பேன்—ஐயோ
தன்னாலே தான்கெட்டா லண்ணாவி யென்செய்வான்
தன்னீரைக் கண்ணினால் வடிப்பான்—அவன்
சொன்னதைக் கேட்கிற்கைப் பிடிப்பான்—உம்மை
முன்னே குணங்குடி கொடுப்பான் (தாய்)

2. பெண்ணாலே கெட்டோமென் றுங்களைத் திட்டாத
பேரை யுலகத்திற் கண்டிலேன்—எந்தன்
கண்ணானை யுங்களுக் கொத்தாசை சொல்லிக்
கருத்தி லுவப்பாரைக் கண்டிலேன்—நாளும்

மண்ணான வாசை மயக்கங்கொண் டேபாவ
மண்ணைவா யிற்போட்டுக் கொள்கிறீர்—இன்னும்
நண்ணருஞ் சொர்க்கப் பதத்தையும் விட்டு
நரகக் கனல்மூட்டிக் கொள்கிறீர்—அதை
எண்ணாமற் றான்விட்டு நீக்கினால்—உமக்
கண்ணல் குணங்குடி வாய்க்குமே (தாய்)

3. புதுப்பானை தன்னையுங் கரிப்பானை யாக்குவார்
பொன்னான மேனியும் போக்குவார்—சோதி
மதிப்போ லிவர்முகம் வறுவோடு போலாக
வாலைப் பருவத்தைப் போக்குவார்—இவள்
கதிகெட்ட கிழநாரி யென்றுபுறந்
திண்ணையிற்
கடத்திவைத் துயிரையும் போக்குவார்—அந்தச்
சதிகேட ருறவைத்தா னீக்கினால்—பர
கதிதரு குணங்குடி வாய்க்குமே (தாய்)

4. தாங்காத மையலுந் தருகுவர் பின்பும்மைத்
தளரு நரையெருமை யாக்குவார்—தூங்கித்
தூங்கி விழுந்தொத்த லாக நரம்பென்புந்
தோலுந் துருத்தியு மாக்குவார்—முகம்
வீங்கித் தலைநடுங்கிக் கையுங்கா லுமுடங்கி
வேடிக்கை யாங்கிழவி யாக்குவார்—மூச்சை
வாங்கிக்கொக் குக்கொக்கென் றிருமி யிருமிக்கொண்டு
வலிக்குங் கிடைப்பிணமு மாக்குவார்—அந்த
தீங்கர்க ளுறவைத்தா னீக்கினால்—அருள்
ஓங்குங் குணங்குடி வாய்க்குமே (தாய்)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசியர் விருத்தம்*

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கமா வார்களோ
முகத்தின் மயிர் விரித்தோ ரெல்லாம்

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்க மெவனவன்கான்
குணங்குடி பால் விரைந்து கொண்டோன்
மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கமா காதா
ளெதற்காவான் விசையோ டென்போல்
மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கமென்கூட
மூலைவிட்டு வெளிவ ரானோ.

## 20

### கண்டனம்

*இராகம்-அடாணா: தாளம்-சாப்பு*

*பல்லவி*

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கங்க ளென்கூட
வெளியினில் வாருங்கள் காணும்

*அநுபல்லவி*

நாசி நிரம்பவு மயிர்தா—னிரண்டுகால்
நடுவினு மொருகூடை மயிர்தான்
ரோசங் கெடுவார்க ளென்கடை மயிர்தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

*சரணங்கள்*

1. படிக்கும் படிநடக்கப் படிக்காலோ பிகள்மோட்சப்
பதமற்றுப் போனாலும் போகட்டும்—அவர்
முடிக்கு முடிதரித்து முடிய முடியவாழ்ந்து
முடிந்துமுடி போனாலும் போகட்டும்—இன்னும்
குடிக்கக்கஞ் சியுமற்றுக் குண்டிக்குந் துணியற்றுக்
குருடராய்ப் போனாலும் போகட்டும்—என்னை
அடித்தாலு மெலும்பெல்லா மொடித்தாலு மவர்க்கஞ்சேன்
அடித்தா லடித்துக்கொண்டு போகட்டும்—அந்தக்

கெடுவார்க ளென்கடை மயிர்தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

2. மடையரெல் லாங்கூடிக் கூத்தாடிக் கூத்தாடி
வையாளி போட்டாலும் போடட்டும்—இன்னும்
விடிய விடியவும் பரத்தையர் மடிகளில்
விளையாடி னும்விளை யாடட்டும்—கள்ளுக்
குடியரெல் லாங்கள்ளைக் குடித்துக் குடித்தவர்கள்
குடிகெட்டுப் போனாலும் போகட்டும்—ஞானம்
படியாரெல் லாமென்னைப் பழித்துப் பழித்துக்கொண்டு
பகைத்தாற் பகைத்துக்கொண்டு சாகட்டும்—அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

3. நெடுமரம் போலோங்கி வளர்ந்துமறி வற்றவர்
நெருப்புண்ணப் போனாலும் போகட்டும்—அவர்
இடுகுட்டிச் சுவரைப்போ லிருந்தென்ன விறந்தென்ன
எப்படிப் போனாலும் போகட்டும்—இன்னும்
கொடும்பு மிடும்புவம்புங் குடிகேடுங் குடிகொண்டு
கூத்தாடி னாலுங்கூத் தாடட்டும்—என்னை
மடியிற்கை போட்டிழுத் தலகினா லடிபோட்டு
மல்லாடி னாலுமல் லாடட்டும்—அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

4. கடிநாய்க்குட் டிகளனா படுசுட்டி கள்மாயைக்
கதவிடுக் கினிற்பட்டே சாகட்டும்—புலிக்
கடுவாய்க்குங் கொடிதான படுபோக் கிறிகள் சும்மா
கடுநர கில்விழுந்த வேகட்டும்—சுற்றக்
கெடுபூண்டா கமுளைத்த கொடுமாடு பிடுங்கிகள்
கெடுபூண்டு களாய்த்தானே போட்டும்—இன்னும்
நெடுமரம் போற்கொத்த மடவொப்பாக் குடிக்கிகள்
நெடுமரம் போற்றானே யாகட்டும்—அந்தம்

கெடுவார்க ளென்கடை மயிர் தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

★★★

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

சாகாமற் செத்திருக்குஞ் சற்குருவின் குணங்குடியைச்
சார்ந்தோ மாகிற்
சாகாமற் செத்திருக்குஞ் சாயுச்ய பதந்தருஞ்சாட்
சாதி யார்க்குஞ்
சாகாமற் செத்திருக்குந் தன்மயத்தோர்க் குற்றபெருந்
தகையுங் காட்டுஞ்
சாகாமற் செத்திருக்கு முத்தியுஞ்சித் தித்திடுங்காண்
தனக்குந் தானே.

## 21

*இராகம்-பரிசு: தாளம்-ஆதி*

*பல்லவி*

போவோங் குணங்குடிக்கெல் லோரும்—புறப்படுங்கள்
போவோங் குணங்குடிக்கெல் லோரும்

*அநுபல்லவி*

பாவங்கள் சோர்ந்திடுங் காய்ந்திடு நீந்திடும்
மாய்ந்திடு மோய்ந்திடுந் தீய்ந்திடு மிக்ஷணம் (போவோம்)

*சரணங்கள்*

1. அண்டபுவ னங்கொண்ட நிட்டை—சாதிக்கவறியா
முண்டம் முழுதும்பட்ட கட்டை—மணித்தேரோடு
தண்டிகையா னைகுதிரை யொட்டை—வைத்தேறி வாழுங்
சண்டி யுடலொட லொட்டை—மின்னார்களின்பங்

கொண்டு மயக்கிக்காம வெட்டை—நஞ்சுண்டுசாமி
ரண்டுங்கெட் டவுனேபேய் மட்டை—அவனுக்கந்தத்
தொண்டாசை கால்ரண்டுந்தான் குட்டை விழிகுருடர்
நண்டளந்த நாழியவர் நமக்கேன்கா ணந்தத்
தெட்டை (போவோம்)

2. கோத்திரளான காயபொய்க் கூடு—ஒருவருக்குஞ்
சாற்றுக்காகா நாற்றக்கரு வாடு—சொரிமலமு
மூத்திரமு மூற்றிவைத்த வோடு—இடுமடையர்
போற்றுதற் கேற்றசண்டி மாடு—உயிர்விடுக்குங்
கூற்றுவன்கை யாயுதத்திற் கீடு—எந்தெந்தத்திக்கிற்
பார்த்தாலும் பீறலுள்ள வீடு—சமைத்தெடுத்த
சோற்றாற் குவித்துவைத்த மேடு—இவையறியார்
ஏற்றபடி கெட்டலைவ ரேனமக்கு மந்தக் கேடு
(போவோம்)

3. செட்டுசெய்ய வேண்டிய தில்லை—பரதேசிகள்
சட்டி யெடுப்பதுவுந் தொல்லை பிச்சைக் கஞ்சிக்குத்
திட்டமுடன் வேணுமோ கல்லை—உறங்குதற்குக்
குட்டிச் சுவர்களிலுண் டெல்லை—ஈடுநமக்குப்
பட்டினத் திலேவரு மில்லை—அறிவுகெட்ட
மட்டியறி யானிந்தச் சொல்லை—மனக்குரங்கைக்
கட்டிவைத்தா லுங்காட்டும் பல்லை—அதைப்பிடித்த
துட்டமா மாயைப்பசாசைத் துரத்தித்துரத்திக் கொல்ல
(போவோம்)

4. சோமனுத யம்பாடு சாயும்—எழுஞ்சூரியன்
நாயமில்லாமலறத தேயும்—பரவெளியில்
நேம முடன்சுழினை யாயும்—மதியமிர்த
வாம மடைதிறந்து பாயும்—தத்வாதியோடு
காமக் குரோதங்களைத் தீயும்—தீயாதுயோக
பூமி விளையுமரு ணேயம்—விளைந்தபோகம்

நாமோகைக் கொள்ளும்படி ஞாயம்—கிடைப்பதற்குச்
சாமுன்செத்த சற்குருபாதம் சார்ந்திருப்பது வேயுபாயம்
(போவோம்)

5. நொங்கும் நுரையுமாகப் பொங்கும்—காமக்கடலுள்
முங்கும் பாவியுடலைச் சொங்கும்—சொறிசிரங்கும்
வங்கும் நமநமென்று திங்கும்—நரம்புந்தோலுந்
தொங்கு மினுமினுப்பு மங்கும்—இல்லந்துறந்த
சிங்கங்கட் கில்லைகாணும் பங்கம்—மேனியுயர்ந்த
தங்கமய மாநின்றி லங்கும்—அவர்கட்கன்றோ
தங்குஞ்சா யுச்யபதந் தங்கும்—நமக்குமதிற்
பங்குந் தந்துதவிப் பராபரமரு ளிரங்கும்(போவோம்)

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

ஐயன்குணங் குடியானை யன்றிவே றுண்டென்று
ளாய்ந்து பார்த்தேன்
ஐயன்குணங் குடியானை யன்றிவே றொன்றுமென்னு
ளாயக் காணேன்
ஐயன்குணங் குடியானே யானேயென் றறிந்தபின்யென்
னறிவாய் நின்ற
ஐயன்குணங் குடியானே யதிமோகத் திருநடனம்
ஆடு வானே

## 22

*இராகம்-தோடி; தாளம்-சாப்பு*

*பல்லவி*

அதிமோகத் திருநடனம் புரிந்தாளெங்கள்
ஐயன் குணங்குடியான்.

### அநுபல்லவி

அதிமோகத் திருநடனம் புரிந்தானையன்
ஆர்க்குந்தெரி யாதென்றன் மூக்குமுனைக் குமேனின்று (அதி)

### சரணங்கள்

1. கஞ்சினி களைப்போலுங் காலிற் சதங்கைதொட்டுக்
கானின்மயில் போனின்று களித்து நடனமிட்டு
வஞ்சியர்க் காளாக்க வருமூவா சையைவிட்டு
வஞ்சநம னைக்காலா லுதைத்தொரு காண்மட்டு
மடித்துக்கொன் டெனைக்கையிற் பிடித்துக்கொண்டருள்முறை
படித்துக்கொன் டுளத்தன்பு துடித்துக்கொண்டு (அதி)

2. முத்திக் கெதிர்நின்ற முச்சுடரும்பம் பரமாட
மோகமணி மாலைபொன் முலைமேற்பின் னலுமாட
வகுத்தபரஞ் சோதிநின் றருகிற்பாய்ந்து பந்தாட
வாலையம் பிகைகாலை மடித்து நடனமாட
வடித்துக்கொன் டமிதத்தைக் குடித்துக்கொன் டானந்தம்
படித்துக்கொன் டடிக்கடி நடித்துக்கொண்டு (அதி)

3. பஞ்சரிக்கும் பலமறைகள் தாளங்கள் போடப்
பரிபூ ணானந்தம் படிந்துமத் தளம்போடக்
கொஞ்சுமன வாசியுங் கொஞ்சிவையா ளிகள்போடக்
கோலா கலங்கள்பாடிக் கூத்துமேற் கூத்துகள் போடக்
குதித்துக்கொன் டவன்றன்னை மதித்துக்கொன் டருடன்னைப்
பதித்துக்கொன் டெனைவாழ்த்தித் துதித்துக்கொண்டு (அதி)

4. கலச நிறையமிர்த கதிருமிழ் மதிப்பாலை
கலகலென வேபூட்டிக் களைதீர்க்க மணிமாலை
மலைபோ லெழுந்துவந்து மகிழ்ந்திந்தப் பயன்மேலே
மாறாக் கருணைவைத்து வைத்துத்தலை மேற்காலை
மடித்துக்கொண்ட வன்பல்லை கடித்துக்கொன் டெமன் கையை
ஒடித்துக்கொன் டுமெய்த்தவம் முடித்துக்கொண்டு (அதி)

# 23. ஆனந்தக் களிப்பு - 2

குணங்குடி மஸ்தான் சாகிபு பாடியவற்றுள் இது இறுதிப் பாடல்போல் தோன்றுகிறது.

இதில் பலவிடங்களில் யோகம் பற்றியும் அதனால் கிடைக்கும் பலன்கள் பற்றியும் இறையொளி தோன்றுவது பற்றியும் பாடுகிறார்.

தன் நெஞ்சை ஒரு பெண்ணாக விளித்து, 'எங்கள் குணங்குடியானே - நமக்கின்று மருள் புரிவானடிமானே' என்ற பல்லவியுடன் பாடத் தொடங்குகிறார் மஸ்தான் சாகிபு.

## ஆனந்தக்களிப்பு - 2

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

எங்கள்குணங் குடியானே யென்னரும்பே ரருளாய்நின்
நிலங்கை யாலே
எங்கள்குணங் குடியானே யென்னரும்பே ரருளேயென்
நிறைஞ்ச வேண்டும்
எங்கள்குணங் குடியானே யென்னரும்பே ரருளேயென்
நிறைஞ்சி நின்றால்
எங்கள்குணங் குடியானே யென்னரும்பே ரருளாய்நின்
நிரங்கு வானே.

***

எங்கள் குணங்குடி யானே—நமக்
கின்னு மருள்புரி வானடி மானே (எங்கள்)

1. அத்து விதப்பொருள் காப்பாம்—எனக்கு
ஆனந்த மான பராபரங் காப்பாம்

காத்த வியத்தருள் காப்பாம்—என்று
காட்டத்தன் காரணங் காப்பரு ளித்தான் (எங்கள்)

2. முத்தரெல் லாரையும் போற்றாய்—தவ
மோன நிலைக்குரு நாதனைப் போற்றாய்
சித்தரெல் லாரையும் போற்றாய்
சிறக்குந்தன் போற்றுத லேயரு ளித்தான் (எங்கள்)

3. கட்டுப் படாவச்சு மட்டங்—காலைக்
கட்ட அறியாரைக் காலினால் வெட்டும்
வெட்டிய கால்களை வெட்டும்—என்று
வேகத் துடனே விதித்தரு ளித்தான் (எங்கள்)

4. மூலப் பிராணனை நோக்கும்—நோக்கின்
முத்தியின் வீடுமக் கேவந்து சாய்க்கும்
வாலப் பிராயமும் வாய்க்கும்—என்று
வாசியி னேற்ற மகிழ்ந்தரு ளித்தான் (எங்கள்)

5. பன்னிரு கால்வெளி மானே—வெளி
பாயாம லுள்ளே மடக்கிடத் தானே
சென்னியி லூறுஞ்செந் தேனே—என்று
சிந்தவைத் துக்கட்டித் தந்தரு ளித்தான் (எங்கள்)

6. தேபி மானத்தை வெல்லும்—யோக
தீட்சைபெற் றோர்க்கு மனமதிற் செல்லும்
மோதி போகத்தை வெல்லும்—என்று
முற்றச்செய் தேமுழு தும்மரு ளித்தான் (எங்கள்)

7. ஆழ் கலையைக் குறைக்கும்—ஆறாம்
அங்கணக் கோபுர வாயில் திறக்கும்
பாழ் மதிப்பால் சுரக்கும்—என்று
படிக்குப் படியேறும் படிக்கரு ளித்தான் (எங்கள்)

8. மூலக் கனலினை மூட்டும்—ஒளி
மூக்கு முனையிற் திருநடங் காட்டும்

பாலக் கறந்துனக் சுவட்டும்—என்று
பட்சம்வைத் தென்னைப் படைத்தரு ளித்தான் (எங்கள்)

9. கண்டங் குடத்திவைத் தேற்றும்—இன்னும்
காரணமான கடவுளைப் போற்றும்
மண்டி யமிர்தத்தைத் தேற்றும்—என்று
மாசி லுபதேசம் வைத்ரு ளித்தான் (எங்கள்)

10. கற்பமுறைகையிற் காட்டும்—வருங்
காலரைக் காலா லுதைத்துவிட் டோட்டும்
அற்ப வுடற்கமு தூட்டும்—என்றும்
ஆசைபூ ட்டிப்பூட்டி யாண்டரு ளித்தான் (எங்கள்)

11. ஓங்கார தீட்சையுஞ் சொல்லும்—நாளும்
உன்றனைக் கொல்லு மனந்தனைக் கொல்லும்
ஆங்காரத் தன்னையும் வெல்லும்—என்றும்
ஆதரித் தாதரித் தாண்டரு ளித்தான் (எங்கள்)

12. நீங்காது யோகமும் வாய்க்கும்—தீப
நெற்றிக்கண் மத்தியில் வைத்தொளி யாக்கும்
தூங்காத தூக்கமுந் தூங்கும்—என்று
தூண்டித் தூண்டிமுச் சுடரரு ளித்தான் (எங்கள்)

13. பாங்கான ஞானம் படைக்கும்—ஐந்து
பாழ்ப்புல வேடரைப் பல்லை யுடைக்கும்
தாங்காத மையல் கிடைக்கும்—என்று
சாதுரியமாய்த் தடுத்துரு ளித்தான் (எங்கள்)

14. மேலூரு வெட்டியைக் கூடும்—கூடி
மேலைமுச் சந்தியில் வையாளி போடும்
காலாறிக் கொள்ளவு நாடும்—என்று
காட்டாமற் காட்டிக் கணித்தரு ளித்தான் (எங்கள்)

15. வஞ்சிய ராசையை விள்ளும்—விழி
மாயா மயக்கத்தை விண்ணென்று தள்ளும்

கொஞ்சிக் குதிரைமேற் கொள்ளும்—என்று
கோபத்தைக் காட்டிக் குணமரு ளித்தான் (எங்கள்)

16. பாலைப் புசித்திட வேண்டும்—என்
பராபர முன்றன் பார்வைக்குத் தோன்றும்
காலைப் பிடித்திட மீண்டும்—என்று
கள்ளத் தனமாய்க் கதியரு ளித்தான் (எங்கள்)

17. தூலத்தை யுங்கெட்டி யாக்கும்—பின்பு
சூட்சத்தைக் காண மிகவெளி தாக்கும்
ஞாலததை யும்விட்டு நீக்கும்—என்று
ஞாயமொப் பித்து நவின்றரு ளித்தான் (எங்கள்)

18. முண்டங் கென்றுப தேசம்—ஓதும்
முன்காலினதாங் கலீரென்றும் பேசும்
கண்டங் கடக்கவுங் கூசும்—என்று
கண்டங் கடக்குங் கணக்கரு ளித்தான் (எங்கள்)

19. தங்குதல் தம்பித்த லாகும்—நின்று
தங்காது கும்பித்தல் ரேசித்த லாகும்
பொங்குதல் பூரித்த லாகும்—என்று
பூசை முறையும் புகன்றரு ளித்தான் (எங்கள்)

20. முப்பாழ் முடிந்ததும் பத்தி—அந்த
மூன்றுக்கு முந்தி நடந்தது சித்தி
அப்பாழ் விடிந்தது வெற்றி—என்றே
யாரு மறியாஅறிவரு ளித்தான் (எங்கள்)

21. பொற்பிரபை போலொளி பூணும்—அதிற்
பொல்லாத காய மிறந்திடுங் காணும்
செப்புதற் கும்மனம் நாணும்—என்று
செப்பித் திருத்திச் சிரித்தரு ளித்தான் (எங்கள்)

22. சோம்பலுந் தூக்கமும் நீக்கும்—போது
சுகமது கொள்ளவும் போகாம லாக்கும்

பாம்பான பெண்ணாசை போக்கும்—என்று
பாவி முகத்தையும் பார்த்தருளித்தான் (எங்கள்)

23. ஓங்கார வீடு கிடைக்கும்—அதன்
ஒன்பது வாயிலு மொக்க அடைக்கும்
தேங்காயுங் கல்லை யுடைக்கும்—என்றும்
தேங்காய் தனைத்தின்னும் பாங்கருளித்தான் (எங்கள்)

❊ ❊ ❊



